தமிழ் வாழ்க

# தென்றல்

கி.மு. - கி.பி 1990 வரை

புதிய தமிழ் இலக்கணம்

## III

## இலக்கியப் படலம்

பாவலரேறு ச. பாலசுந்தரம்

தாமரை வெளியீட்டகம்

367, மேலவீதி, தஞ்சாவூர் - 613 009.

© முதற்பதிப்பு நவம்பர் — 1991

## காணிக்கை

இந்நூல் உருவாக அருளாசி வழங்கிப் போற்றிவரும் வாளமர்கோட்டை தவத்திரு கரந்தையா சுவாமி அவர்கட்கும் பரிவோடு ஊக்கி அன்பு காட்டிவரும் சென்னை முத்தமிழ் ஆய்வுமன்றத்தலைவர் தமிழ்த்தொண்டர் திரு. கோ. முத்துப்பிள்ளையவர்கட்கும் பல்துறை அறிஞர் திரு. ஏ. கே. வேலன் அவர்கட்கும் தமிழில் புதிய இலக்கண நூல் படைக்க முயன்றுவரும் பைந்தமிழ் அறிஞர்கட்கும் இதனைப் பணிவொடு காணிக்கையாக்குகின்றேன்.

விலை ரூ. 32/-

ஜெமினி அச்சகம்
மேலவீதி, தஞ்சாவூர் - 613 009.

# வாழ்த்துரை

**வாளமர்கோட்டை, தவத்திரு. காத்தையர் சுவாமிகள்**

தொல்காப்பியம் முழுதுக்கும் அரியதொரு ஆராய்ச்சிக் காண்டிகையுரை எழுதித்தமிழன்னையின் திருவருளைப் பூரணமாகப் பெற்றுள்ள பாவலரேறு பாலசுந்தரம் "தென்னூல்" என்னும் இனிய புதிய இலக்கணநூல் ஒன்றைப் படைத்துள்ளார். இதன் தேவை என்ன என்று யான் கேட்டபோது தொல்காப்பியக் காண்டிகையுரையின் நுட்பங்களை யாவரும் புரிந்து கொள்ளவும், இன்றைய வழக்குத் தமிழ் நிலையை வரையறை செய்துணரவும், இன்று பயின்றுவரும் புதிய இலக்கியங்களின் வரன்முறைகளைத் தொகுத்து அறிந்து கொள்ளவும், தமிழில் புதிய இலக்கணநூல் தோன்றவில்லை என்னும் குறையை ஓரளவு போக்கவும், எளிய நடையில் இதனைச் செய்ததாகக் கூறினார். திருவருள் துணையின்றி இத்தகையதொரு நூலை இயற்றுதல் எளிதன்று. இந்நூல் மாணவர்களுக்கேயன்றித் தமிழறிஞர் யாவர்க்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. காலத்தால் இப்படியொரு நூலை செய்து தந்துள்ள புலவர் பாலசுந்தரம் ஸ்ரீசவுந்தரநாயகி சமேத சுந்தரேசர் திருவருளால் பல்லாண்டுவளத்தோடு வாழ்ந்து மேலும் பல தமிழ்ப்பணிகள் புரிந்து சிறக்க வாழ்த்துகிறேன். வாழ்க! இந்நூல் என்றும் நின்று நிலவுக! தமிழ் வாழ்க!

வாளமர்கோட்டை
30—11—91

**காத்தையா. சுவாமிகள்**

# வாழ்த்துரை

**முத்தமிழ் ஆய்வுமன்றத் தலைவர்**
**தமிழ்த்தொண்டர், ஆட்சிமொழி அறிஞர்**
**திரு கோ. முத்துப்பிள்ளை, பி.ஏ., சென்னை.**

*தென்னூல் பலவும் கற்றுணர்ந்த பேராசிரியர் பாவலரேறு பாலசுந்தரனார் ஆழ்ந்த புலமைத்திறம் வாய்ந்த அக்காலப்புலவர்களின் இக்கால எடுத்துக் காட்டாக இலங்குபவர். பல்காப்பியம் கற்ற அவர் தொல்காப்பியமே வெல்காப்பியம் என்னும் கருத் துடையவர். தொல்காப்பியக் கடலில் குளித்து நாளும் புதிய முத்துக்களை எடுத்து வருபவர். தொல்காப்பியப் பேரொளியாகத் திகழ்பவர்.*

*புதிய காலத்திற்குப் புதிய இலக்கணம் தேவை என்னும் கருத்துப் பரவலாக இருந்து வருகின்றது. அதனை முழுமையாக நிறைவு செய்யும் வகையில் தொன்னெறி வழுவாது நன்னெறி கூறும் "தென்னூல்" என்னும் தேந்தமிழ் நூலை இயற்றி வழங்குகிறார். இனிக்கும் இயல்புடையது இலக்கணம். அதனைக் கசக்கும் வேம்பாகக் கருதுவாருமுண்டு. அத்தகைய கசக்கும் வேம்பையும் சுவைக்கும் சொட்டுக்களாகத் திரட்டித் தருபவர் பாவலரேறு ஆவார்.*

*தென்னாட்டார் மொழிநலத்தை எந்நாட்டவரும் எளிதின் உணர அரியதொரு நூலைப்படைத்துத் தமிழ்த் தாயின் திருவுளம் மகிழச் செய்யும் பெரும்புலவர் பல்லாண்டு எல்லா நலமும் பெற்றுத் தொடர்ந்து முத்தமிழ்ப் பணியாற்ற இறையருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன். வாழ்க!*

அன்பன்
**கோ. முத்துப்பிள்ளை.**

சென்னை
20—11—91

# FOREWORD

Not many take to Grammar kindlily. Antiphanes of Macedonia bitterly shouted thus, centuries ago: "Idly curious race of grammarians, Ye who dig up by the roots the poetry of others ... away with you, bugs that bite secretly the eloquent."

When Voltaire urged Frederick the Great to write more grammatically than Louis IV, Frederick asserted his sovereignty and said: "Caeser is above grammar."

However in India that is Bharat, Grammar is ever the subject and object of veneration. The great Vyasa imposed a law concerning poesy which is called "Maha-chhanda maha-anupraas" (great metre, great alliteration). In fact, dissolution of grammar "Chhanda mukta" (freedom of metre / prosody) is equated with the very dissolution of the worlds.

The Tamils are a religious race and for them their language is "divine knowledge". Saint Paranjyoti calls Tamil "Mutthamizh Vedam". The Saint feels supremely joyous that the triple-eyed Siva was pleased to take a seat amidst the Sankam poets to investigate into the greatness of Tamil. He ecstatically affirms the glory of the Tamil Grammar when he, in the form of a rhetorical question, says thus:

"Mannidaicchila ilakkana Varampilaa mozhi pol
Yennidaippata Kitantataa Yennavum patumo?"

If Tamil is what it is, it is owing to the blessing of Tolkaappiyar, the saintly grammarian.

No language can do without grammar. It is grammar which sustains a language, its grace, grandeur and greatness. Decadenee notwithstanding, the tribe of grammarians will flourish and to these martinets we owe a no mean debt.

Paavalar Balasundaram, even as a babe-in-arms, lisped the rules of grammar and puzzled the pundits. He is blessed with a faculty for acute analysis which is *rarely to be met with*. He is a thinker of a very superior order. By his patient research in which he persevered relentlessly over the decades, he discovered that even the great commentators of the Tolkaappiyam have missed the message of the work. The omissions and commissions of these exegetists that were suffered to pass muster, hold the field to-day, ushering, in the process, into existence, a fen fraught with miasmata. The Tolkaapiyam is to-day a much-misunderstood work. Sorely aggrieved by this sordid plight, our Paavalar went about fulling and cleansing the age-old dust and dirt that had tenaciously gathered around the great work. He reinterpreted the work afresh in the pure light of logic as well as reason and produced his " Tolkaappiyam : Aaraaicchi-k-Kaandikaiurai ". This comes to us like a welcome and gentle gale, suaveolent and salubrious. This work is bound to wring recognition from unwilling hands, by and by. This may, however, take a century or two.

It is to his ' Tennool ' I am asked to contribute a foreword. I am to deal with its ' Ilakkiyappatalam ' only. TENNOOL ! What a beautiful name ! The title refers to, at once a beautiful work and a work in the southern

tongue which is Tamil. The Patalam on Illakiyam relates to the Porul Atikaaram. 'Ezhutthu' and 'Sol' are but the bud and the blossom. It is 'porul' which is the toothsome fruit.

Taking into account the variform vicissitudes that had visited the Tamil Letters during the past two millennia and also envisioning those that are to manifest in the future, our Paavalar has produced his Tennool, an opus of his tapas. The content of the Porul Atikaaram, is explicated in an extraordinarily exhaustive way and all genres are highlighted in the correct perspective. Seven hundred and thirtynine are the Sutras of the Ilakkiyappatalam that sing their way into the bosom of the devotee-reader. A long-felt need is ably supplied by our Paavalar who alone can indite a work of this nature and stature

I am not drawing the long bow when I say that this work is a masterpiece. Its sutra form in current idiom enthuses the lover of grammar to pore over it for hours on end and rise up eventually a wiser man. The present-day Tamils are singularly fortunate as they are blessed with a work the type of which can appear only once in a millennium.

Beloved Tamils! The sun shines; it is upto you to make hay.

Second day of Kaartikai,
Prajorppathi,
Thanjavur.

Sekkizhaar Adi-p-Podi
**T. N. Ramachandran**

# அணிந்துரை

**பேராசிரியர், டாக்டர் தமிழண்ணல், மதுரை**

'தமிழ் முழுதறிந்த தகைமையாளர்' எனல் சங்கச் சால்பு. இன்று தமிழ் மிகப் பரந்து விரிந்து கிடப்பினும், அதன் அடிப்படைகளையும் மரபுகளையும் வழிவழி வந்த வளர்ச்சி நிலைகளையும் ஊற்றுற்றறிந்த கற்றறிவாளர் பலர் இருக்கவே காண்கின்றோம். அத்தகைய சால்புடைச் சான்றோருள் **பாவலரேறு தஞ்சை ச. பாலசுந்தரனார்** ஒருவரெனில் மிகையாகாது. இலக்கியப் புலமை நிறைவுறவும் இலக்கணப் புலமை ஆழமுறவும் பெற்றுத் திகழும் இந்நற்றமிழ் வாணர், நாடகக் காப்பியம், கட்டுரை, தொல்காப்பியவுரை, கவிதை எனத் தமிழ்த் தாய்க்கு அயராதுழைத்துப் பூட்டிய அணிநலன்கள் பலவாகும். **இப்புதிய தமிழ் இலக்கண நூல்** அவற்றுள் ஒன்றாகும்.

தமிழுக்கு இலக்கிய வரலாறு, மொழிவரலாறு போல, இலக்கண வரலாறு ஒன்று தனிப்பட விரிவாக எழுதுமளவு இலக்கண நூல்கள் காலந்தோறும் தோன்றிவந்துள்ளன. முன்னையோர் நூலின் முடிவு ஒருங்கு ஒத்துப், பின்னையோர் வேண்டும் விகற்பமும் வளர்ச்சியும் காட்டிப் பனுவல் எழுதுவது தமிழ் மரபாகும். இந்நெறி தழுவியே இவ்விலக்கியப் படைப்பும் அமைந்திருக்கக் காண்கின்றோம். இவற்றுள் அகம், புறம், மரபியல் பற்றியன சங்க இலக்கியத்திற்கே பெரிதும் பொருந்துவனவாம். அக்கால இலக்கியத்திற்கு, அன்றே தோன்றியதும் நிலைபேறுடையதுமான தொல்காப்பியம் இருக்கவும், பிற்காலச் சிற்றிலக்கண நூலார் சிற்சில வேறுபாடு தழுவிப் புதுநூல் யாத்தது போல், இவரும் இந்நூலைப் படைக்க முயன்றுள்ளார். தொல்காப்பியத்திற்குத் திட்பநுட்பமுள்ள இலக்கணப் புத்துரை ஒன்று வழங்கியவராதலின், இவர்தம் அகப்புற இலக்கணம் தொல்காப்பியம் தழுவியே அமைகிறது. இஃது தேவைதானா என்ற வினாவும் எழவே செய்கிறது.

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப.* (1434)

என்பது தொல்காப்பியம். இந்நூலுள்

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்து*
*மறைமொழி யாவும் மந்திரம் என்ப.* (434)

என இடம் பெறும் நூற்பா அதனை ஒட்டியே அமைதலால் குழப்பம் ஏற்பட வாய்ப்புளது. முன்னோர் மொழியைப் பொன்னே போல் போற்றும் நன்னூலாசான் போல், சூத்திரத்தை மாற்றாது எடுத்தாண்டிருக்கக் கூடும். * மேலும் பல இடங்களில் தெளிவும் விளக்கமும் கிடைப்பதால், இந்நூல் பயனுடையதாகிறது எனலாம். ஆயினும் அவற்றை உரைநடை வடிவில், தெளிவுறத் தந்து மேற்கோள் நிரம்பத் தந்து, ஆங்கில இலக்கண நூல்கள்போல் ஆக்கி இருக்கலாம் என்ற எண்ணம் அடிக்கடி எழுகிறது. பழம் மரபு தழுவியவை தவிர்த்த, புதிய இலக்கணப் பாங்குடைய பகுதியே இந்நூலுட் பெரும் பகுதியாகும். தொடர்ச்சியும் முழுமையும் கருதியே, ஆசிரியர் இங்ஙனம் பழமையும் புதுமையும் ஒன்று விடாது இந்நூலை யாத்துள்ளார் எனக் கருத வேண்டியுளது.

## பாயிரவியல்

இந்நூற் பாயிரம் புதிய படைப்பிலக்கியம் பிறஇலக்கியம் அனைத்திற்கும் வரன்முறை காட்ட முனைகிறது. இன்று கணத்திற்குக் கணம் தோன்றி மறைவன போலும் இலக்கியத்தை இவர் 'நிலைபெறா இலக்கியம்' என வகைப்படுத்துகிறார். மொழிபெயர்ப்பு இலக்கியத்திற்கு இவர் தரும் இலக்கணம் சாலச் சிறந்ததாகவுளது. இவரது நூற்பா நடை நெகிழ்வும் இனிமையும் உடையதாய், எளிதில் பொருள் விளக்கி, உய்த்துணர்வின்றியே உணரத்தக்கதாய்த் திகழ்தல் இந்நூற்குத் தனிச்சிறப்பு நல்குகிறது. இதன்கண் அமைந்த ஒவ்வொரு தொடரும், ஒரு வரன்முறையைத் (Definition) தருவதாய் அமைந்து இலங்குதல் கற்றுணரத் தக்கதாகும். எவ்வளவு தெளியக் கற்றவரேயாயினும் இந்நூற்கும் பிற்காலத்தில் உரையும் விளக்கமும் மேற்கோளும் தேவைப்படுமென்றே தோற்றுகிறது. 'உயிர்ப்பமை மொழி பெயர்ப் பிலக்கணம் என்ப' என்று இவர் முடிக்கும்போது,

---

* நிறைமொழி மாந்தர் எனவும் கிளந்த (கிளக்கப்பெற்றனவாகிய) எனவும் வந்துள்ளமையான் 'மறைமொழி' என்னும் பன்மை (விரவு)ப்பெயர் தானே என்னும் ஒருமையைச்சுட்டும் அசையிடைச் சொல்லொடு இயையாமையான் பாடம் பிறழ்ந்திருக்க வேண்டுமென்று கருதியும் .மந்திரம் பலவகையினவாதலின் அவற்றைச் சுட்டி அடக்குதல் வேண்டியும் எனதுநூலுள் 'யாவும்' என அமைத்துக்கொண்டேன. நன்னூலாரும் செயப்படுபொருளைச் செய்ததுபோலத் தொழிறபடக்கிளத்தலும் வழக்கியல் மரபே (தொல்-சொல்-வினை-49) என்றதனை 'வழக்கினுள் உரித்தே' (நன்-பொது-49)எனமாற்றிக் கொண்டுளார் (நன்னூலார் திருத்தம் பிழைபாடுடையது)

மொழிபெயர்ப்பு உயிர்ப்புடையதாக இருக்கவேண்டும் என்ற முத்திரையைப் பதித்து விடுகின்றார். இதைப்போல் பல இடங்கள் இந்நூலுட் காணல் கூடும்.

## யாப்பியல்

இவரது யாப்பியல் புதுமைகள் பல கொண்டுளது. இக்காலத் திற்கேற்ப 'வடிவம்' 'புனைதல்' பற்றியெல்லாம் இலக்கணம் வகுத்துச்செல்கின்றார்.

இயற்பா இசைப்பாட்டு உரைப்பா காவியம்
சிற்றிலக் கியம்உரை நூலொடு சிறுகதை
புதினம் நாடகம் கட்டுரை ஆய்வுரை
ஆயவற் றின்வகை இலக்கிய வடிவாம் (288)

என்பர் இவர். இப்பன்னிரண்டு வடிவங்களுள் இவர் உரைப்பா எனப் புதுக்கவிதைக்கும் மின்னற்கவிதை என ஹைகூ கவிதைக்கும் இலக்கணம் சொல்லியுள்ளார். சந்தப்பாவிற்கும் இசைப் பாட்டிற்கும் இவர் சந்தக்குறியீடுமுதல் விகற்பம் உள்ளிட்ட அனைத்திலக்கணமும் கூறியுள்ளார். இவர் வகுத்துள்ள இசைப்பா இயல், இசைத்தமிழ்ப் பாவகை, நூல்வகைகளாகத் தனித்துப் பிரித்துக்காட்டி விரிவான இலக்கணம் தருகிறது. இயற்பா, இசைப்பா வேறுபாடின்றி ஓதப்பட்டு வந்த குழப்பம் இந்நூலுள் நீக்கப்படுகிறது. திருவாசகப் பாவகைகள், நாட்டுறப் பாவகைகட்கு இங்கே இலக்கணம் உண்மை அறிகிறோம். தேவாரப் பாவகைட்கு இதில் விரிவான இலக்கணம் உளது. நாடகப் பாவகைகட்கும் இலக்கண வரன்முறை தந்துள்ளார். பழைய வரிப்பாட்டு, புதிய சிந்துவகை யாவற்றுக்கும் மிகமிகத் தொகுத்துரைக்கப்படும் இலக்கணம் உண்மையான் இந்நூல் பிறநூல்களிலும் பெரிதும் வேறுபடுகிறது. இவர் புதுக்கவித்தைக்கு இலக்கணம் இல்லை என்பாரும் மருளுமாறு, மரபு வழியில் இலக்கணங்கண்டு இயம்பியுள்ளார். இதைக்கண்டு, இலக்கணத் தளையை உடைத்துப்புறப்பட்டவர்களும், தமக்கெனவும் இனங்காட்டத்தக்க வரன்முறைகள் உளவெனக் கண்டு நயப்புறுமாறு இவ்வியலமைந்துளது.

அங்கதம் பிசியெனும் நெறியான் இடியெனத்
தாக்கமும் மின்போல் பளிச்செனும உணர்ச்சியும்
நீர்வீழ்ச் சியைப்போல் கருத்துப் பாய்ச்சலும்
தீப்போல் உறைப்பும் தோன்றப் பல்வகை
முன்னமொடு கிளப்பது புதுப்பாவாகும்... (524)

எனுமிவர் இலக்கணம் அவ்வகைப் பாவலரும் மறுக்க வொண்ணாத நல்லிலக்கணமாகக் காணப்படுகிறது.

## புதிய இலக்கணம்

நூலியல் எனத் தனியே பிரித்து, இலக்கண நூல்கட்கான இலக்கணம் ஓதப்படுகிறது. புராணவியல், கதைபொதி பாடலியல் சிற்றிலக்கியவியல் என இவர் தனித்தனி பிரித்து விளக்கம் தருதலில் தெளிவும் சீர்மையும் மிக்குக் காணப்படுகிறது. செய்யுள் மாலை இயல் எனத் தொகுத்துளதனைத்தும் எண்ணிக்கை அடிப்படையுடைய, தமிழ்நூல் வகைகளாகும்.

இவர் '**மழலையர் இலக்கியம்**' எனக் குழந்தை இலக்கியத் திற்குப் பெயரிட்டு, இலக்கணம் கூறியிருப்பது, இவர்தம் நுண்மாண் நுழைபுலத்திற்குத் தக்கசான்றாகும்.

பார்த்துப் பழகிடும் கைவினைப் பொருள்கள்
மனைச்சிறு விலங்குகள் வளப்பமை பறவைகள்
பற்பல விளையாட்டுப் பொருள்பரி கரிமா
நெருங்கிய உறவுகள் மருங்குபணி யாளர்
இயற்கைக் காட்சிகள் எளியநற் பண்புகள்
மேற்கொளத் தக்க மெல்லிய கடமைகள்
ஆன்றோர் அறிமுகம் அன்னபிற பற்றி
அழகுணர்வு அறிவியற் சிந்தனை முளைவிடும்
அசைந்தா டல்கை வீசி நடத்தல்
கைம்மலர் ஒற்றிக் களித்துவிளை யாடற்கு
இயைந்த இன்னிசை தாளமொடு பொருந்தப்
பிறபரு வத்தரும் சுவைக்கும் முறையான்
குறைவறப் புனைதல் குழவிப் பருவத்து
இளையவர் மழலையர் இலக்கியம் என்ப. (597)

நம் நாட்டில் குழந்தை இலக்கியம் உண்மையில் குழந்தைகளே பாடும், குழந்தைகட்குமட்டுமே யுரிய பாடல்களாக அமையவில்லை. சிறுபான்மையே குழந்தை இலக்கியம் எனத் தகுதியுடையதாம். அதிலும் மழலையர் மட்டுமே பாடி வளரத் தக்க மழலையர் பாடல்கள் மிகமிகக் குறைவு. இந்நிலையில் மழலையர் இலக்கியம் எனப் பெயரிட்டெழுதிய இவ்விலக்கணம் காலத்தோடு சாலப் பொருத்தமுடையதாகும். இந்நூலுள்வரும் சிறுகதையியலும் புதினஇயலும் நாடகவிலக்கிய இயலும்,

கட்டுரை இயலும் முற்றும் புதுமைதழுவி, மேலைநாட்டார் மரபுகளுக்கேற்பவும் நமது தமிழில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிக் கேற்பவும் இலக்கணம் வகுத்துரைக்கின்றன. இவற்றை அவ்வவ் வகை பற்றிய புதிய வரன்முறைகளுடன் ஒப்பிட்டு நோக்குவார் வியப்படையுமாறு, **பாவலரேறு** அவர்கள் இலக்கணம் படைத்துள்ளார். வளர் தமிழ் இலக்கியத்திற்கு, வளரும் இலக்கணமொன்று படைத்துத் தந்துள்ளமை **பாவலரேறு பாலசுந்தரனாரின்** திண்ணிய எண்ணத்தையும் தெளிந்த புலமையையுமே வெளிப்படுத்துகிறது, **புதிய தமிழ் இலக்கணமும் வேண்டும் — புதிய தமிழுக்கும் இலக்கணம் வேண்டும்.** இந்நூல் இவ்விரண்டையும் ஒருவாற்றான் நிறைவு செய்தலால் இந்நூலினைத் தமிழர் அனைவரும் வாழ்த்தி வரவேற்றல் வேண்டும். புதிய இலக்கணப் பகுதிகள் பாடநூல்களில் இடம்பெறத்தக்கன. இந்நூலுட் காணும் சிற்சில புதிய வரன்முறைகள், தனித்தனிக் கட்டுரைகளாக விரித்து விளக்கத்தக்கன.

காலந்தோறும் மொழி புதுமை பூணுகிறது. இலக்கியமும் காலந்தோறும் தன்னைப் புதுப்பித்துக் கொள்கிறது. அதனால் அகரமுதலியும் இலக்கணமும் நூற்றாண்டுதோறும் மட்டும் அல்லாமல், ஒவ்வொரு கால்நூற்றாண்டுக்கும் ஒருமுறை புதுப்பித்துக் கொண்டிருக்க வேண்டியவை ஆகும். இவ்விரண்டிலும் பல்கலைக் கழகங்கள் முனைதல்வேண்டும். இந் நன்னோக்கத்தை நிறைவேற்றுமுகத்தான், தனிஒருவராக அரும்பாடுபட்டு, புதிய இலக்கணம் இதனை வடித்துத்தந்த பண்பாளர் பாவலரேறு பாலசுந்தரனார்க்கு என் வாழ்த்தும் பாராட்டும் வணக்கமும் என்றும் உரிய. அவர்தம் புலமைச்செல்வம் தமிழுக்கு அரண் செய்வதாகுக ! செயல் நோக்கம் உடையவர்க்கெல்லாம் இச் செழுந்தமிழ் இலக்கணம் வழிகாட்டியாயமைந்து மின்னுக ! தமிழ் நிலைபெறுக ! !

ஏரகம் 384, சதாசிவநகர்
மதுரை - 625 020

தமிழண்ணல்

# ஆய்வுரை முன்னுரை

**பண்டித, வித்துவான் தி. வே. கோபாலையர்** எம். ஏ.,
**புதுச்சேரி**

எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் அறிவதன்பயன் இலக்கியச் சுவை கோடலும் இலக்கியம் படைத்தலுமாதலின் அறமுதல் நான்கும் திறமுறப்பயக்கும் இலக்கியம் படைத் தற்கெழுமாணாக்கர்க்கு அறிதற்பாலவாகும் படைப்பிலக்கிய நெறி களைப் பன்னூல்பயின்ற செந்நாப்புலமையும் நுண்ணிதின் ஆய்ந்து பல்துறைச்செய்திகளை நிரல்படத் தொகுத்துரைக்கும் நுண்ணறிவும் சான்ற நம் பெரும்புலவர் பாலசுந்தரனார் இப்படலத்துள் பத்துவகையழகும் பாங்குற அமையப்பெற்ற நூற்பாக்கள் பலவற்றால் பலவும் வல்லார் நயக்குமாறும் ஒரு சில வல்லார் வியக்குமாறும் தெரிவிக்கின்றார்.

இதன்கண் காணப்படும் இசைப்பாஇயல் இவருடைய இசையறிவினை நுவல்வதாகும். சிறுகதைஇயல், புதினஇயல், நாடக இலக்கிய இயல், கட்டுரைஇயல், திறனாய்வுக்கட்டுரை இயல், ஒப்பியல், ஆய்வுக்கட்டுரையியல், ஒழிபியல் என்பன இவர் தமிழகத்தில் இன்றுவரை புதியனவாகப் போந்துள்ள பலவகை இலக்கியங்களையும் கூர்ந்துநோக்கி அவைபற்றிய பல்துறைச் செய்திகளையும் அறுதியிட்டு உள்ளத்து முடிவுசெய்த பாங்கினை யும் இவற்றை நுண்ணிதின் உணர அவர்மேற்கொண்ட பல்லாண்டைய முயற்சியினையும் இயம்புவனவாம். இலக்கியப் படலத்தின் சிறப்பியல்புகளை ஒருசிறு முன்னுரையில் முற்றத் தெரிக்க முற்படுதல் எம்மனோர்க்கு இயலுவது ஒன்றன்று. எனினும் ஒரு சிலவற்றையாதல் சுட்டிச் செல்லும் கடப்பாடுடையேன்.

பண்டையோர் உரைத்த இலக்கியப்பாங்கினை ஓர்ந்து அதன் வழிப் புதிய சிந்தனைக்கு ஏற்றவடிவில் இலக்கியம் அமைத்தல் போல்வன இலக்கியம் பற்றிய இலக்கணப்பயன் என்பது தொடக்கத்திலேயே பேசப்படுகிறது. இலக்கியத்தின் பயன் 'அறத்தொடுபட்ட இன்பமும் எழுச்சியும் எண்ணமும் எழிலும்' என்பது விளக்கப்பட்டுள்ளது.

நாயன்மார் ஆழ்வார் போன்ற அருளாளர்களுடைய அருளிச் செயல்கள் உணர்வியல் இலக்கியத்துள் அடங்குமாறும் சங்க

சாத்திரங்கள் மெய்யியல் இலக்கியத்தில் அடங்குமாறும் சுட்டப் படுகின்றன. இன்றையஇலக்கியம் பலவற்றையும் நோக்கிய பட்டறிவுகொண்டு இவ்வாசிரியர் நிலைபெறா இலக்கியம்பற்றி,

" உறுபொருள் கருதியும் ஒருசில பேர்தம்
உளங்களி கூரவும் காலச் சூழலான்
வளரும் சிக்கலைப் போக்க உணர்வைத்
தூண்டவும் மானுட வாழ்விற்கு ஏலாக்
கற்பனைச் செய்திகள் அறிவியற்கு ஒவ்வா
அற்புத நிகழ்ச்சிகள் ... ... ... ... ...
உலகியல் வழக்கிற்கு ஒவ்வாப் பொய்ம்மலி
செயற்கைக் கற்பனை படைத்துச் செய்நவும்
அன்னபிறவும் அவ்வப் பொழுதின்
பீடுற மலர்ந்துபின் வாடி யுதிரும்
மணமில் மலர்போல் மன்னா என்ப "

என்றுவரைந்துள்ள நூற்பாவை நோக்குக.

மொழிபெயர்ப்பு முறையில் மூலமொழிப்புலவன் முன்னிய பயன்சுவை எழுப்பும் உணர்ச்சி யாப்பியல் தேர்ந்து அதைப் பெயர்க்கும் மொழியியல்மரபு அதன் முன்னோர் பயின்ற வழிதனி கடைப்பிடித்து நயமுற விளக்கி வரைதலே உயிர்ப்பமை மொழி பெயர்ப்பு இலக்கியம் என்பதனைவலியுறுத்திக் கூறுகிறார்.

ஈரேழ் திணையியல் பெரும்பாலும் தொல்காப்பியத்தையும் சிறுபான்மை பிற்பட்ட பொருளிலக்கண நூல்களையும் பண்டை இலக்கியங்களையும் உளங்கொண்டு கற்பவர் தெளிவுகருதிச் சற்றுப் புதுமையாக நிரல்பட அமைத்து யாக்கப்பட்டதாகும், இதன்கண்

" அகமும் புறமும் மாசற மக்கள்
புகழ்வர மெய்யுணர்ந் தொழுகுதல் அறமாம்
பல்வகைப் பொருளையும் ஆக்கல் தொகுத்தல்
அழித்தல் அரசமைத்து இயங்குதல் பொருளாம்
ஆடவர் பெண்டிர் அமைந்த காதலொடு
கூடியும் ஊடியும் குடிவழி பெருக்கிப்
பீடுறல் இன்பமாம் யான் எனதென்னும்
செருக்கொழித் துலகப் பற்றறல் வீடே " [நூ-81] என

நாற்பொருளும் தொடக்கத்தில் விளக்கிக்கூறப்பட்டுள்ளன.

தலைவனும் தலைவியும் பாலதாணையான்
அன்பொடு பொருந்தி ஒழுகும் ஒழுக்கம்
புகர் உரிப் பொருட்கமை அகனைந் திணையாம் (நூ-46)

காமஞ் சாலா இளமையோள் வயின்
சொல்லெதிர் பெறாஅது தானே மகிழ்தலும்
காதல் சான்றவள் காதல் மறுப்பினும்
தனதாற் றாமையைச் சொல்லி யிரத்தலும்
பாலது ஆணைகொள் காட்சி யிடத்துக்
குறிப்பறி காறும் குறுகாது நின்று
குறிப்புரை ஆற்றலும் பகைவரை வென்று அவர்
மகளிரை மணத்தலும் கடவுளர் பாங்கிற்
காதல் கொண் டுரைத்தலும் கைக்கிளை என்ப (நூ - 48)

பிறப்பு முதலாயவை ஒவ்வா துளத்திற்
காதல் மேவாக் காம வேட்கையான்
தகவினைக் கடந்து தழுவுபுல் லொழுக்கமும்
அடியோர் வினைவலர் முடியா ஒழுக்கமும்
மடன்மா ஊர்தலும் மன்றத்துப் புலம்பலும்
உடற்குறை யுற்றோர் முடமண ஒழுக்கமும்
அறந்தப நனி நிகழ் பெருந்திணை என்ப (நூ-49)

என்று கைக்கிளை பெருந்திணை ஒழுக்கங்களை விளக்கும் இவ்வாசிரியர் பண்டைய உரையாளர்கள் உரைக்கும் எண்வகை மன்றல்களை விடுத்து, திருமண மன்றல், நறுமண மன்றல், கடிமண மன்றல், முறைமண மன்றல், தெய்வமண மன்றல், அருமண மன்றல், பெருமண மன்றல், சிறுமண மன்றல் என ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணைகளுக்கு ஏற்ப எண்வகை மன்றல் களை அமைத்து அவற்றை விளக்கியுள்ள புதுமைத்திறம் (நூ-77) சுவைத்து இன்புறத்தக்கது. அலர்வெளிப்பாடு வெறியாட்டு, அறத்தொடுநிற்றல் என்பன நன்கு விளக்கப் பட்டுள்ளன. (நூ. 88-90) நாற்பாற் பிரிவு புறத்திணைக்கும் திணை நிலைப் பெயர்களே அகத்திணைக்கும் உரியன என்ற செய்தி (நூ. 117-19) நன்கு உறுதி செய்யப்பட்டுள்ளது.

சுவையியல் : தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் அழகிய முன்னுரையோடு இலங்குவதாகும். அணியியல் உவமவியலை யும் தண்டியலங்காரம் முதலிய பின்னூல்களையும் அடியொற்றி அமைந்ததாகும்.

குணவணி, சொல்லணி, பொருளணி என்பனயாவை என்பது தொடக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது (நூ-179) குணவணி தொல்காப்பியம் குறிப்பிடும் எண்வகை வனப்பின் பாற்படும் (நூ.178) நலமிகு சிறப்பின் பொருளணி 30 அந்தாதி, இரட்டை, அளபெடை, முரண்தொடை, நிரல்நிறை, தீவகம், பின்வருநிலை என்பன சொற்றொடர்பற்றிய பொருளணி (நூ. 176) சிறப்பில்லா அணிகள் இவை என்பது(நூ. 216) என்பன விளக்கப்பட்டுள்ளன. உவமஅணியின் இலக்கணம் தொல்காப்பியக் கருத்துக்களைத் தொகுத்து மிகச்சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

வடநூலார் கூறும் தொனிக் கருத்து (நூ - 217) சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பொருள் மரபியல் தொல்காப்பிய மரபியலிற் கூறப்படும் நூல்மரபு நீங்கலாக ஏனைய முற்பகுதிகளை உட்கொண்டு சொற்சுருக்கமாக அமைக்கப்பட்டுள்ளது. யாப்பியல் தொல்காப்பியம், பின்னூல்கள் இவற்றை உட்கொண்டு அமைந்ததாகும். இவ்வியலில் மாத்திரை, எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, நோக்கு, ஓசை, வண்ணம் என்பவை இயம்பப்படுகின்றன. நேர்பு நிரைபு அசைகள் பற்றிய செய்திகள் ஒரோவழி குறிக்கப்பட்டுள்ளது. (நூ - 304, 305) நேர்நிரைக்கு உரிய சந்தம் (நூ-297) தனிக்குறில் நேரசை தவிர்ந்த ஈரசை உறழ்ச்சிச்சந்தம் 12, நிரைநிரை உறழ்ச்சி 16. நேர்நிரை உறழ்ச்சிச் சந்தம் 12 நிரைநேர் உறழ்ச்சிச் சந்தம் 18 ஆகியவை எடுத்தியம்பப்பட்டுள்ளமை இவ்வியாப்பியலின் தனிச்சிறப்பாகும் (நூ. 309-312) சந்தத்தையே மனங்கொண்டு பாடல் இயற்றும் புதுக்கவிஞர்கட்கு இது மிக உதவியாகும் சொற்சீரடிபற்றிய விளக்கம் சிறப்பானது (நூ. 331) வழித்தொடை என்பதன் விளக்கம் தரப்பட்டுள்ளது (நூ. 340) வண்ணத்து இலக்கணம் கூறப்பட்டுள்ளது. (நூ. 349).

தொல்காப்பியம் கூறும் வண்ணங்களில் அகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ணம் என்பன நீக்கப்பெற்று அவற்றின் இடத்தில் அடுக்கல் வண்ணமும் நீரலை வண்ணமும் கொள்ளப்பட்டுள்ளன. வண்ணம் தனித்து வருதல் சிறப்பு என்ற செய்தி (நூ. 371) கூறப்பட்டுள்ளது. அடுத்து ஆளத்தி வண்ணம் சந்தக்குழிப்பில் சிலமரபு சந்த அமைப்பு என்பன இடம்பெற்றுள்ளன. வனப்பினுள் இயைபு, இழைபு என்பனவற்றிற்குத்தாம் தொல்காப்பியத்துள் வரைந்துள்ள உரையை விளக்குவனவாக நூற்பாக்களை அமைத்துள்ளார் (நூ. 382, 384)

**இயற்பாஇயலில் :** வெண்பா, அகவல் கலி, வஞ்சி மருட்பா என்பவை விளக்கப்பட்டுள்ளன. வெண்கலிப்பாவும் கலிவெண்பாவும் ஒன்று என்ற கருத்துக் காணப்படுகின்றது (நூ-414) கொச்சக ஒருபோகு அம்போதரங்க ஒருபோகு உறழ்கலி என்பன தொல்காப்பியத்தை ஒட்டிக் கூறப்பட்டுள்ளன. இவற்றை அடுத்து வீரசோழியம் குறிப்பிடும் குறள் சிந்து திரிபாதி வெண்பா, திலதம், விருத்தம் சவலை அவற்றின் போலி என்பன விளக்கப் பட்டுள்ளன. (நூ - 426 - 27)

அடுத்து, பாடலில் செய்திகள் வெளிப்படையானும் குறிப்பானும் விளக்கப்படும் திறமும் அங்கதம், பிசி, மந்திரம் என்பனவும் விளக்கப்பட்டுள்ளன (நூ. 428-34) பாஇனம் தோன்றியவரலாறு இயம்பப்படுகிறது (நூ. 435) பிறன் கோட்கூறலாக வடமொழிச் சந்தம் விருத்தம் தண்டகம் என்பன கூறப்படுகின்றன (நூ. 453- 56)

இசைப்பாஇயலில் இசை துணையாக இயலாற் சிறப்பவை இயலும் இசையும் சமனாப் பிறப்பவை என்ற இருதிறப்பாடல் களும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. தேவாரத்தின் யாப்பு விளக்கப்பட்டுள்ளது. (நூ-464) தமிழிசை வல்லார்க்கு 67 நூற்பாக்களைக் கொண்ட இவ்இயல் சிறந்த விருந்தாக அமைவது. பத்தாம் வகுப்பு உரைப்பாவாகும் இதன்கண் செறிவுடைச் சொற்களான் கவிதைக் கருப்பொருள் தேர்ந்து தெளிவும் சுருக்கமும் திகழும் உத்தியொடு ஓசை அடிதொடை சீர்வரைவு இன்றி அணிநலம் பொதிய நுகர்வோர் துணிதற் கரியதொரு பொருட்புணர்ப்பும் அங்கதம் பிசி என்னும் நெறியான் இடியெனத் தாக்கமும் மின்போல் பளிச்செனும் உணர்ச்சியும் நீர்வீழ்ச்சியைப் போல் கருத்துப்பாய்ச்சலும் தீப்போல் உறைப்பும் தோன்றப் பல்வகை முன்னமொடு கிளக்கும் புதுப்பா அடங்கும் என்று கூறிப் (நூ-524) புதுப்பாக்களின் கருப்பொருள்களும் புதுப்பாவின் படிவம் முதலியன கூறும் ஆசிரியர் புதுக்கவிதை விளைதற்குரிய சில காரணங்களை நுணித்துக் கூறியுள்ள திறம் பாராட்டற்குரியது. (நூ-532)

உரையியலில் பலதிறப்படும் உரைகளும் இயம்பப்பட்டுள்ளன நூலியலில் இலட்சணம் இலக்கணம் வேறுவேறு பொருளுடையன என்பது விளக்கப்பட்டுள்ளது. உருவாகவும் அருவாகவும் அமைந்துள்ள இருதிணைப்பொருள்களின் வடிவு, உரு, செயல், பயன் தோற்றம், இறுதி என்னும் இயல்பினை உள்ளவாறு இயம்புதல் இலட்சணம் எனப்படும் இத்தன்மையமைந்த இப்பொருள்

இவ்வாறு இருத்தல் வேண்டும் என்று விதிப்பது இலக்கணம் வழக்கினுள் இலட்சணம் இலக்கணம் என்ற இருவேறு சொற்களும் ஒருபொருளில் வழங்குதலும் உண்டு (நூ. 597-98) நூலியலில் நூல்உரை உத்தி முதலியன பண்டைய மரபு பற்றி இயம்பப் பட்டுள்ளன.

காவியஇயலில் தொகுப்புக்காவியம், படைப்புக்காவியம் பெருங்காப்பியம் என்பவை விரித்துரைக்கப்பட்டுள்ளன. சிற்றிலக் கியங்களில் மழலையர் இலக்கியம் உருவகஇலக்கியம் என்பன குறித்துணரத்தக்கன (நூ. 597, 98) செய்யுள் மாலையியலில் பல்வகைச் சிறுபிரபந்தப் பட்டியலைக் காணலாம். ஏனைய இயல்கள் இக்காலப்பன்னூல் கருத்துக்களை உள்ளடக்கி அமைந்துள்ளன.

இலக்கண ஆசிரியன் "இருவகை வழக்கினும் சொல்லின், வடிவும் நிகழும் நிலையும், திசைவழக்கு ஆக்கமும் அயல்மொழிக் கலப்பும் தாக்கமும் பயிலும் பல்வகை இலக்கியப்பாங்கும் தன்மொழியின் முதல்வழி சார்பு எதிர் நூல்நெறிப்புலமையும் பன்னூற்பயிற்சியும் அளவை நூலறிவும் கவிதைச்சிந்தையும் காப்பியப்புலமையும் இசைநாடகத்துறை இலக்கண அறிவும் சுவை அணி தேர்ச்சியும் பல்கலை நோக்கும் நவையறநிறைதலும் நடுவுநின்றாய்தலும் செய்முறைத் தெளிவும் உடையனாய் அமைதல் வேண்டும்" என்று நம் ஆசிரியர் கூறிய அனைத்தும் அவர்பால் நவையற விளங்கலின் இவ்இலக்கியப்படலம் வடநூலார் குறிப்பிடும் நியாயம் பற்றிய நூற்பாவொடு நிறைவாக அமைந்து ஆசிரியருடைய பெரும்புலமைக்கு எடுத்துக்காட்டு நூலாகத் திகழ்கிறது ஆசிரியர் பல்லாண்டுவாழ்ந்து தமிழ்பணியைத் தொடர இறைவன் திருவருளை வேண்டுகிறேன்

அன்பன்,

***தி. வே. கோபாலையன்***

# என்னுரை

தொல்காப்பிய மரபுப்படி இம்மூன்றாவது படலம் பொருட் படலம் என அமைதல் வேண்டும், இது தொல்காப்பிய முறைமையினின்று சிறிது வேறு மட்டதாகலின் இலக்கியப்படலம் எனப்பட்டது. தொல்காப்பியம் அகமும் புறமும் பற்றிய, தமிழ் மொழிக்கே உரித்தான மரபு பற்றி இயற்றமிழ் இலக்கியக் கோட்பாடுகளை உணர்ந்து கொள்ளும் கருத்தில் யாக்கப்பெற்ற தாகும். இது தமிழ்மரபு சான்ற பண்டைய இலக்கியங்களோடு வடமொழி—மேலையாரிய இற்றை மரபுகளையும் இசைத்தமிழ் நாடகத்தமிழின்கண் அமையும் இயற்றமிழ் மரபுகளையும் உள்ளடக்கிப் படைப்பு நெறிக்கு முதன்மைதந்து யாக்கப்பட்ட தாகும்.

சங்க இலக்கியங்களையும் சிலப்பதிகாரம் முதலியவற்றையும் முழுமையாக உணர்தற்குத் தொல்காப்பியமே சாலுமாயினும் அதன்வழி நின்று உணர்வோர் மிகச்சிலரே. காரணம் தொல் காப்பியத்தின் பண்டைய உரைகள் பெரும்பான்மையும் தமிழ் நெறிக்கு முரணாகவும், குழப்பத்தை விளைவிப்பதாகவும் அமைந்து விட்டமையேயாகும்.

எனவே தொல்காப்பியமும் பிற இடைக்கால இலக்கண நூல் களும் இற்றைக்கு வழக்கில் உளவாயினும் அவற்றைத் தனித்தனி பயின்று தெளியும் வருத்தம் நோக்கி அவற்றின் சாறமான கருத்துக் களை எளிய முறையில் சுட்டி விளக்குவது பயன் தரும் என்று கருதி வழி நூல் மரபை ஒட்டி அகத்திணை புறத்திணை களவு கற்பு பொருள்மரபு அணி முதலியவற்றையும் சிற்றிலக்கிய மரபுகளையும் பற்றிய இலக்கண நெறி முறைமுகள் கூறியது கூறலாக வன்றி ஞாபகங்கூறல் என்னும் நூற்புணர்ப்பு முறையான் அமைக்கலானேன்.

அயல்மொழித் தாக்கத்தினால் விளைந்து வளரும் புதிய இலக்கியங்களாகிய சிறுகதை புதினம் புதுப்பா கட்டுரை திறனாய்வுக் கட்டுரை முதலியவற்றின் கோட்பாடுகளை இன்றைய வழக்குமுறையில் உரைநடையிற் கூறுதற்கு ஒவ்வுமாயினும் தமிழ் மரபு நோக்கி நூற்பாயாப்பு முறையில் இலக்கணம் கூறியதன் நோக்கம் பல்வகை உத்திகளும் இலேசுகளும் பற்றிக் காலந்தொறும் விரித்துரைப்பதற்கு வாய்ப்பாகும் என்று கருதியமையேயாகும்.

தொல்காப்பியத்தில் செப்பலோசை முதலிய தூக்கோசையான் வரும் வெண்பா முதலிய இயற்றமிழ்ப் பாக்களுக்கும் — தேவ பாணி — பண்ணத்தி பரிபாட்டு முதலியவாகப் பண்ணிசை தழுவி வரும் இயற்றமிழ்ப் பாக்களுக்கும், தொல்காப்பியத்துள் நுட்பமாக இலக்கணம் கூறப்பட்டிருப்பதை ஊன்றி நோக்காமல் ஒருவகை

மடைதிருப்பும் குறிக்கோளொடு இடைக்காலத்து இயற்றப்பட்ட யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை முதலாய யாப்புநூல்கள் இசைகலந்தும் அதனொடு ஒத்துக் (தாளம்) கலந்தும் வரும் செய்யுள் பற்றியமரபுகளை அறியாது அவற்றை நால்வகைப் பாக்களுக்கும் உரிமைசெய்து தாழிசை துறை விருத்தம் என அடக்கி இலக்கணம் வகுத்துச்சென்றன. அதனான் பாவுக்கும் பாட்டுக்கும் சிறிய வேறுபாடுகளை உணர வியலாமற்போயிற்று. தொல்காப்பிய நெறி பின்பற்றபடாமையான் நேர்ந்த தமிழ் இலக்கிய வீழ்ச்சிகளுள் இப்பகுதி தலையாயதாகும்.

அவற்றை ஓரளவேனும் சுட்டியுணர்த்த வேண்டுமென்னும் கடப்பாட்டினால் பாவகையுள் இசைப்பா என்பதனைத் தனியே பிரித்தும் இயற்றமிழ்ப்பா, இசைத்தமிழ்ப்பா, தமிழிசைப்பா இயலும் இசையும் ஒரொப்பக் கலந்த இசைத்தமிழ்ப்பா எனவகை செய்தும் அவை பற்றிய இலக்கியங்களைச்சுட்டி அவற்றிற்கு மரபாக அமைந்துவரும் இலக்கணநெறி பற்றி அறிந்தவரை வரைந்தேன். அப்பகுதிகள் மேலும் விரிவாக ஆராய்ந்து செய்யப்படவேண்டியவையாகும்.

இனி, புதியனபுகுதலாக வந்த சிறுகதை புதினம் நாடகம் திறனாய்வுக் கட்டுரை முதலியவை பற்றி அமைந்துள்ள இலக்கண நெறிமுறைகள் யாவும் முற்ற முடிந்தவை என்பது என் கருத்தன்று. அம்முறையில் இலக்கணநூல்கள் வருதற்கு ஒரு தூண்டுதல் மட்டுமே. அவற்றிற்கு எடுத்துக்காட்டுக்கள் மேற் கோள்கள் தந்து விளக்கின் அளவிறந்து நிறைவாக விரிந்து பயன்தரும் என்பதில் ஐயமில்லை.

ஆக அம்முறைமையான் படைப்பிலக்கிய வகையாவற்றையும் உள்ளடக்கிப் படைப்பாசிரியன் இலக்கணமும் தோன்ற இருபத்து நான்கு இயல்களாக வகுத்து எழுதினேன். வழிநூல் மரபை ஒட்டி முன்னையோர் இலக்கணச் சூத்திரங்கள் சிலவற்றை ஆசிரிய வசனமாக ஏற்றேன். அவற்றுள் சிலவற்றின் பாடங்களை அந் நூலாசிரியர் கருத்து இவ்வாறாகத்தான் இருத்தல் வேண்டும் என்று கருதி மாற்றிக் கொண்டேன் (தொல் காப்பியத்தில் ஏடெழுதினோராலும் உரையாசிரியர்களாலும் மாறிய பாடங்கள் பல சில இடைச் செருகல்கள்)

தொல்லோர் யாப்பிலக்கணம் எளியதாயினும் அதனைக் கூறும் முறை சிக்கலாக அமைந்துவிட்டமையின் சிலரான் புறக்கணிக்கப்படுவதை நோக்கிச் சீர்தளைகளைச் சந்தக்குழிப்பு முறையில் அமைத்துக்காட்டலானேன். அணி இலக்கணத்தை இடைக்கால மரபை ஒட்டிச்சிறிது மாற்றத் தொடு குறிப்பிட்டேன் சொற்பொருள் ஆய்வுக்குப் பயன்தரும் என்ற முறையில் பொருள்

மரபியலை தானெடுத்து மொழிதலாக அமைத்தேன். நாட்டுப்புற இலக்கியங்களை இசைப்பா இயலுள் சிலதலைப்புள்ளும், கதை பொதி பாடல் இயலிலும் சிற்றிலக்கிய இயலுள் சிலதலைப்புள்ளும் அமைந்துள்ளேன்.

சிறுகதை முதலாய புத்திலக்கிய வடிவங்களுக்கு கூறிய இலக்கணம் முற்ற முடிந்தவையன்று. மேலும் விளக்கப்படும் முறையில் அமைந்தவையாகும். இவற்றிற்கு விரிவான விளக்கமும் எடுத்துக்காட்டும் இறையருள்நேரின் பின்னர் எழுதப்பெறும் இப்பெரும் பணியில் இச்சிறியேனை ஈடுபடுத்தி இவ்வளவில் வெளிவரச் செய்யும் இறைவனது பேரருளைச் சிந்தித்து வணங்கி மகிழ்கிறேன்.

## நன்றியுரை

தொல்காப்பிய ஆராய்ச்சிக் காண்டிகையுரை எழுத ஆசி புரிந்து இத்தென்னூலுக்கும் நல்லதொரு வாழ்த்துரை வழங்கியருளி யுள்ள தவத்திரு காத்தையா சுவாமிகள் அவர்களுக்கும், என்பால் பேரன்பு பூண்டு பல்லாற்றானும் ஊக்கமளித்து அன்புகனிந்த தொரு வாழ்த்துரை வழங்கியுள்ள பெருந்தகை, தமிழவேள் உமாமகேசுவரனாரைப் பின்பற்றிச் சென்னையில் முத்தமிழ் ஆய்வு மன்றத்தை நிறுவி நற்பணியாற்றிவரும் ஆட்சிமொழியறிஞர் தமிழ்த் தொண்டர் திரு கோ. முத்துப்பிள்ளை அவர்கட்கும் ஆங்கிலத்தில் ஓர் இனிய செறிவான முன்னுரையை வழங்கியுள்ள உழுவலன்பர் சேக்கிழார் அடிப்பொடி திரு தி. ந. இராமச்சந்திரன் அவர்கட்கும் தமது பல அலுவல்களுக்கிடையே இவ்விலக்கியப் படலத்தை நன்குநோக்கி அழகான ஆர்வம் ததும்பும் ஓர் அணிந்துரை வழங்கியுள்ள கெழுதகை நண்பர் டாக்டர் தமிழண்ணல் அவர் களுக்கும் தொல்காப்பிய உரையை ஆழ்ந்து நோக்கிக் நிறைகுறை சுட்டியாங்கே இத்தென்னூலையும் ஊன்றி நோக்கிப் பயனுள்ள தொரு ஆய்வு முன்னுரையளித்து உடன்பிறப்பொக்க உதவி வரும் கெழுதகையன்பர் பண்டித வித்துவான் திரு தி.வே. கோபாலையர் அவர்கட்கும், இதனை அன்புடன் அச்சிட்டு உதவியுள்ள பேராசிரியர் திரு பு. நா. இராமச்சந்திரன் அவர்கட்கும் என்றென்றும் நன்றியுடையேன். இப்பணியை இவ்வளவில் நிறை வேற்ற அருள்புரிந்த இறைவன் திருவடிகளைப் போற்றி வணங்குகின்றேன்.

வணக்கம், வாழ்க தமிழ்!

தஞ்சாவூர்.
14—12—91.

அன்பன்,
ச. பாலசுந்தரம்.

# பிழை திருத்தம்

| பக்கம் | பா-வ | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 11 | 1 7 | படைப்பிபிலக் | படைப்பிலக் |
| | | பகருவன் | பகருவென் |
| 15 | 25 : 6 | முறைப்படுத் | முறைப்படுத் |
| 17 | 30 : 5 | மரயொடு | மரயொடும் |
| 18 | 33 : 14 | ஏற்பாடு | எற்பாடு |
| 18 | 40 : 2 | பொழுதும் | பொழுது |
| 19 | 40 : 11 | ஒழுக்கமும் | ஒழுக்கம் |
| 20 | 43 : 1 | அடைகல் | அடைகடல் |
| 21 | 46 : 3 | முத்துறுத்த | முந்துறுத்த |
| 21 | 48 : 3 | நெஞ்நொடு | நெஞ்சொடு |
| 21 | 49 : 1 | லாயனா | லாயன |
| 21 | 49 : 3 | லொழுக்கம் | லொழுக்கமும் |
| 24 | 57 : 2 | படுவ்திய | படுத்திய |
| 24 | 59 : 2 | அகுமதில் | அருமதில் |
| 24 | 59 : 4 | உழிஞை | உழிஞை |
| 25 | 62 : 4 | தடிதலும் | தபுதலும் |
| 26 | 65 : 2 | சுளவழி | கள்வழி |
| 27 | 67 : 11 | சுாஞ்சியும் | காஞ்சியும் |
| 28 | 69 : 5 | மூன்றையுப் | மூன்றையும் |
| 29 | 76 : 5 | நோக்லான் | நோக்கலான் |
| 30 | 77 : 10 | வழக்கெடு | வழக்கொடு |
| 30 | 77 : 11 | தெய்வண | தெய்வமண |
| 35 | 105 : 3 | களவினனிற் | களவினிற் |
| 35 | 106 : 5 | தனைவன் | தலைவன் |
| 37 | 113 : 2 | பரத்தமை | பரத்தைதமை |
| 37 | 113 : 4 | பரத்தைந் | பரத்தை |
| 38 | 117 : 9 | வாணிகா | வாணிகர் |
| 38 | 120 : 1 | தெரிந்த | தெரிந்த |
| 42 | 149 : 8 | கிழக்திய | கிழந்திய |
| 43 | 154 : 10 | பயில்வேரர் | பயில்வோர் |
| 43 | 154 : 12 | பாடனெ | பாடென |
| 44 | 158 : 1 | பின்னணணிக் | பின்னணிக் |
| 45 | 165 . 2 | தருயம் | தருநயம் |
| 45 | 165 : 6 | இவ்வலி | இல்வலி |
| 46 | 166 : 9 | உறுயெர் | உறுபெயர் |
| 47 | 169 : 1 | பொருந்தினைப் | பெருந்திணைப் |

| பக்கம் | நூற்பா | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 47 | 171 : 6 | தன்னை அறி | தன் அறி |
| 48 | 175 : 9 | பகழ்ச்சி | புகழ்ச்சி |
| 48 | 178 : 1 | சிறப்போ | சிறப்பே |
| 51 | 195 : 1 | பழிஉலகு | புழிஉலகு |
| 54 | 218 : 4 | ஒளிசித் | ஔசித் |
| 56 | 238 | புல்லாய்க் | புல்வாய்க் |
| 56 | 242 | மெய்பரே | பெயரே |
| 57 | 259 : 1 | யாடுரை | யாடுமரை |
| 58 | 263 : 3 | த்தை | தத்தை |
| 60 | 287 : 3 | எருத்தசை | எழுத்தசை |
| 61 | 295 : 3 | அவையெனப் | அசையெனப் |
| 61 | 299 : 2 | பெடைடதனித் | பெடை தனித் |
| 61 | 300 : 1 | பெரருள்வயின் | பொருள்வயின் |
| 62 | 308 : 1 | நேர்புதைநிரையுடனும் | நேர்புநிரைபுடனும் |
| 63 | 309 : 5 | ஈரசை | நேரசை |
| 63 | 315 : 2 | நறம்பூ | நறும்பூ |
| 65 | 322 : 7 | யத்துளை | யத்தளை |
| 65 | 323 : 4 | கலித்தனை | கலித்தளை |
| 66 | 335 : 1 | முதமெழுத் | முதலெழுத் |
| 67 | 336 : 9 | சீரம் | சீராம் |
| 68 | 343 : 2 | தூங்திசை | தூங்கிசை |
| 72 | 388 : 2 | விருத்தம்மென் | விருத்தமென் |
| 74 | 408 : 3 | சித்தடி | சிந்தடி |
| 77 | 429 : 2 | ரேழ்தினை | ரேழ்திணை |
| 77 | 435 : 1 | கொக்சக | கொச்சக |
| 77 | 435 : 2 | வடமொழிக் | வடமொழிச் |
| 78 | 443 இன் | ஆசிரியரிப்பா | ஆசிரியப்பா |
| 78 | 444 : 1 | எருந்தடி | எருத்தடி |
| 82 | 465 : 2 | கொச்சசும் | கொச்சகம் |
| 82 | 466 : 5 | புகழ்தும் | புகழ்ந்தும் |
| 82 | 467 : 8 | மொருந்தும் | பொருந்தும் |
| 84 | 477 : 1 | ஈரிண் | ஈசிரண் |
| 85 | 487 : 3 | ஓப்பலும் | ஓப்பலும் |
| 87 | 494 : 2 | குறைத்திறும் | குறைந்திறும் |
| 88 | 494 : 42 | கட்குற் | கட்கும் |
| 88 | 496 : 3 | மத்திரம் | மத்திமம் |
| 88 | 498 : 3 | கிலயைப் | கிளையப் |
| 89 | 505 | நெய்ப்பாடும் | மெய்ப்பாடும் |

| பக்கம் | நூ-வ | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 90 | 508 : 1 | இரக்கம் | இறக்கம் |
| 93 | 524 : 8 | பேற்றிம் | பேற்றம் |
| 93 | 525 : 8 | விளையும் | விலையும் |
| 93 | 525 : 18 | கொர்மும்பதும் | கொழுப்பதும் |
| 95 | 530 : 4 | றாகவுய் | றாகவும் |
| 95 | 532 : 1 | முறுகிய | முருகிய |
| 95 | 532 : 5 | ஏழுமுள | எழுமுள |
| 96 | 538 : 5 | புனைந்தர | புனைந்தவர |
| 99 | 556 : 4 | மன்றொன்று | மற்றொன்று |
| 99 | 558 : 21 | புறவும் | பிறவும் |
| 101 | 565 : 16 | புலனார் | புலவர் |
| 107 | 585 : 12 | தொடுப்பலு | தொடுப்பது |
| 107 | 586 : 9 | யேய்கூ | பேய்கூ |
| 109 | 591 : 17 | மராகக் | மரபாகக் |
| 111 | 599 : 4 | விந்தகந் | வித்தகந் |
| 112 | 601 : 1 | கொடுக்ததொரு | கொடுத்ததொரு |
| 113 | 606 : 8 | தாய்பொழி | தாய்மொழி |
| 113 | 606 : 13 | கியுங்களின் | கியங்களின் |
| 118 | 623 : 5 | மெய்யாய் | பொய்யாய் |
| 119 | 625 : 3 | வைந்தல் | வைத்தல் |
| 120 | 625 : 28 | நடையொடு | னடையொடு |
| 122 | 631 : 3 | யுரைகன | யுரைநன |
| 123 | 632 : 1 | இறற்கைக் | இயற்கைக் |
| 124 | 635 : 11 | வொழக்கத்திற்கு | வொழுக்கத்திற்கு |
| 124 | 636 : 15 | ராட்டாம் | ராட்டம் |
| 125 | 637 : 3 | யாகந் | யாகத் |
| 128 | 653 : 3 | துணிந்தவ் | துணித்தவ் |
| 128 | 653 : 6 | துணிந்துமுற் | துணித்துமுற் |
| 129 | 660 : 10 | விரிக்கியிடந் | விரிக்கிடந் |
| 136 | 683 : 7 | துனாத்தல் | துரைத்தல் |
| 138 | 689 : 2 | இருவகை் | இருவகைக் |
| 139 | 691 : 9 | சல்விப் | கல்விப் |
| 141 | 696 : 10 | கிம்மைப் | இம்மைப் |
| 141 | 696 : 34 | படிந்தறிந் | படித்தறிந் |
| 142 | 697 : 3 | முறற்சி | முயற்சி |
| 143 | 700 : 8 | வாய்பில | வாய்ப்பில |
| 148 | 721ஆம் | ஓம்பிடற்குரிய | ஒப்பிடற்குரிய |
| 154 | 736 : 4 | சொிற்கும் | சொற்கும் |
| 156 | 738 : 15 | கைக்கொல் | கைக்கோல் |

# இலக்கியப்படலம்

## பொருளடக்கம்

நூற்-எண்

## 4. சுவையியல்



## 5. அணியியல்

## 6. பொருள்மரபியல்



## 7. யாப்பியல்

## 8. இயற்பாவியல்

## 9. இசைப்பா இயல்

## 16. சிற்றிலக்கிய இயல்



## 17. செய்யுள்மாலை இயல்



## 18. சிறுகதை இயல்



## 19. புதினவியல் (நாவல்)

## 22. திறனாய்வுக் கட்டுரை இயல்



## 23. ஒப்பியலாய்வுக் கட்டுரையியல்



## 24. ஒழிபியல்

தமிழ்வாழ்க

# தென்னூல்

## III. இலக்கியப்படலம்

### 1. பாயிரவியல்

[தெய்வவணக்கமும் செயப்படுபொருளும்]

1. அகம்புறம் எனத்தமிழ் ஆன்றோர் புகன்ற
புகழ்மிகு மரபொடு புதிதுபுகுந் திலங்கும்
இலக்கிய வழக்கும் புலப்பட நோக்கிச்
செந்தமிழ்த் தெய்வத் திருவடி ஏத்தி
அறமுதல் நான்கும் திறமுறப் பயக்கும்
இலக்கியம் படைத்தற்கு எழுமா ணவர்க்குப்
படைப்பிலக் கியநெறி பகருவன் இனிதே.

[இயல்பகுப்பு]

2. பாயிரம் ஈரேழ் திணையிரு கைகோள்
சுவையணி மரபொடு யாப்பியல், இயற்பா
இசைப்பா உரைப்பா உரைநூல் காப்பியம்
புராணம் கதைபொதி பாடல்சிற் றிலக்கியம்
பாமாலை சிறுகதை புதினம் நாடகம்
கட்டுரை திறனாய்வு ஒப்பியல் ஒழிபென
இருபான் நான்கு பகுதித் ததுவே.

[அவையடக்கம்]

3. அளவறு பரப்புடைக் கலைஇலக் கியத்தின்
வளமுழு தறிந்ததை வரைவேனல்லேன்
களம்புகு மாணவர் கையே டாக
விளம்பினென் விருப்பான் வித்தகச் சான்றோர்
உளம்பொறுத் துறுபொருள் விரித்துணர்த்துகவே.

[இலக்கியத்திற்குரிய இலக்கணப்பயன்]

4. அறிவமை சால்பினர் ஆக்கிய பல்வகை
நெறியமை இலக்கியப் பாங்கினை ஓர்தலும்
அங்ஙனம் இயற்றலும் அவ்வழிப் புதிய
சிந்தனைக்கு உருத்தரும் வடிவொடு செய்ம்முறை
செவ்விதிற் காணலும் கோளுணர்ந் துணர்த்தலும்
இலக்கியம் பற்றிய இலக்கணப் பயனே.

### [இலக்கியம் இது எனல்]

5. உலகுறை மாந்தர் உள்ளொளி மல்க
ஐம்புலத் தின்பம் அறத்தொடு திகழ
உணர்வும் சுவையும் அறிவொடு கமழ
மன்பதை வாழ்வும் பயனும் விளக்கி
இன்பமும் எழுச்சியும் எண்ணத் தமைதியும்
எழிலொடு தருவன இலக்கியம் என்ப.

### [அதன் வகை]

6. அதுவே
இயற்கையும் செயற்கையும் என இருதிறப்படும்.

### [இயற்கை இலக்கியம்]

7. பரந்தநீ ராழியும் விரிந்தகல் வானமும்
நிலவொடு மீனும் உலவுறு வளியும்
பல்கதிர்ப் பருதியும் மல்குறு மழையும்
ஓங்கிய மலைகளும் ஒழுகுபே ராறும்
மலைவீழ் அருவியும் மலர்மலி வாவியும்
பூக்கமழ் பொழிலும் நோக்கமை காடும்
வண்ணப் பறவையும் வயமா இனங்களும்
எண்ணரும் உலகப் பல்லுயிர்ப் பொருள்களும்
பண்ணரும் இயற்கைப் பேரிலக் கியமாம்.

### [இயற்கை இலக்கிய பயன்கொள்ளும்முறை]

8. அகவிழி அஞ்செவி அழகியல் உணர்வொடு
கற்பனை நோக்குடைக் காவியப் புலவோர்
நவையில் சுவைப்புலக் கலைஞர்க் கல்லது
இயற்கை இலக்கியப் பயன்கொளற் கரிதே.

### [செயற்கை இலக்கியம்]

9. செயற்கை இலக்கியம் செப்புங் காலை
பேசா இலக்கியம் பேசும் இலக்கியம்
என இருகூறாய் வனைவுற் றிலங்கும்.

10. பேசா இலக்கியம் பிணக்கறு சிற்பம்
ஓவியம் அவிநயம் கூத்து கட்டிடம்
ஒப்பனை முதலா இயற்றப் படுவன.

11. பேசும் இலக்கியம் மாசறு மொழியான்
பண்ணொடும் விரவ இயலிசை நாடகம்
எனும்முத் திறனாய்ப் பன்னப் படுவன.

12. இருவகைப் பாங்கும் மருவியது நாடகம்.

13. ஓசை விகற்பமாய் உணர்வும் மொழியும்
மாசற உள்ளுறுத் தியங்குவது இசைக்கலை,

14. பேசா இலக்கியம் கவின்கலை ; மற்றது
நுண்கலை எனவும் நுவலப் படுமே.

[நுண்கலை இலக்கியம்]

15. நுண்கலை இலக்கியம் நுவலுங் காலை
உணர்வியல் அறிவியல் மெய்யியல் எனமுத்
திறப்படும் அவற்றுள் முன்னது அகப்பொருள்
பின்னவை புறப்பொருள் என்னும் தமிழ்நூல்.

[உணர்வியல்]

16. காதல் களித்தல் ஓதல் உடற்றல்
ஈதல் ஏற்றல் இசைத்தல் உவத்தல்
தொண்டியற் றல்புவிப் பற்றறல் இன்னன
உளவியல் சார்ந்த உணர்விய லென்ப.

[அறிவியல்]

17. வானியல் கோளியல் புவியியல் உடலியல்
கணக்கியல் இயற்பியல் உழவியல் போரியல்
பொருளியல் மருந்தியல் கருவி இயலொடு
அரசியல் போன்றவை அறிவியல் பாற்படும்.

[மெய்யியல்]

18. உலகுயிர் யாவையும் படைத்தல் காத்தல்
மறைத்தல் அழித்தல் அருளல்என் றைந்தொழிற்கு
உரியசெம் பொருளொடு உலகுஉயிர்தளை நிலை
பாடுபெற ஆய்ந்து வீடுபெறு நிலைமுதல்
உரைப்பது மெய்யியல் ஆகுமென் றோதுப.

[படைப்பிலக்கியம்]

19. படைப்பிலக் கியம்அம் மூவகை விரவ
நடக்குங் காலை நயப்புறு குறிக்கோட்
பொருளான் பெயர்கொடு வழங்கும், அவற்றுள்
பயன்படு மாற்றான் காலவெள் ளத்தில்
நிலைப்பன நிலையா தனவுமா குண்டே.

## [ நிலைபெறும் இலக்கியம் ]

20. கல்வியறி வாற்றல் செல்வம் போலாது
மாந்தர்க் கெல்லாம் எக்கா லத்தும்
உரியவாம் காதல் உணர்வுஅவா ஆளுமை
நோக்குமன வீறு பிள்ளைப் பாசம்
அன்பருள் இரக்கம் அழுக்காறு வெகுளி
அன்னபல் பண்பும் குணனும், இன்பம்
துன்பம்முத லாய நேர்ச்சியும், மறுமைச்
சிந்தையும் பற்றிய நிகழ்வுகள், அவற்றின்
மோதலான் எழுமகப் புறப்போ ராட்டம்
உய்த்துணர் வகையான் அமையும் தீர்வுகள்
சாதி சமய இனமொழி கடந்த
உயர்ந்த குறிக்கோள், உளவியற் பாங்கினை
விளக்கும் நிகழ்வுகள் அறிவியற் கொப்ப
அமைந்து கற்பனை கலைவளம் பொலியப்
பயில்தொறும் சொற்பொருள் நயம்பல விரியும்
எளிய இனிய நன்னடை யாப்பின்
அவ்வக் காலத் தேவைகட் குரிய
கருத்து விரித்தற்கு ஏற்புடைத்தாக
எண்ணிய சுவையெலாம் நுண்ணிதின் விரிய
எடுத்துக் காட்டுதற் கினியபல் தொடர்கள்
மடுத்து மக்களின் வாழ்க்கைஎதி ரொலியாய்க்
கற்பனைப் படைப்பினர் புராணவர லாற்றினர்
யாரவ ராயினும் இலக்கிய மாந்தர்
மானுடப் பண்பின் வடிவின ராக
மனங்கொளும் வண்ணம் புனையும் இலக்கியம்
நிலைபே றுடைய தாகும் என்ப.

## [நிலைபெறா இலக்கியம்]

21. உறுபொருள் கருதியும் ஒருசில பேர்தம்
உளங்களி கூரவும், காலச் சூழலான்
வளரும் சிக்கலைப் போக்க உணர்வைத்
தூண்டவும் மானுட வாழ்விற்கு ஏலாக்
கற்பனைச் செய்திகள், அறிவியற் கொவ்வா
அற்புத நிகழ்ச்சிகள், உளத்தைப் பற்றுத
உயர்வு நவிற்சிகள் உடையன வும்தம்
புலமை ஆற்றல் புலப்பட வேண்டிக்
கலைநலம் பயவாக் கடுமையொடு புனைநவும்

உலகியல் வழக்கிற் கொவ்வாப் பொய்ம்மலி
செயற்கைக் கற்பனைப் படைத்துச் செய்நவும்
அன்ன பிறவும் அவ்வப் பொழுதிற்
பீடுற மலர்ந்துபின் வாடி யுதிரும்
மணமில் மலர்போல் மன்னு வென்ப.

[படைப்பிலக்கிய வகை]

22. படைப்பிலக் கியந்தாம், செய்யுள் சிறுகதை
புதினம் நாடகம் கட்டுரை திறனாய்வு
ஒப்பிய லாய்வென் றேழ்வகைத் தவற்றுள்
முதல்வகை ஐந்தும் தனிமுதற் படைப்பு
தழுவல் தொகுப்பு விரிப்பு மொழிபெயர்ப்பு
எதிர்மறை என்றறு வகையா னிலங்கும்
ஏனைய இரண்டும் கட்டுரைப் பாற்படும்.

[தனிமுதற் படைப்பு]

23. இலக்கியப் பொருளைத் தேர்ந்துதன் குறிக்கோள்
உள்ளுறக் கற்பனை கலைவளஞ் செறியத்
தானே இயற்றுதல் தனிமுதற் படைப்பாம்.

[தழுவல் படைப்பு]

24. பண்டைய இன்றைய இலக்கியங்களையே
பிறிதொரு பயனும் சுவையும் வேண்டி
நிகழ்ச்சிப் பின்னலின் வடிவை மாற்றித்
தகவுறச் சமைப்பது தழுவல் இலக்கியம்.

[தொகுப்புப் படைப்பு]

25. ஒருபொருள் பற்றிய பல்வேறு படைப்பினுள்
செறிவும் பயனும் நிறைந்துள வற்றைத்
தேர்ந்தொருங் கியற்றலும் அறமுத லாயநற்
பொருளைப் பற்றிப் பல்லோர் புகன்ற
பயன்மிகு செய்யுளைத் திரட்டி அவற்றை
முறைப்படுந் தமைத்தலும் தொகுப்பிலக் கியமாம்.

[விரிவுப் படைப்பு]

26. திண்மையும் செறிவும் சுருக்கமு மாக
முன்னையோ ரியற்றிய பன்னரும் இலக்கியக்
கருத்தினை யாவரும் வருத்தமின் றுணர
விளக்கமுற இயற்றல் விரிவிலக் கியமாம்.

[மொழிபெயர்ப்பு]

27. யாதொரு மொழிக்கண் உளஇலக் கியத்தைப்
பொருள்திரி யாமல் பிறிதொரு மொழிக்கண்
மாற்றி யமைத்தலை மொழிபெயர்ப் பென்ப.

[மொழிபெயர்ப்பு முறைமை]

28. எடுத்த இலக்கியம் எழுதிய காலம்
இடம்சமு தாயம் அரசியற் சூழல்
விளைவுமுற் றோர்ந்ததன் தேவைநன் கறிந்து
மூலமொழிப் புலவன் முன்னிய பயன்சுவை
எழுப்பும் உணர்ச்சி யாப்பியல் தேர்ந்துஅவை
பழிப்பில வாகப் பன்னுங் காலை
அம்மொழி மரபும் சொல்வகை இயல்பும்
கலைப்பண் பாடும் கற்பனை வழக்கும்
மலைவற நோக்கியச் சுவையும் பயனும்
நிலைபெறு நெறியான் சொற்குச் சொல்லெனும்
முறை கருதாமல் மொய்ம்பமை கருத்தும்
மெய்ப்பா ட்டுணர்வும் மேவரப், பெயர்க்கும்
மொழியியல் மரபதன் முன்னோர் பயின்ற
வழிநனி கடைப்பிடித்து உரையினை உரையினும்
பாவினை ஏற்புறு பாவினும் அன்றி
மாற்றியும் இசைநலம் கமழப் பெயர்த்தலும்
பெயர்த்தற் கொவ்வாக் கலைக்குறி யீட்டுச்
சொற்களை ஒலிபெயர்த் துள்ளவா றமைத்தலும்
மொழிமுறைக் கேற்பத்திரித்துக் கொள்ளலும்
நயமுற விளக்கி வரைதலும் பிறவும்
உயிர்ப்பமை மொழிபெயர்ப் பிலக்கண மென்ப.

[எதிர்மறை இலக்கியம்]

29. ஓரா சிரியன் தன்குறிக் கோளொடு
படைத்த இலக்கியப் பாங்கையும் விளக்கிய
கருத்தையும் ஒருபயன் நோக்கி மறுத்துப்
புதிய விளக்கம் முரண்படப் புனைந்து
கூறுதல் எதிர்மறை இலக்கியக் கோளே. 29

## 2. ஈரேழ்திணையியல்

[செய்யுள் பொதுவியல்பு]

30. அவற்றுள்
செய்யுள் இலக்கியம் அறமுதலாயநாற்

பொருட்பய னெய்த அகம்புறம் என்னும்
ஈரேழ் திணைவழி நிகழிரு கைகோள்
சுவையணி மரபொடு யாப்பொடும் தனிநிலை
தொடர்நிலை எனஇரு திறப்பட வருமே. 1

[நாற்பொருள்]

31. அகமும் புறமும் மாசற மக்கள்
புகழ்வர மெய்யுணர்ந் தொழுகுதல் அறமாம்
பல்வகைப் பொருளையும் ஆக்கல் தொகுத்தல்
அழித்தல் அரசமைத் தியங்குதல் பொருளாம்
ஆடவர் பெண்டிர் அமைந்த காதலொடு
கூடியும் ஊடியும் குடிவழி பெருக்கிப்
பீடுற லின்பமாம் யானென தென்னும்
செருக்கொழிந் துலகப் பற்றறல் வீடே. 2

[அகம் புறம் என்னும் ஈரேழ்திணை]

32. முதல்கரு உரியெனும் மூன்றான் நிறைந்து
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்
பாலை கைக்கிளை பெருந்திணை என்னும்
அவை முதலாக அவற்றின் புறமாய்
வெட்சி வஞ்சி உழிஞை தும்பை
வாகை காஞ்சி பாடாண் திணையென
வருமீ ரேழும் அகம்புறம் பற்றிய
பாடலுட் பயிலும் ஒழுகலா றென்ப. 3

[முதற்பொருள்]

33. அவற்றுள்
முதலெனப் படுவது இருதிணைப் பொருளும்
கதித்திலங் குதற்குக் காரண மாகிய
நிலமும் பொழுதுமென நிகழ்த்துவர் அவைதாம்
படுதிரை வையத் தியற்கை நோக்கியும்
நடைமுறை ஒழுக்கத்து வழக்கினை ஓர்ந்தும்
மாயோன் மேய காடுறை யுலகம்
சேயோன் மேய தீம்புன லுலகம்
வருணன் மேய பெருமண லுலகம்
கொற்றவை கருதிய வற்றிய சுரமென
நிரல்படக் கிளந்த நிலவகை என்றும்
காரே கூதிர் முன்பனி பின்பனி
ஓரிரு வேனிலும் காலை நண்பகல்

ஏற்பாடு இரவு யாமம்வை கறையெனும்
பருவமும் பொழுதும் காலவகை என்றும்
புகலுவர் புலனெறி மரபுணர்ந் தோரே. 4

34. அவ்வந் நிலைத்துப் பெயர்க்குறி யீட்டினை
அந்நில ஒழுக்க மாகிய திணைக்கும்
பொருத்திக் கூறுதல் புலனெறி வழக்கே. 5

[கருப்பொருள்]

35. தெய்வம் உணாவே மாமரம் புள்பூ
ஊர்நீர் ஒழுகுதற் குரியநில மக்கள்
புரிதொழில் யாழ்பண் பறையும் பிறவும்
முதலின் காரிய மாம்கருப் பொருளே. 6

36. அவற்றுள்
தொழில் யாழ் பண்பறை ஆயவை மக்கள்
ஆக்கப் பொருள், பிற இயற்கை, தெய்வம்
இயற்கையை நோக்கிப் படைத்துக் கோடலின்
இருவாற் றானும் இயம்பத் தகுமே. 7

[உரிப்பொருள்]

37. சூழல்புவி உறையும் மாந்தராம் கருப்பொருள்
நிலநீர்ச் சார்பினும் காலவேற் றுமையினும்
எய்துமுடல் உணர்வான் மேற்கொண் டொழுகும்
புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்த மாகிய
உலகியல் பற்றிய ஒழுக லாறுகள்
அகத்திணைக் குரிய உரிப்பொருள் என்ப. 8

[திணைமயக்கம்]

38. ஒருதிணைக் குரிமைசெய் தோதிய காலம்
புள்மரம் பூமுத லாகிய கருப்பொருள்
உரிப்பொருள் ஏனைய நிலத்தொடும் மயங்கும்;
நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப. 9

[புறனடை]

39. சொல்லப்பட்ட முதலும் கருவும்
ஈரேழ் திணைக்கும் உரியவே எனினும்
அகத்திணைச் செய்யுளுள் ஆக்கமுற வருமே. 10

[முல்லைத்திணைக்குரிய முதல் கரு உரிப்பொருள்]

40. வளமிகு காடும் கொல்லையும் புனமும்
நிலன், கார் மாலை பருவமும் பொழுதும்

திருமால் தெய்வம், சாமை வரகு உணா.
மான்முயல் யாடுமா, பிடவம் காயா
தோன்றி குருந்தம் மரம், கான் கோழி
சிவல்புள், குல்லை முல்லைபூ பாடி
சேரிஊர், குறுஞ்சுனை யாறு நீர், ஆயர்
ஆய்ச்சியர் மக்கள், வரகு விளைத்தல்
ஆனிரை மேய்த்தல் ஏறுதழு வல்தொழில்
முல்லையாழ் முல்லைப் பண்ஏறு கோட்பறை,
ஆற்றியிருத் தல்அதன் நிமித்தமும் ஒழுக்கமும்
ஆங்கவை முல்லைத் திணைக்கு முதல்கரு
உரிப்பொரு ளாமெனத் தெரிக்குவர் புலவர். 11

[குறிஞ்சித் திணைக்குரியவை]

41. மைவரை யடுக்கம் சாரல் அவைநிலம்
கூதிர்முன் பனிஇருது யாமம் பொழுது
சேயோன் தெய்வம் தினைஐ வனநெல்
கிழங்கு தேன்உணா, கேழல் புலிகரி
வருடை மா, தேக்ககில் ஆரம் கழைமரம்
கிள்ளை மயில்புள் வேங்கை குறிஞ்சி
காந்தள் பூவே சிறுகுடி குறிச்சி ஊர்
அருவி சுனைநீர் வேட்டுவர் கொடிச்சியர்
மக்கள்தினை விளைத்தல் வேட்டையா டல்தொழில்
குறிஞ்சியாழ் குறிஞ்சிப் பண்தொண் டகப்பறை
புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஒழுக்கம்
ஆங்கவை குறிஞ்சித் திணைக்கு முதல்கரு
உரிப்பொரு ளாமென உரைக்குவர் நூலோர் 12

[மருதத்திணைக்குரியவை]

42. நீர்நிறை வயல்நறும் படப்பை தோட்டம்
நிலம், அறு பருவமும் வைகுறு விடியலும்
காலம், வேந்தன் தெய்வம், செந்நெல்
வெண்ணெல் கரும்புணா, எருமை நீர்நாய்
மா, மருது வஞ்சி காஞ்சி மரம் நீர்க்
கோழிதா ராபுள் குவளை தாமரை
மகிழ்பூ சிற்றூர் பேரூர் இவைஊர்
பொய்கைபே ராறுநீர்; உழவர் உழத்தியர்
மக்கள்,ஏர் உழுதுநெல் விதைத்தல் விளைத்தல்
கடாவி டல்தொழில் மருதயாழ், மருதப்
பண்மண விழா நெல் அரிகிணை பறையே

புலவியுந் றாடலும் ஊடல் நிமித்தமும்
ஒழுக்கம் ஆங்கவை மருதத் திணைக்கு
முதல்கரு உரிப்பொரு ளாமென மொழிப 18

[நெய்தற்குரியவை]

43. அடைகல் பெருமணற் பரப்பிருங் கழிநிலம்
மூவிரு பருவம்எற் பாடிவை காலம்
சுறவுக் கோட்டொடு வருணன் தெய்வம்
மீன்விளை உப்புணா சுறாஉமண் பகடுமா
புன்னைமென் ஞாழல் கண்டல் மரம் புணர்
அன்றில் நாரைபுள் தாழை அடம்பு
நெய்தல் பூவே பட்டினம் பாக்கம் ஊர்
மணற்கிண றுவர்க்குழி நீரே நுளையர்
நுளைச்சியர் மக்கள்மீன் படுத்தல் உணக்கல்
உப்புவிளைத் தல்தொழில் நெய்தல்யாழ் நெய்தற்
பண், மீன் கோட்பறை இரங்கலும் இரங்கல்
நிமித்தமும் ஒழுக்கம் ஆங்கவை நெய்தல்
திணைக்கு முதல்கரு உரிப்பொரு ளென்ப. 14

[பாலைத்திணைக்குரியவை]

44. அருஞ்சுரம் கதிர்தெறு வறுங்கா டவைநிலம்
இளமுது வேனில் பின்பனி நண்பகல்
காலம், கனலி கொற்றவை தெய்வம்
சூறைகொள் பொருள்உணா, எருவை வலியழி
புலிசெந் நாய்மா ஓமை இருப்பை
உழிஞ்சில் மரம், புறா பருந்து கழுகுபுள்
குராஅ மராஅம்பூ குறும்புஊர், வற்றிய
கிணறு குழிநீர், எயினர் எயிற்றியர்
மக்கள் கொடும் போர் சூறையா டல்தொழில்
பாலையாழ் பாலைப் பண்துடிப் பறையே
ஐந்நில மக்கள் பிரிதலும் பிரிதல்
நிமித்தமும் ஒழுக்கம் ஆங்கவை பாலைத்
திணைக்கு முதல்கரு உரிப்பொரு ளாமே. 15

[திணைநிலைமக்கள்]

45. நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல்சான்ற அகனைந் திணைக்கண்
சுட்டி ஒருவர் பெயரிசை யாது

குறும்பொறை நாடன் தோன்றல் பொருப்பன்
வெற்பன் மகிழ்நன் ஊரன் கொண்கன்
துறைவன் காளை மீளியென் றின்னன
திணைநிலைப் பெயரான் செப்புதல் மரபே. 16

[அகத்திணை ஒழுகலாறு]

46. பிறப்பு முதலாய பத்தும் ஒத்துப்
பெருமையும் உரனும் பொருந்திய தலைவனும்
அச்சமும் மடமும் நாணும் முத்துறுத்த
தலைவியும் உயர்ந்த பால தாணையான்
அன்பொடு பொருந்தி ஒழுகும் ஒழுக்கம்
பகருரிப் பொருட்கமை அகனைந் திணையாம்
உரிப்புறத் தனவாய் ஒருமருங் கெழுந்த
கேண்மை கைக்கிளை அளவின் இகந்த
காமம் பெருந்திணை அவ்வகை ஏழும்
அகத்திணை ஒழுக்கம் என்மனார் புலவர். 17

47. அடியோர் வினைவலர் காம ஒழுக்கம்
கைக்கிளை பெருந்திணைப் பாற்படு மென்ப. 18

[கைக்கிளை இயல்பு]

48. காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தித்
தன்வேட் கையைத்தன் நெஞ்சொடு கூறிச்
சொல்லெதிர் பெறாது தானே மகிழ்தலும்
காதல் சான்றவள் காதல் மறுப்பினும்
தனதாற் றாமையைச் சொல்லி இரத்தலும்
பால தாணைகொள் காட்சி யிடத்துக்
குறிப்பறி காறும் குறுகாது நின்று
குறிப்புரை யாற்றலும், பகைவரை வென்றவர்
மகளிரை மணத்தலும், கடவுளர் பாங்கிற்
காதல்கொண் டுரைத்தலும் கைக்கிளை என்ப. 19

[பெருந்திணையியல்பு]

49. பிறப்புமுத லாயனவ ஒவ்வா துளத்திற்
காதல் மேவாக் காம வேட்கையான்
தகவினைக் கடந்து தழுவுபுல் லொழுக்கம்
அடியோர் வினைவலர் முடியா ஒழுக்கமும்
மடன்மா ஊர்தலும் மன்றத்துப் புலம்பலும்
உடற்குறை யுற்றோர் முடமண ஒழுக்கமும்
அறத்தப நனிநிகழ் பெருந்திணை என்ப. 20

50. ஆங்கவை இரண்டும் அகப்புறத் திணையாய்
அகனைந் திணைமருங் கியலும் என்ப. 21

[புறனடை]

51. கூறிய அகத்திணை மரபொடு பொருந்தி
வேறுபிற வரினவை தேறினர் கொளலே. 22

[புறத்திணைப்பொதுவியல்பு]

52. அகத்திணை மருங்கின் இன்ப ஒழுக்கம்
நிகழ்தற் கேதுவாய் அவற்றது புறனாய்
பாற்பட அமைந்த நாற்பா லவருள்
நான்மறை ஓதலும் கோன்முறை காட்டலும்
வேட்டு வேட் பித்தலும் மறுவில் செய்தி
மூவகைக் காலமுந் தெரிந்துநன் காற்றலும்
ஆகிய அந்தணர் ஒழுக லாறுகளும்
குடிமுறை யாகக் கோல்புரிந் தாளும்
கடமையைப் பூண்டு மந்திரச் சுற்றமொடு
படைவலி பெருக்கித் தடமதில் எழுப்பிக்
குடி புறங் காக்கும் குறிக்கோள் மேவி
நெடுநிலம் பொதுவெனப் பொறாஅது முழுமையும்
தன்னகப் படுத்தும் பூட்கையும் முரண்படு
மன்னரை வென்றவர் நாட்டுவளங் கவரும்
வேட்கையும் தம்மைப் போற்றுவார்க் கருளி
ஈதலும் புலவரைப் போற்றலும் அருஞ்சமத்து
ஆற்றலும் பகைவரைக் களைதலும் வாகைபெற்று
ஒளிர்தலும் சான்ற முடியுடை வேந்தர்
குறுநில மன்னர்தம் ஒழுகலா றுகளும்
பெருந்திறல் சான்ற மறவர்தம் வீறும்
முதுகுடிப் பெண்டிர் மூதின்முல்லையும்
வணிகர்தம் வளமுறு வினைகளும் வேளாண்
மாந்தர்தம் மாண்பமை ஒழுகலா றுகளும்
பல்வேறு வினைநிலைப் பாங்கினர் புரியும்
வாகையும் முல்லையும் வகைபெறக் கிளத்தலும்
நடைமுறை பிறவும், செல்வமும் இளமையும்
யாக்கையும் நிலையாப் போக்கினைச் சுட்டலும்
உழவு முதலாக உலகைவளப் படுத்தும்
வினைநல மாட்சியான் வீறுற் றிலங்கும்
மாந்தரைப் போற்றலும் கடவுளர் தம்மை
மக்களொடு சார்த்தி ஏத்தலும் வாழ்த்தலும்

அளிவளர் புரவலர் இடத்திர வலரை
அவர்திறன் விளக்சி ஆற்றுப் படுத்தலும்
பரிசுபெற் றரசரைப் புகழ்தலும் பிறவுமாய்
அறம்பொருள் வீடெனும் திறமுற நிகழும்
வரன்முறைப் படுத்த துறையொடு பொருத்திய
வெட்சி முதலாய ஒழுக லாறுகள்
புலப்படத் தெரிப்பது புறத்திணை மரபே. 23

**[வெட்சித்திணை ஒழுகலாறு]**

53. ஆற்றா மன்னர்தம் ஆட்சியைக் கவர
எண்ணிய வேந்தன் படைகொடு புகுமுன்
பேணற் குரியஆ னிரைகளைக் களவின்
கொள்ளுதற் கேவும் மள்ளரும் அவரை
வெல்லுதற் கெதிரும் வீரரும் தத்தம்
மன்னவர்க் குரிய சின்னப் பூவொடு
வெட்சியும் கரந்தையும் சூடிஆ னிரைகளைக்
கவரவும் மீட்கவும் புரியும் மூதற்போர்
குறிஞ்சியது புறனாக் கொளத்தகு மரபின்
வெட்சித் திணையென விளம்புவர் நூலோர் 24

**[மூவேந்தர் அடையாளப் பூக்கள்]**

54. செந்தமிழ்ச் சேர சோழ பாண்டியர்
மைந்துறச் சூடும் போந்தை ஆர் வேம்பெனும்
மூன்றும்மூ வேந்தர் அடையாளப் பூக்களாம் 25

**[வெட்சித்துறைகள்]**

55. படையியங் கரவம் விரிச்சிபடைச் செலவு
ஒற்றுதல் புறத்திறை ஊர்கொலை ஆகோள்
பூசல் மாற்றே நோயின் றுய்த்தல்
நுவல்வழித் தோற்றம் தந்துநிறை பாதீடு
உண்டாட்டுக் கொடையிவை கொள்வோர்க் குரிய ;
ஆரமர் ஒட்டல் ஆபெயர்த்துத்தருதல்
மீட்போர்க் குரிய துறையென மொழிப. 26

**[போர்த் திணைக்கெல்லாம் பொதுவான துறைகள்]**

56. கொற்றவை பரவலும் துடிநிலை உரைத்தலும்
குடையும் வாளும் நாட்கொளல் அன்றியும்
வெவ்வாய் வேலன் ஆடுறு காந்தளும்
வள்ளிக் கூத்தும் வார்கழல் புனைதலும்
உன்னங் கோடலும் பூவைநிலை அறிதலும்

சின்னப் பூவொடு திணைப்பூச் சூடலும்
சீர்கால் வேந்தன் சிறப்பெடுத் துரைத்தலும்
தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும்
பிள்ளை நிலையும் பிள்ளையா ராட்டும்
மறப்புகழ் நாட்டித் துறக்கம் புக்கோன்
நிலைபெறும் கல்லினைக் காண்டல் கால்கொளல்
நீர்ப்படை நடுதல் வாழ்த்தல் போர்க்குரி
புறத்திணைக் கெல்லாம் பொதுவென மொழிப 27

## [வஞ்சித்திணை இயல்பு]

57. எஞ்சா மண்ணசை யான்பிறன் நிலத்தைத்
தன்னகப் படுத்திய மன்னனை ஒறுப்ப
வஞ்சிதலை மிலைந்து அஞ்சுதக மேற்சென்று
அடுதலும் மற்றவன் ஆங்கனம் எதிர்தலும்
முல்லையது புறனா முறைபெறு மரபின்
வஞ்சித் திணையென வழங்குவர் புலவர் 28

## [வஞ்சித்திணைத் துறைகள்]

58. வயங்கல் எய்திய பெருமை, வழங்கும்
இயங்குபடை அரவம் எரிபரந் தெடுத்தல்
கொடைமை யடுத்தூர்ந் தெய்திய கொற்றம்
மாராயம் பெற்றோன் நெடுமொழி கூறல்
படையின் றுய்த்தபே ராண்மை, ஒருவனே
வருவிசைப் புனலைக் கற்சிறை போலத்
தாங்கிய பெருமை பெருஞ்சோ றளித்தல்
வென்றோர் விளக்கம் தோற்றோர் தேய்வு
தழிஞ்சியொடு பிறவும் கழிபெருஞ் சிறப்பின் 29
வஞ்சிக் குரிய துறையென மொழிப.

## [உழிஞைத்திணை இயல்பு]

59. காட்டரண் நீரரண் மலையரண் அன்றியும்
ஆக்கியஅருமதில் அகத்திருப் போனை
வேறலைக் கருதி மாறுபட் டெழுந்தோன்
உழிஞை சூடிக் கடிமதிற் கிவர்தலும்
அரணகத் திருந்தோன் நொச்சி மிலைந்து
பொருதற் கெதிர்தலும் மருதத்துப் புறனாம்
உழிஞைத் திணையென ஓதுவர் புலவர். 30

[உழிஞைத்திணைத் துறைகள்]

60. கொள்ளார் தேஎம் குறித்த கொற்றம்
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு
தொல்லெயிற் கிவர்தல் தோலின் பெருக்கமென்று
ஈரிரு துறையும் இவர்வோர் தமக்கும்
அகத்தோன் பெருவளம், அனுகிய பகைவரை
அணங்குதல் ஒருதான் மண்டிய குறுமை
அரும்பகை பேணார் ஆரெயிற் சிறப்பெனும்
ஒருநான்கு துறையும் அகத்தோர் தமக்கும்
சிறப்பின, மடையமை ஏணிமிசை மயக்கம்
அமர்கடந்து முற்றல் அகத்தோன் வீழ்ச்சி
புறத்தோன் வீழ்வு நீரிடைப் பாசி
பாசி மறம்எயில் கைக்கொளல் இகல்மதிற்
குடுமி கொண்ட மண்ணு மங்கலம்
வாண்மங் கலம்தொகை நிலையெனும் பத்தும்
பிறவும் உழிஞைப் பொதுவென மொழிப. 31

[தும்பைத்திணை இயல்பு]

61. தனதுபே ராற்றலும் தன்படை வலியும்
காட்டுதற் பொருட்டா இருதிற வேந்தரும்
மூவகைப் படையும் தம்முள் முரணி
வேலும் கணையும் மேனியில் மொய்க்கக்
குறையுடல் துள்ளக் கொடுஞ்சம ராடல்
நெய்தலது புறமா நிலைபெறு மரபின்
தும்பைத் திணையெனச் சொல்லுவர் புலவர். 32

[தும்பைத்திணைத்துறைகள்]

62. தானை யானை குதிரை யென்னும்
மூவகை மறமும் வேந்தனைக் காக்கவேல்
எறிந்ததார் நிலையும் தலைவர் இருவரும்
தடிதலும் ஒருவன் கூழை தாங்கிய
எருமை மறமும் எஃகுபடை யறுத்துப்
பாழி கொள்ளும் ஏமமும் களிறெறிந்து
எதிர்ந்தோர் பாடும் களிற்றுட னிலையும்
வென்ற வேந்தன் வேலோர் ஆடும்
அமலையும் இருபெரும் வேந்தரும் சுற்றமும்
வீழ்ந்ததொகை நிலையும் அதுபொறா தொருவன்
மண்டிய நல்லிசை நிலையும் நூழிலும்
தும்பைக் கமைந்த துறையென மொழிப. 33

[வாகைத்திணை பொதுவியல்பு]

63. மனமொழி மெய்களான் வினைபுரிந் தியங்கும்
மாந்தர்தம் தொழிலை மற்றவர் தம்மினும்
பாகுபட மிகுத்தல் பாலையது புறனாக்
கொளப்படும் வாகைத் திணையெனக் கூறுப. 34

[சிறப்பியல்பு]

64. கற்பொழுக் கத்துள் அவரவர்க் குரியவென்று
இயம்பும் முறையான் பார்ப்பார்க் குரிய
அறுவகைக் கண்ணும் அரசர்க் குரிய
ஐவகைக் கண்ணும் வணிகர் வேளாண்
மாந்தர்க் கமைந்த அறுவகைக் கண்ணும்
மூவகைக் காலமும் முறைதெரிந் தாற்றும்
அறிவர்தம் வினைக்கணும் எண்வகை நெறியும்
கைவரப் பெற்ற முனிவர்தம் திறத்தினும்
மைந்துடை மறவர் வீறுபெறு வினையினும்
கலைநலந் தேர்ந்தோர் மலைவறு புலவோர்
தத்தம் வினையினும் மனையறத் தமைந்த
மறக்குடி மகளிர்தம் மாண்பினும் ஓங்கித்
திகழ்தலும் உறழ்ச்சியில் மீக்கூர்ந் தொளிர்தலும்
வாகைக் குரிய பகுதிகள் என்ப. 35

[வாகைத்திணைத் துறைகள்]

65. கூதிர்ப் பாசறை வேனிற் பாசறை
ஏரோர் களவழி தேரோர் களவழி
முன்றேர்க் குரவை பின்றேர்க்குரவை
வேலின் வென்றி தோலின் வென்றி
அரச வாகை முரச வாகை
வாணிக வாகை வேளாண் வாகை
அவிப்பலி அறங்கூர் அவைய முல்லை
பகைவரைப் பொறுத்தல் சால்பின் மிகுதல்
அரசினை அளித்தல் கடிமனை நீத்தல்
படிமை ஒழுக்கம் காவல் முல்லை
காமங் கடிதல் அருளின் மிகுதல்
பொருளொடு புணர்தல் அன்ன பிறவும்
மன்னிய வாகைத் துறையென வழங்குப. 36

[காஞ்சித்திணை இயல்பு]

66. இன்பமும் பொருளும் இளமையும் யாக்கையும்
மன்பதை பிறவும் மன்னா தனவெனக்

கண்கூ டாக நிகழ்வது காட்டல்
பெருந்திணைப் புறனாப் பிறங்கும் மரபின்
கருதருங் காஞ்சித் திணையென மொழிப. 87

[காஞ்சித்திணைத் துறைகள்]

67. கூற்றுவன் தேற்றமும் முதியோர் தோற்றமும்
புண்கிழித்து முடியும் மறனும் புண்ணோர்ப்
பேஎய் ஓம்பலும் மனைவி பேய்க் கடிதலும்
இன்னனென் றிரங்கும் மன்னையும் இன்னது
பிழைப்பினிது வாகியர் எனும்வஞ் சினமும்
கணவனைத் தீர்த்த வேலின் மனைவி
தானு மடிதலும் மகட்பா லிகலும்
தலையொடு முடிதலும் மாய்ந்த மகனைச்
சுற்றஞ் சுற்றலும் பூசல் மயக்கமும்
தாங்கரும் பையுளும் தபுதார நிலையும்
மூதா னந்தமும் முதுமொழிக் காஞ்சியும்
கையறு நிலையும் பாலை நிலையும்
முதுபா லையும் தலைப்பெயல் நிலையும்
குற்றிசை குறுங்கலி அன்ன பிறவும்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தலும்
உலகநிலை யாமையைப் புலனுறத் தெரிக்கும்
துணையகல் காஞ்சித் துறையெனச் சொல்லுப. 88

[பாடாண்டிணை பொதுவியல்பு]

68. வெட்சி முதலாய அறுவகைத் திணையுள்
மாட்சிமை புரிந்த மறவர்தம் சீர்த்திகள்
புறத்திணை மருங்கின் இயற்பெய ரொடுவரும்
புரைதீர் காமப் பகுதியொடு, பண்பும்
வண்மையும் வாய்ந்த குடிப்பிறந் தோரைப்
பரவுதல் புகழ்தல் எனும்எண் வகையாப்
பாடுபெறும் ஆளுமை பற்றிப் புலவோர்
போற்ற நிகழ்வது கைக்கிளைப்புறனாம்
பாடாண் டிணையெனப் பன்னுவர் நூலோர். 89

[சிறப்பியல்பு]

69. கடவுளர் பக்கத்துக் காமப் பகுதியும்
குழவி மருங்கிற் கூறும் பகுதியும்

தெய்வத்தொ டொப்ப மக்களைச் சார்த்திச்
சொல்லும் பகுதியும் விண்மீன் வானம்
மாமழை மூன்றையுப் தெய்வ மாக
வாழ்த்தலும் பாடாண் பாற்படும் என்ப. 40

[பாடாண்டிணைத் துறைகள்]

70. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தல்
கடைநிலை கண்படை நிலையே விளக்குநிலை
பெருமங் கலமிரு மண்ணுமங் கலமே
இயன்மொழி வாழ்த்து வாயுறை வாழ்த்து
புறநிலை வாழ்த்து செவியறி வுறூஉ
கைக்கிளை துயிலெடை நிலையே குடைநிலை
பாணர் கூத்தர் விறலி பொருநரை
வள்ளியோர் பாற்பெறும் வளம்பெறச் செலுத்தும்
ஆற்றுப் படையே பரிசில் கடாநிலை
பரிசில் விடைவாள் மங்கலம் ஓம்படை
பிறவும் பாடாண் டிணைக்கமை துறையே. 41

[புறனடை]

71. பெருகுபே ராற்றிடை நீருண வகுத்த
துறைபோல் புறத்திணை ஒழுகலா றுணரச்
சுருங்கக் கிளந்த துறைப்பொருள் விளக்கி
அவற்றது மருங்காய் அமைவன வெல்லாம்
தெரிந்தனர் உணர்த்தல் தெள்ளியோர் கடனே. 42

## 3. இருவகைக் கைகோளியல்

72. களவும் கற்பும் கைகோள் வகையவை
அகனைந் திணைக்கமை ஒழுக்க மாகும். 1

[களவியல் மரபு]

73. அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது
ஒன்றி உயர்ந்த பால தாணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காணும்
காட்சியும் ஐயந் தவிர்ந்துகுறிப் பறிதலும்
எண்வகை மன்றலுள் துணையா மோர்வழி
இயற்கைப் புணர்ச்சியுற் றிடந்தலைப் படலும்
பாங்கற் கூட்டமும் தோழியிற் புணர்வும்
ஏற்புழி நிகழ ஒருவழித் தணத்தலும்
தெளித்தலும் பாங்கி மதியுடம் படலும்

செவிலி ஐயுறலும் அலர்வெளிப் படலும்
வெறியாட் டெடுத்தலும் அறத்தொடு நிற்றலும்
குறிவழிச் சேறலுங் அல்லகுறிப் படுதலும்
வரைவு கடாதலும் வரைபொருட் பிரிவும்
தலைவன் வருந்தொழிற் கருமை நேர்தலும்
மடன்மா கூறலும் உடன்போக் குரைத்தலும்
சுரத்தருமை கூறலும் கற்புவலி யுறுத்தலும்
உடன்போக் கேற்றலும் ஓம்படை கூறலும்
உடன்போ கியவழிச்செவிலி புலம்பலும்
கற்பொடு புணர்ந்த கௌவையும் வரைதலும்
பொற்பமை பிறவும் பொருந்திய தென்ப. 2

[தலைவன் தலைவி ஒப்புமை இலக்கணம்]

பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவிவை
ஒப்புமை தலைவுன் ஓரிரு வகையான்
மிக்கோ னயினும் கடிவரை யின்றே. 3

[காட்சி]

75. பால தாணையான் பாங்கரை நீங்கிய
சேலமை கண்ணியும் சேயனை யானும்
சீர்த்ததோ ரிடத்தெதிர் காணுதல் காட்சி
தலைமகன் வியந்தாங் கையுறல் மரபே. 4

[ஐயந்தவிர்ந்து குறிப்பறிதல்]

76. மடந்தையின் உருவும் நின்ற சீரிடமும்
ஏதுவா எழுந்த ஐயம் இமைத்தல்
அணிமலர் வண்டுறல் வாடுதல் வியர்த்தல்
மருளுதல் கால்நிலந் தோய்தல்கண் டவற்றான்
களைந்து புன்முறுவலான் நோக்கெதிர் நோக்கலான்
அவள்விருப் புணர்தல் குறிப்பறி வென்ப. 5

[எண்வகை மன்றல்]

77. கரணமொடு புணரக் கொடைக்குரி மரபினோர்
கொடுப்பக் கொளற்குரி மரபிற் கிழவோன்
கிழத்தியை வரையும் திருமணமன்றல்
உடன் கொண் டேகிய தலைவன் தலைவியைக்
கொடுப்போ ரின்றிக் கரணமொடு புணரத்
தன்மனை வரையும் நறுமண மன்றல்

கொண்டுதலைக் கழிந்த இடைச்சுரத் துறைவோர்
களவையொடு புரியும் கடிமண மன்றல்
குலமுறை மரபின் உரிமை பற்றிய
வழக்கெடு வரையும் முறைமண மன்றல்
இணையமை யாழோர் தெய்வணமன்றல்
கொல்லேறு தழுவல் முதலாக் குலமுறை
வல்வீறு புரிந்துகொள் அருமண மன்றல்
கூடா மன்னரை வென்றவர் மடந்தையைப்
பீடுற வரையும் பெருமண மன்றல்
அடியோர் வினைவல பாங்கினில் நிகழும்
நெறிமுறைத் தழுவாச் சிறுமண மன்றல்
எனுமிவை எட்டும் தமிழ்மறை பகரும்
மன்றல் என்மனுர் மரபுணர்ந் தோரே 6

[அவை திணைஏழுள் அடங்குமாறு]

78. அவற்றுள்
முதலன நான்கும் பெருந்திணை இடையஃது
ஐந்திணை, பின்னவை மூன்றும் கைக்கிளை
வகையா அமைந்துல கியலா கும்மே. 7

[இயற்கைப்புணர்ச்சி]

79. மெய்தொடப் பயிறல் பொய்பா ராட்டல்
இடையூறு கிளத்தல் தழுவிடங் குறித்தல்
நீடுநினைந் திரங்கல் அன்னவை பிறவான்
தலைவன் கையறவு உணர்ந்த தலைமகள்
அருள்முந் துறுத்த காதலொடு கூடல்
இயற்கைப் புணர்ச்சியென் றியம்புவர் நூலோர் 8

80. உள்ளப் புணர்ச்சியும் ஒக்குமன் ஆங்கே. 9

[இடந்தலைப்பாடு]

81. தென்னற் கண்ட தலைவியைப் பின்நாள்
அவ்விடத் தடைதல் இடந்தலைப் பாடாம். 10

[பாங்கற் கூட்டம்]

82. கழறிய பாங்கனைக் கட்டுரைத் தியலிடம்
பகர்ந்தவன் கண்டுவந் *துரைப்பத் தலைப்படல்
பாங்கற் கூட்ட மரபெனப் பகர்ப. 11

[தோழியிற் புணர்வு]

83. தலைவியின் பாங்காய்த் தகைபெறு தோழியைப்
பற்றமை தலைவன் உற்றுபின் நிற்றலும்
தன்நிலை யுணர்த்தலும் தண்டா திரத்தலும்

கையுறை அளித்தலும் காதலந் தோழி
மறுத்தலும் பொறுத்துப் பின்வா வென்றலும்
பேதைமை யூட்டலும் மதியுடம் பட்டபின்
ஏற்றலும் தலைவியைக் குறைநயந் திருவகைக்
குறியிடங் கூறிக் கூட்டலும் பிறவும்
தோழியிற் புணர்வெனச் சொல்லுவர் நூலோர். 12

[ஒருவழித் தணத்தல்]

84. ஆயத் தையுறவு அகற்றலும் தலைவி
பிரிவாற் றுதலைமுன் தேர்தலும் தலைவன்
சிறுபொழு தகலுதல் ஒருவழித் தணத்தலாம். 13

[தெளித்தல்]

85. ஆற்றாத் தலைவியின் அணிகுழல் திருத்திநிற்
பிரியேன் பிரியின் தரியேன் உயிரெனச்
சூளொடு தலைவன் தேற்றுதல் தெளிவாம். 14

[பாங்கி மதியுடம் பாடு]

86. கோற்றொடி மேனியின் நாற்றமும் தோற்றமும்
உண்டியும் ஒழுக்கமும் செய்வினை மறைப்பும்
செலவும் பயில்வுமுற் றோர்ந்த பின்றைப்
பொய்யினும் மெய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தான்அவள்
களவுப் புணர்ச்சியை முன்னுற உணர்தல்
தலைவன் தன்பால் பின்னின் றிரத்தல்
முதலிய வாகக் குறையுற உணர்தல்
தானும் தலைவியும் உள்வழி ஊரும்
பேரும் கெடுதியும் ஒழிந்ததும் வினாவி
அவன்வர உணர்தலென் றம்மூவகையான்
மனங்கொளல் பாங்கி மதியுடம் பாடாம். 15

[செவிலி ஐயுறல்]

87. களவல ராதலும் கனவின் தலைவி
அரற்றலும் மேனி தளிர்த்தலும் தழுவலை
முனிதலும் தலைவனைப் புனத்தெதிர்ப் படலும்
பிறவும் செவிலி ஐயுறற் கேதுவாம். 16

[அலர் வெளிப்பாடு]

88. புதியோற் புனவழி ஓரோவழிக் கண்டும்
குறிவழித் தலைவி குறுகுதல் ஓர்ந்தும்
ஊர்மக ளிருட்சிலர் எட்டியும் சுட்டியும்
இகழ்ச்சியொ டளாவுதல் அலர்மொழி யாகும்
அம்பல் பழிமொழி என்பவும் அவையே. 17

[வெறியாட்டு]

89. தலைவியின் மெலிவும் உண்டி முதலாய
நிலைமையில் மாற்றமும் கண்டநற் றாயும்
செவிலியும் கவன்று மெய்ம்மை தெரியத்
தெய்வமுற் றுரைக்கென வேலனை யழைத்து
மறிப்பலி யூட்டி முருகற் பராவுதல்
வெறியாட் டெடுத்தல் என்மனார் புலவர் 18

[அறத்தொடு நிற்றல்]

90. கட்டினும் கழங்கினும் வெறியாட் டெடுப்பினும்
உற்றது தெரிந்திட உன்னுந் தாயர்க்கு
மற்றவர் வரைவவர் மனங்கொளும் முன்னர்க்
கற்பறங் கருதிய தலைவி பாங்கிக்கும்
பாங்கி செவிலிக்கும் செவிலிநற் றாய்க்கும்
வெளிப்படை குறிப்பின் மறைபுலப் படுத்தல்
அறத்தொடு நிற்றலென் றறைகுவர் நூலோர். 19

[குறியிடம்]

91. தலைவனைத் தலைவி தனிமையிற் காணச்
சுட்டிய களங்குறி யிடமாம் அதுவே
பகற்குறி இரவுக் குறியென இரண்டாம்,
பயின்று தலைவி பழகிய ஊர்ப்புறப்
பொதும்பரும் சாரலும் பகற்குறிக் குரியன
மனையகத் தெல்லையும் மதிலின் புறமும்
இரவுக் குறியிடம் ஆகும் என்ப. 20

[அல்லகுறிப்படுதல்]

92. இரவுக் குறிவரும் தலைவன் தான்தன்
வருகை உணர்த்தப் புரியடை யாளம்
பிறிதான் நிகழ்வுழி அறிவுதலை மயங்கி
வறிதே தலைவி மீளலும், பின்புகும்

தலைவன் தலைவியைக் காணாது மீளலும்
அல்லகுறிப் படுதலென் றியம்புவர் புலவர். 21

[வரைவுகடாதல்]

93. தலைவன் வரும்வழி நிகழ்ஊ றஞ்சியும்
வருந்தொழிற் கருமையும் அம்பலும் தாயர்
இற்செறிப் பெண்ணலும் பிறர்வரை வஞ்சியும்
முறையொடு வரையத் தோழி தலைவனை
முடுக்குதல் வரைவு கடாதல் என்ப. 22

[வரைபொருட் பிரிவு]

94. தன்தா ளாண்மையும் தகவும் தலைவிக்கு
உரிய பரியப் பொருளுங் கருதி
ஈட்டுதற் பொருட்டுத் தலைவன் ஏகுதல்
வரைபொருட் பிரிவதற் கெல்லையொரு திங்களே. 23

[தலைவன் வருந்தொழிற் கருமை]

95. இரவுக் குறிவரும் நெறியும் நெறியிடை
நேருந் தடைகளும் தாய்துஞ் சாமை
ஊர்துஞ் சாமை நாய்துஞ் சாமை
காவலர் கடுகுதல் நிலவுவெளிப் படுதல்
கூகை குழறுதல் கோழிகுர லெழுப்பல்
அனையபல் முட்டுப் பாடும் பிறவும்
தலைவன் வருந்தொழிற் கருமை என்ப 24

[மடற்கூற்று]

96. உலகியல் கூறித் தோழி விலக்கலும்
தலைவிதமர் வரைவு மறுத்தலும் தலைவன்
மடற்கூற் றெழுப்புதற் கேது வாகும். 25

[உடன்போக் குரைத்தல்]

97. இற்செறித் தன்னையர் காப்பினும் தலைவற்கு
வரைவு மறுப்பினும் ஓம்படை கூறிக்
கொண்டுதலைக் கழிகெனத் தோழி தலைவற்கு
இயம்புதல் உடன்போக் குரைத்த லாகும். 26

[சுரத்தருமை கூறல்]

98. உடன்போக்கு வலிக்கும் தோழிக் கருஞ்சுரம்
கடத்தற் கருமையும் தலைவியது மென்மையும்
தலைவன் சாற்றுதல் சுரத்தருமை கூறலாம். 27

[கற்பு வலியுறுத்தல்]

99. அலர்மொழி யஞ்சி அன்னையர் பிறன்வரை
வுடப்பட நேரின் மடம்படு தலைவி
பெரும்பிறி துறுமவட் பேணுதல் கடனெனப்
பாங்கிஎடுத் துரைத்தல் கற்புவலி யுறுத்தலாம். 28

[உடன்போக் கேற்றல்]

100. அன்னையர் வெஞ்சொலின் அருஞ்சுரந் தண்ணிதென்
றுன்னிய தலைவி உடன்செல வலித்தல்
உடன்போக் கேற்றல் என்மனார் புலவர். 29

[ஓம்படை]

101. எந்நிலை யுறினும் இளமை தளரினும்
பேதையைப் பிரியாக் காதலொடு வாழ்கென
ஒன்றிய தோழி உரைத்தல்ஓம் படையாம். 30

[செவிலி புலம்பல்]

102. மடம்படு தலைவி உடன்போ கியவழிக்
கையறு செவிலி புள்ளொடும் மரனொடும்
அரற்றலும் அருஞ்சுரக் கடுமை யஞ்சலும்
தேடிப்பின் செல்லலும் கலந்துடன் வருவோர்க்
கண்டு கேட்டலும் முக்கோற் பகவரை
வினாதலும் ஆங்கவர் உலகியல் கூறி
விடுத்தலும் கலங்கிக் கண்டோர் பாங்கினும்
தோழி மருங்கினும் உசாவலும் இயற்கையை
வேண்டலும் பிறவும் செவிலி புலம்பலாம். 31

[கற்பொடுபுணர்ந்த கௌவை]

103. உடன்போய தலைவியை மீட்டு வரற்கவள்
தன்னையர் வெகுண்டு படையொடு புக்குழி
அவரொடு சாராது தலைவனை யடுத்து
நிற்பது காணும் இடைச்சுரத் துறைவோர்
கற்புவழிப் பட்டனள் பொற்றொடி அவளைத்
தலைவனொடு பொருத்துதல் தகவென ஐயர்க்கு
ஒருங்கெடுத் துரைக்கும் உவகைக் கம்பலை
கற்பொடு புணர்ந்த கௌவை என்றுரைப்பர். 32

[வரைதல்]

104. கொண்டுதலைக் கழிந்தவன் தன்மனை வரைதல்
மீண்டுவந் தவள்மனை வரைதல் இடைச்சுரத்து

எயிற்றியர் இல்லத்து மணத்தல் கொடைக்குரி
மரபினோர் கொடுப்பக் கரணமொடு வரைதல்என்று
ஒருநால் வகைப்படும் களவின் முடிபாய்க்
கற்புவழிப் படூஉம் வரைத லாறே. 33

[களவின்கண் கூற்றிற்குரியோர்]

105. தலைவன் தலைவி தோழி செவிலி
பார்ப்பார் கண்டோர் பாங்கனவ் எழுவரும்
களவினனிற் கூற்று நிகழ்த்தற் குரியரே 34

[அவர் கூற்று நிகழ்த்தும் முறைமை]

106. இயற்கைப் புணர்ச்சி முதல்வரைவு ஈறா
வகைப்படுத் தோதிய கிளவிக ளிடத்தந்
நிகழ்விற் கேற்பத் தலைவனொடு பாங்கனும்
தலைவி தோழி பாங்கனொடு தலைவனும்
தலைவன் தோழியொடு தலைவியும் ; தலைவன்
தலைவி செவிலியொடு தோழியும், செவிலி
பார்ப்பார் நற்றாய் தோழியொடுங் கண்டோர்
பார்ப்பார் செவிலியொடும் கண்டோர் தம்முளும்
பிறரொடும் முறையான் அளவுதல் நெறியே. 35

[சிலமரபுகள்]

107. பிரிவிடை ஆற்றாத் தலைவி பெருந்திணைப்
பாங்குற நெஞ்சொடும் அஃறிணைப் பொருளொடும்
சான்றோர் தம்மொடும், மகட்போக் கியதாய்
அஃறிணைப் பொருளொடும், வரைவு மறுப்புழி
மடற்மேற் றலைவன் நெஞ்சொடும், சான்றோர்
தம்மொடும் இரங்கிக் கூறுதல் மரபே. 36

108. மகளிர் மடற்கூற் றியற்றல் ஏறுதல்
தகவுடைத் தில்லெனச் சாற்றுவர் நூலோர் 37

109. தலைவன் தலைவியைக் கொண்டுதலைக் கழிவுழி
கலத்திற் சேறல் புலனெறி யன்றே. 38

[புறனடை]

110. மரபுநிலை திரியா மாட்சி யவாகி
விரவும் பொருளறிந் தேற்பன கொளலே, 39

## [ கற்பொழுக்கம் பொதுவியல்பு ]

111. பொற்பமை சிறப்பின் கற்பெனப் படுவது
நால்வகை நெறியிற் பால்வழி மணந்த
கிழவனும் கிழத்தியும் நெஞ்சுதளை யவிழ்ந்து
கூடியின் புறுதலும் அன்பறஞ் சமைந்த
மனையற வாழ்க்கையை இனிதின் இயற்றலும்
குடிவழி மரபினும் கோன்முறைப் பாங்கினும்
கெழுமிய காமக் கிழத்தியர் பரத்தையர்
கேண்மையிற் றலைவன் அகல்தலும் அவரொடு
ஏமுறு விளையாட் டியற்றலும் தலைவி
ஊடலும் தலைவன் பணிமொழி கூறி
உணர்த்தலும் உணராத் தலைவியைத் தலைவன்
புலத்தலும் வாயில் வேண்டலும் விடுத்தலும்
மறுத்தலும் நேர்தலும் மகப்பழித்து நெருங்கலும்
கண்ணிய காமக் கிழத்தியர் செய்தியும்
பாற்பட அமைந்த நாற்பா லாரும்
ஏற்புறு நெறியான் ஓதல் பகையே
தூதுதுணை காவல் பொருள்வயிற் பிரிதலும்
மாதர்சால் தலைவி மனையிருந் தாற்றலும்
செலவிடை யழுங்கலும் செய்பொருள்முற்றி
மீண்டுவரு காலை பாகனொடு பகர்தலும்
அருந்தொழில் முடித்த செம்மலைத் தலைவி
விருந்தொடு போற்றி மகிழ்தலும், சுற்றம்
போற்றலும் நல்வினை யாற்றலும் வழங்கலும்
காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு சிறந்தது பயிற்றலும்
ஒப்புர வறிதலும் ஒத்தன பிறவும்
புகழொடு பொருந்திய தகவின தென்ப.

## [ இல்வாழ்க்கை ]

112. களவின் ஆற்றிய தலைவியைத் தலைவன்
போற்றலும் அந்தணர் சான்றோர் திறத்தவள்
ஒழுகுமா றுணர்த்தலும் ஏனது சுவைப்பினும்
நீகை தொட்டது வானோ ரமிழ்தம்
புரையுமென்ற டிசிலும் பூவுந் தொடுதலும்
புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின்
நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி
ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும்

செய்பெரும் சிறப்பொடு சேர்தலும், தெய்வம்
வாழ்த்தலும் தோழியைப் புகழ்ந்துபா ராட்டலும்
மணமனை வந்த செவிலி மகிழ்தலும்
விருந்துபுறந் தருதலும் அன்னவை பிறவும்
மனையற வாழ்க்கையின் மாண்பென மொழிப. 40

[ ஊடல் ]

113. பொழில்புனல் விளையாட் டிறைவிழாப் புரிந்து
வைகறை மனைவரும் தலைவனைப் பரத்தமை
ஏற்றித் தலைவி முனிதலும் மறுப்புழிப்
புதல்வனைப் பரத்தைந் புல்லியது சாற்றலும்
பரவிய கிழவனைப் பழித்தலும் எங்கையர்
காணின் நன்றென இகழ்தலும் புலத்தலும்
தொடுதல் ஓம்பெனக் கடிதலும் பிறவும்
ஊடலின் உவத்தெலென் றோதுவர் புலவர் 41

[ வாயில் வேண்டலும் விடுத்தலும் ]

114. உணர்த்த உணரா ஊடலுற் றோள்வயின்
புணர்த்தல் வேண்டிப் போக்கிடும் பாணர்
பாடினி கூத்தர் இளையர் பாங்கி
விறலிஎன் றின்னவர் வேண்டலும் மறுப்புழி
புதல்வனொடு அணுகலும் விருந்தொடு புகுதலும்
ஆற்றாமை கூறி அடைதலும் பிறவும்
வாயில் வேண்டலாம் மற்றவர் தமையே
தூது விடுத்தலும் அதுவென மொழிப. 42

[ மகப்பழித்து நெருங்கல் ]

115. தன்மகன் வாயிலா முன்வரக் கண்டவள்
தந்தையை ஒத்தனை தகவிலி போலுமென்று
அணுகுவது மகப்பழித்து நெருங்க லாகும். 43

11. கிழவோள் பிறள்குணம் இவைஎனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள். 44

[ காதற்பரத்தையர் எனல் ]

117. உணர்வொடு வேட்கையான் மக்கட் பிறப்பினர்
ஒப்பவ ராயினும் ஒழுக்கம்அறி வாற்றலான்
மேற்கொளும் வினையான் தகுதிவேறு படுதல்
உலகியல்பு அதுவே உலகியங் குதற்கும்
காரண மாதலின் காட்சியிற் சிறந்துநற்

சிந்தை அறநெறி ஒழுக்கத் துயர்ந்த
அந்தணர், மன்னுயிர்க் காவல் செய்தளிக்கும்
அருந்துப் பமைந்த அரசர், விளைபொருள்
தொகுத்ததைத் துலையென வழங்குநல் வாணிகர்
உலகவர் வாழ உழுதுணா விளைக்கும்
வேளாண் மாந்தரெனத் தொழில்வழி மக்களை
நாற்பாலாக வழங்குவர் ஏனையோர்
வினைவலர் அடியர்என் றியம்புவர் நூலோர். 45

[ பிரிவும் அதற்குரியோரும் ]

118. வினைகா ரணமாப் பிரிந்தநாற் பால்வழி
வழிமர பாய்க்குலம் வழங்குதல் வழக்கவர்
புறத்திணை ஒழுக்கிற் குரியவை பிரிவே. 46

119. திணைநிலைப் பெயரான் தெரித்தோர் யாவரும்
வினைவயின் நாற்பாற் பிரிவினுள் அடங்குவர். 47

[ பிரிவுவகை ]

120. வேற்றுமை தெரித்த நாற்பா லாரும்
மனையின் நீங்கி கடமைமேற் சேறல்
மேதகு கற்பிற் பிரிவாம் அதுவே
ஓதல் பகையே தூது துணை காவல்
பொருள்வயிற் பிரிவென அறுவகைப் படுமே. 48

[ ஓதற்பிரிவு ]

121. அருமறைக் கல்வி அந்தணர்க் குரித்து
மற்றைய கல்வி யாவர்க்கும் உரித்தது
யாண்டுமூன்று எல்லையுள் நிகழும் என்ப. 49

122. நோன்புதவ ஒழுக்கத் துயர்ந்துசெந் தண்மை
ஆன்றவர் அந்தணர் ஆகற் குரியரே. 50

[ ஐயமகற்றல் ]

123. மறையோர் அந்தணர் பார்ப்பார் நீத்தோர்
ஐயரிவை ஒருபொருள் செய்யுமிட முண்டே. 51

[ பகைவயிற்பிரிவு ]

124. பகைவயிற் பிரிவு வேந்தர், வேந்தரின்
ஆணைவழிப் படுவோர் யாவர்க்கு முரித்தே. 52

[ தூது-துணை ]

125. தூதும் துணையும் அதனோ ரற்றே 53

[ காவற்பிரிவு ]

126. அறப்புறங் காவல் நாடுகா வல்எனக்
காவற் பிரிவிரு வகைத் தவை யிரண்டும்
அரசர்க் குரிய அறப்புறங் காவல்
தகுதியான் யாவர்க்கும் உரிய வென்ப. 54

[ கால எல்லை ]

127. ஐவகைப் பிரிவுமோர் யாண்டினதகமே. 55

[ பொருட்பிரிவு ]

128. பொருள்வயிற் பிரிவு வேந்தரைத் தவிர்ந்த
ஏனையோர்க் குரித்தென இயம்புவர் நூலோர். 56

129. அந்தணர்க் கோதல் ஓது வித்தலும்
வேட்டல்வேட் பித்தலும் பொருட்பிரி வாகும். 57

130. வினைவலர் அடியோர் மேலவர் உடன்செலின்
அவ்வப் பிரிவுகள் அவர்க்கும் உரியவாம். 58

131. பகைவயிற் பிரிவுழி பரத்தையர் அல்லது
எண்ணரும் பாசறை பெண்ணொடு புரியார். 59

[ பரத்தையிற் பிரிவு ]

132. ஒருமனை யகத்தும் ஒரு ருள்ளும்
அகலுத லன்றி நாடிடை யிட்டும்
காடிடை யிட்டும் பிரித லன்மையின்
பரத்தையிற் பிரிவெனல் உபசார வழக்கது
பொற்புறு மனைவி பூப்புறு நாளினும்
புதல்வற் பயந்த புனிறமை பொழுதினும்
குடிவழி மரபின் காமக் கிழத்தியர்
விளையாட்டு விழவுனுள் விருந்தியற் பரத்தையர்ப்
புரந்தளி புரியும் கடமையொடு தலைவன்
கேண்மையி னகலும் கிழமைத் தாகும். 60

[ கற்பின்கண் கூற்றிற்குரியோர் ]

133. தலைவன் தலைவி தோழி விறலி
பாணர் கூத்தர் பரத்தையர் இளையோர்
கற்பினிற் கூற்று நிகழ்த்தற் குரியரே. 61

[ கூற்று நிகழ்த்தும் முறைமை ]

134. களவுகற் பெனுமிரு கைகோள் வகையான்
புகல்வுறும் அகத்திணைச் செய்யுளத் திணைக்குரி
மாந்தர் கூற்றாக நிகழுதல் புலனெறி
வழக்கவர் கூற்றினுள் உவமம் இறைச்சி
சுட்டுநகை சிறப்பெனும் ஐவகை உள்ளுறை 62
திணையுணர் கருவியாச் சிறக்கும் என்ப.

[ உவமஉள்ளுறை ]

135. தெய்வந் தவிர்ந்த கருப்பொருள் வண்ணனை
உரையுனுள் தலைவன் தலைவி தோழி
பரத்தையர் தம் கருத் தகத்துறப் பேசுதல்
உவமஉள் ளுறையஃது உவமப் போலி
உள்ளுறை யுவமமென் றுரைக்கவும் பெறுமே. 63

[ இறைச்சி உள்ளுறை ]

136. உரிப்புறத் ததுவாய் அஃறிணைப் பொருள்களின்
செயல்களி னிடமாய் உடனுறை யாக
இலங்கும் குறிப்புரை இறைச்சியிற் பொருளே. 64

[ உள்ளுறை உவமம் இறைச்சிவேறுபாடு ]

137. நிகழ்ந்ததும் நிகழ்வதும் பிறழா துணர்த்தல்
உள்ளுறை யுவமம் கருதியது குறித்தல்
இறைச்சிஇவ் விரண்டும் ஒருங்குறல் உண்டே. 65

[ சுட்டு உள்ளுறை ]

138. உவமமும் இறைச்சியும் போலாது எண்ணியது
தெற்றென விளங்கப் பொருளும் பொருள்களின்
செயலும் அடிப்படை யாகக் குறிப்பொடு
சொல்லுதல் சுட்டெனும் உள்ளுறை யாகும். 65

[ நகை உள்ளுறை ]

139. எள்ளலும் இழித்தலும் கருவியாகக்
கண்ணிய கருத்தகத் தமையநகை யாட்டாய்
நவிலுதல் நகையெனும் உள்ளுறை யாகும். 66

[ சிறப்பு உள்ளுறை ]

140. சூழ்நிலைக் கொவ்வா நேர்ச்சியடிப் படையில்
பாராட் டுரையாய் முன்னிலைக் கண்ணே
குறிப்பொடு கிளத்தல் சிறப்புள் ளுறையாம். 67

[ புறத்திணையுள் கூற்று முறைமை ]

141. புறத்திணைச் செய்யுள் அத்திணைக் குரிய
மாந்தர்கூற் றாகவும் புலவர்கூற் றாகவும்
அணியொடும் குறிப்பொடும் அறையப் படுமே. 69

## அகப்பொருள் மாந்தர் இயல்புகள்

[தலைவன் தலைவி ]

142. தலைவன் தலைவி இயல்புமேற் கிளந்தன. 70

[ தோழி ]

143. குடிமர பாகநற் றாயின் பாங்கியாய்
தந்தைக் குரிமையொடு வந்த செவிலியின்
மகளாய்த் தலைவியொடு பாலுடன் உண்டு
சிற்றில் முதலாயவை முற்றவிளை யாடிப்
பற்றொடு வளர்ந்த கற்றறி உடையளாய்க்
களவுமுத லாகக் கற்பீ றாகத்
தலைவன் தலைவியொ டுடனிருந் துரிமையான்
எல்லா நிலையினும் இருவர்க்குத் துணையாச்
சொல்லிய முறையான் நல்லாற்றுப் படுத்தல்
தோழியின் இயல்பெனச் சொல்லுவர் நூலோர். 71

[செவிலி]

144. நற்றாய்க் கமைந்த தோழியாய்க் கடம்பூண்டு
தாய்போற் கழறித் தலைவியைப் பேணலும்
கட்டுக் காணலும் வெறி, குறி வேண்டலும்
உடன்போ கியவழி இடம்படப் புலம்பிச்
சுரத்திடைத் தேடிச் செல்லலும் தலைவன்
மணந்தமை ஈன்றாட் குணர்த்தலும் தலைவியின்
இல்லற மாண்பினைச் சொல்லி மகிழ்தலும்
தோழியொடு உசாவிச் சூழ்தலும் நல்லவை
உரைத்தலும் அல்லவை கடிதலும் பிறவும்
செவிலியி னியல்பெனச் செப்புவர் புலவர். 72

[ பாங்கர் ]

145. அகத்திணைத் தலைவற் கறிவுமுந் துறுத்த
உடன்துணை யாதலும் உற்றது வினாதலும்
இடனறிந் துரைத்தலும் கடனறிந் தாற்றலும்
நண்பமை பாங்கர்க் கியல்பென மொழிப. 73

[இளையோர்]

146. தலைவனைப் பயந்த தந்தையின் காமக்
கிழத்தியர் மக்களாய்க் கேண்மையொடு தலைவற்கு
உசாத்துணை யாகி உடனிருந் துதவலும்
ஏவல் முடித்தலும் புலவி தணித்தலும்
பிறவும் இளையோர்க் கியல்பென மொழிப. 74

[பாணர் முதலானோர் இயல்பு]

147. தொல்லவை உரைத்தல் நுகர்ச்சி ஏத்துநல்
ஊடலிற் றகைத்தல் உறுதி விளம்புதல்
அறிவுமெய்ந் நிறுத்தல் அணிநிலை உரைத்தல்
மீண்டுவரு தலைவன் வரவுகண் டுரைத்தல்
அன்ன பிறவும் தொன்முறை நெறியான்
கூத்தர் பாணர் விறலிமுத லாயவர்.
இயல்பென மொழிப நயனறிந் தோரே. 75

[பரத்தையர்]

148. கிழவனொடு கிழத்தியை இகழ்தலும் தம்மைப்
புகழ்தலும் தலைவனைக் கழறலும் பிறவும்
பரத்தைய ரியல்பெனப் பன்னுவர் நூலோர். 76

[காமக் கிழத்தியரியல்பு]

149. குடிமுறை மரபின் பாங்குறு தலைவனைப்
புல்லியின் புறத்தலும் புலவியின் மயக்கலும்
இன்னகைப் புதல்வனைத் தழுவிஇழை பூட்டிக்
களித்தலும் கடமையிற் சோர்வுழித் தலைவனைத்
தாய்போற் கழறித் தலைவியொடு பொருத்தலும்
பாங்காயி னார்வழித் தலைவியைப் பழித்தலும்
பண்ணையிற் றிளைத்தலும் அன்ன பிறவும்
கண்ணிய காமக் கிழத்திய ரியல்பே. 77

[அறிவர் - பார்ப்பார்]

150. அறநெறி யுணர்த்தலும் ஆற்றுப் படுத்தலும்
அறிவர் பார்ப்பார்க் குரியவை என்ப. 78

[ சிலமரபுகள் செலவழுங்குதல் ]

151. அன்புறு தலைவிக்கு வன்புறை குறித்துச்
செலவிடைத் தலைவன் இல்லத் தழுங்கலும்

அலமரல் நெஞ்சம் அமைவுறல் கருதி
இடைச்சுரத் தழுங்கலும் இயற்கை, மற்றவன்
ஆள்வினைக் ககல்தலைத் தவிர்வா னல்லன் 79

152. வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை
கருப்பொருட் காட்சியாற் காதலிற் சிறந்து
சுரத்திடை தவிர்தல் செய்யாது விரைகுவன்
உள்ளம் போல உற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா உடைமை யான. 80

[ புறனடை ]

153. களவினும் கற்பினும் கிளந்தவை யன்றிச்
சொல்லாத வற்றையும் தொல்லோர் நூல்வழி
முற்றவுணர்ந் துரைத்தல் கற்றவர் கடனே. 81

## 4. சுவை (மெய்ப்பாட்டு) இயல் *

[ இயலிசை நாடகச்சுவையின் பொதுவிலக்கம் ]

154. சுவையெனப் படுவது நவையற நாடின்
நாடகக் கலைஞர் நடிப்பினும் உரையினும்
நாட்டியக் கலைஞர் அபிநயக் கூத்திலும்
கண்ணொடு செவிவழிக் கதிர்த்தெழும் உணர்வும்
யாழினும் குழலினும் குரலினும் இசைஞன்
இயம்பும் பாவினும் இசையினும் செவிவழி
உளத்தெழும் உணர்வும் இலக்கிய ஆசான்
பா உரை செய்யுளிற் புனையும் வருணனை
கருதுகோள் இலக்கிய மாந்தர் உரை செயல்
ஆயவை நோக்கிப் பயில்வோர் சிந்தனை
வாயிலா எழும்மன உணர்வும் சுவையஃது
இரசம்மெய்ப் பாடௌ இருதிறப் படுமே. 1

[ இரசம் - மெய்ப்பாடு ]

155. நாடக நாட்டியக் கலைஞர் இயற்றும்
அரங்கக் காட்சியான் எய்தும் உணர்வுகள்
இரசமாம் இலக்கிய வாயிலா மனத்தெழும்
உணர்வுமெய்ப் பாடாம் சுவையெனல் பொதுவே. 2

* ஈண்டுக்கூறப்பெறும் சுவையிலக்கணம் படைப்பிலக்கியத்திற்கு மட்டுமே. மேடை நாடக நாட்டியம் இசைபற்றிய அபிநயங்களும் அவற்றிற்குரிய சுவையும் பற்றி அவ்வந்நூல்களுள் கண்டுகொள்க,

[நாடகச் சுவை]

156. நாடகச் சுவைதான் சுவைப்பொருள் சுவைப்போர்
சுவைக்கும் நெறியவன் வெளிப்படுத் தும்விறல்
வாயிலாக் காண்பவர் பால்வந் தெழுப்பும்
வீரமுத லாயஒன் பான்உணர் வென்ப. 8

157. பொருநர்தம் நடிப்புரை யான்நனி புலப்படும்
வீரம் அச்சம் வியப்பிழிவு காமம்
அவலம் நகைசினம் சாந்தம் ஒன்பதும்
இரசமெனும் நாடகச் சுவையென மொழிப
அன்பு பொருளவா பத்தியொடு கூட்டிப்
பன்னிரு திறனாப் பண்ணுவர் ஒருசார். 4

[இலக்கியச்சுவை அமைப்பு]

158. பிண்ணணிக் காட்சி வண்ணனை நாடக
மாந்தர்உரை யாட்டினைச் சார்ந்துநவ ரசமும்
விளங்கப் புனைதலவ் ஆசான் திறனே. 5

[கூத்து - நாட்டியச்சுவை]

159. பல்வகைக் குணஞ்செயல் காரணமா எழும்
ஊக்கம் அமைதி ஒழுக்கம் இச்சை
தேக்கம் குறுக்கம் திணக்கம் மயக்கம்
நாடகக் குரியமுந் நான்கொடும் கூடி
வருவன நாட்டியச் சுவையென மொழிப. 6

[அதன் இலக்கிய அமைப்பு]

160. அவிநய நாடக நாட்டியக் கூத்தினுள்
பின்னணி யாகவும் தம்குர லாகவும்
இசைக்கும் பாவினுள் ஏற்ற சுவையெலாம்
பண்ணொடு பொருந்தப் படைத்தல் வேண்டும் 7

[இலக்கியச் சுவை]

161. இலக்கியச் சுவைதான் எள்ளல் முதலாப்
பல்வகைக் குணனும் செயலும் பற்றிப்
பயில்வோர் உளத்திற் சூழ்ந்தவ் வுணர்வினை
நகைமு தலாயஎண் மெய்ப்பா டாகத்
துய்த்திடச் செய்யும் யாப்பின தமைவே. 8

### [மெய்ப்பாட்டுத் தொகை]

162. பல்வகைப் பாத்திரப் பண்பும் செயலும்
உணர்வும் ஏதுவா நுண்ணிதின் அகத்தெழும்
நகையே அழுகை இளிவரல் மருட்கை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று
ஆங்கவை எட்டே மெய்ப்பா டென்ப. 9

### [ அகம்புறம் இரண்டற்கும் பொதுவாய மெய்ப்பாட்டுப் பொருள்கள் ]

163. எள்ளல் இளமை பேதைமை மடனே
இளிவே இழவே அசைவொடு வறுமை
மூப்பே பிணியே வருத்தம் மென்மை
புதுமை பெருமை சிறுமையொ டாக்கம்
அணங்கே விலங்கே கள்வர் தம்மிறை
கல்வி தறுகண் புகழ்மை கொடைமை
உறுப்பறை குடிகோள் அலைத்தல் கொலையே
செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டெனும்
எண்ணான்கு வகையும் நிரலே நகை முதல்
மெய்ப்பா டெட்டும் தோன்றுதற் குரிய
பொருளாய் அகம்புறம் இரண்டினும் வருமே. 10

### [புறத்திணைக்குச் சிறந்த பொருள்கள்]

164. உடைமை இன்புறல் நடுவுநிலை யருளல்
தன்மை அடக்கம் வரைதல் அன்பெனா
கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்
நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவெனா
முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை
கருதல் ஆராய்ச்சி விரைவே உயர்ப்பே
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொறாமை
வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கென்பவை
புறத்திணைக் குகந்தமெய்ப் பாட்டுப் பொருளே 11

### [ அகத்திணைக் களவிற்குரிய மெய்ப்பாட்டுப் பொருள்கள் ]

165. புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்
நகுநயம் மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மை
கூழை விரித்தல் காதொன்று களைதல்
ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தல்
அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்
இல்வலி யுறுத்தல் இருகையு மெடுத்தல்
பாராட் டெடுத்தல் மடந்தப உரைத்தல்

கூற்றலர் நாணல் கொடுப்பவை கோடல்
தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி உவத்தல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தலென்று
இருபான் நான்கும் அகத்திணைக் களவிற்கு
உரியமெய்ப் பாட்டுப் பொருளென ஓதுப. 12

[ களவுகற்பிற்குப் பொதுவானவை ]

166. இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்
எதிர்பெய்து பரிதல் ஏத மாய்தல்
பசியட நிற்றல் பசலை பாய்தல்
உண்டியிற் குறைதல் உடம்புநனி சுருங்கல்
பொய்யாக் கோடல் மெய்யே என்றல்
ஐயஞ் செய்தல் அவன்றம ருவத்தல்
அறனழித் துரைத்தல் அங்குநெஞ் சழிதல்
எம்மெய் யாயினும் ஒப்புமை கோடல்
ஒப்புவழி உவத்தல் உறுபெயர் கேட்டல்
கலக்கமென் றிருபதும் கைகோ ளிரண்டினும்
வருதற் குரிய பொருளென மொழிப. 13

[கற்பிற்குரியவை]

167. முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்
அச்சத்தி னகறல் அவன்புணர்வு மறுத்தல்
தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்
காதல் கைம்மிகல் கட்டுரை யின்மை
தெய்வ மஞ்சல் புரையறந் தெளிதல்
இல்லது காய்தல் உள்ளது உவர்த்தல்
புணர்ந்துழி உண்மைப் பொழுதுமறுப் பாக்கம்
அருள்மிக உடைமை அன்புதொக நிற்றல்
பிரிவாற் றாமை மறைந்தவை யுரைத்தல்
புறஞ்சொல் மாணாக் கிளவியென வருவன
கற்பிற் குரியமெய்ப் பாட்டுப் பொருளாம். 14

[ அகனைந்திணைக்கு ஆகாதவை ]

168. நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி
வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போ டொப்புமை
என்றிவை உலகியல் ஆயினும் அன்பின்
ஐந்திணைக் காகா என்மனார் புலவர் 15

[புறனடை]

169. ஆகாதனசில பொருந்திணைப் பாலவாய்
உரைப்பா நாடகம் சிற்றிலக் கியங்களில்
இழிந்தோர் வழக்கா இயம்பப் படுமே. 16

170. கண்ணினும் செவியினும் நுண்ணறிந்தின் உணர்வோர்க்
கல்லது சுவைப்பயன் கொள்ளுதற் கரிதே. 17

## 5. அணியியல்

[ பொதுவியல்பு ]

171. கருதிய பொருளை வெளிப்படுத் தற்குக்
கருவியாம் சொற்களைத் தேர்ந்துகொண் டவற்றைத்
தொடுக்கும் முறையினும் வடிவுகொள் உருவம்
கொடுக்கும் முறையினும் குறித்த பொருளைக்
கொள்வோர் நிலையினைக் கருதியவர்க் கேற்பக்
கூறும் முறையினும் தன்னறி வாற்றல்
தகவகத் தொளிர இருவகைக் கிழமையின்
மலைவறப் புனைந்து வழுவறத் தோற்றுதல்
கலைதலம் விரிக்கும் அணியியல் என்ப. 1

[ அணிவகை ]

172. கொள்வோர் நிலைதெரிந் தியற்றும் **குணவணி**
தந்தக வொளிரக் கவினொடு கற்பனை
சிந்தையுள் மிளிரச் செய்யும் **பொருளணி**
விற்பனம் தோன்றச் சொற்களை மிடையும்
**சொல்லணி** எனமுத் திறப்படு மதுவே. 2

[ குணவணி ]

173. இனிமை எளிமை மென்மை ஒழுகிசை
தெளிவு கவர்ச்சி உய்த்தலிற் பொருண்மை
இலக்கணைக் குறிப்பு செறிவு முதலிய
சொற்பொருள் நடையினைக் குணவணி என்ப,
குணவணி எண்வகை வனப்பின் பாற்படும். 3

[ பொருளணி இயல்பு ]

174. தன்மை உவமும் உருவகம் முதலாக்
கருத்தினைக் கற்பனைக் கலைநயம் தோன்றப்
புனைந்து கூறுதல் பொருளணி யாகும். 4

[ அதன்வகை ]

175. தன்மை நவிற்சி உவமம் உருவகம்
முன்ன விலக்கே வேற்றுப்பொருள் வைப்பு
வேற்றுமை விபாவனை தற்குறிப் பேற்றம்
ஒட்டே அதிசயம் ஏது நுட்பம்
இலேசம் சமாயிதம் புணர்நிலை அவநுதி
உதாத்தம் ஒப்புமைக் கூட்டம் சிலேடை
விசேடம் அற்புதம் ஐயம் நிதரிசனம்
பரியா யம்பரி வர்த்தனை சுவையே
வஞ்சப் பகழ்ச்சி மாறுபடு புகழ்நிலை
கலவை பாவிகம் எனுமா றைந்தும்
நலமிகு சிறப்பின் பொருளணி யாகும். 5

176. அந்தாதி இரட்டை அளபெடை முரண்தொடை
நிரல்நிறை தீவகம் பின்வரு நிலையிவை
சொற்றொடர் பற்றிய பொருளணி யாகும். 6

[தன்மை நவிற்சி]

177. அவற்றுள், பொருள்குணம் சாதி தொழிலிடம் காலம்
ஆயவற் றியல்பினைப் புனைந்துரை யின்றித்
தகவுற விளக்குதல் தன்மையணி யாகும். 7

[உவம அணி]

178. காதல் சிறப்போ நலன்வலி இழிபொடு
மெய்ப்பாட் டுணர்வுகள் நிலைக்கள னாக
வினைபயன் மெய்உரு எனும்நால் வகைத்தாய்
விரவியும் தனித்தும் பொதுப்பண் புருபிவை
விரிந்தும் தொக்கும் மரபிற் றிரியாது
இருதிணை ஐம்பால் முதல்சினை உறழ்ந்தும்
உற்ற துணரப் பொருளொடு பொருந்தி
உள்ளுறை உவமம் ஏனை உவமமென
உளங்கொள வருவது உவமமா மென்ப. 8

179. உள்ளுறை உவமம் மேற்கிளந் தன, பிற
ஏனை உவம மாமவற் றுருபுகள்
அன்ன எய்ப்ப ஒப்ப உறழ
என்ன மான என்ற ஒன்ற
எள்ள விழைய இறப்ப நிகர்ப்ப
புல்லப் பொருவ கடுப்ப மதிப்ப
பொறப்பப் புரைய நேரத் தகைய
என்பவும் பிறவும் ஆகும் என்ப. 9

[ அதன் வகை ]

180. பல்பொருள் விகாரம் மோகம் அபூதம்
இதர விதரம் சமுச்சயம் உண்மை
புகழ்தல் நிந்தை மறுபொருள் நியமம்
ஐயம் தெரிதரு தேற்றம் இன்சொல்
ஏலா மாலை பொதுநீங் குவமைஎன்று
அன்னபிற வாக அமைந்துவரு மதுவே. 10

181. அற்புதம் சிலேடை அதிசயம் விரோதம்
ஒப்புமைக் கூட்டம் தற்குறிப் பேற்றம்
ஏதுவிலக் கணியொடு மேவியும் வருமே. 11

[ உருவக அணி ]

182. உவமமும் பொருளும் ஒன்றுபட உரைத்தலும்
பொருளையே உவமமாப் புகறலும் ஆகிய
மறைமுக உவமம் உருவக மாகும். 12

183. ஆங்கவை விரிவுழி ஆக்கச் சொல்லொடு
வருமதைப் பண்புரு பெனல்மர பாமே. 13

[ அதன் வகை ]

184. தொகைவிரி இயைபே அமைதி அவயவம்
அவயவி ஏகம் உருவக உருவகம்
அனேகாங்கம் முற்றென வகைப்படு மதுவே
உவமம் ஏது வேற்றுமை விலக்கே
அவநுதி சிலேடையென் றவற்றொடும் வருமே. 14

[ முன்னவிலக்கு ]

185. பொருள் குணம் காரணம் காரியம் காலச்
சார்புறும் வினைகளைக் கூற்றினும் குறிப்பினும்
முறையொடு மறுப்பது முன்ன விலக்கே. 15

[ அதன்வகை ]

186. வன்சொல் வாழ்த்து தலைமை இகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவசம் உபாயம்
கையறல் உடன்படல் ஐயம் இரங்கல்
வெகுளியெனும் வகையிலவ் விலக்குரை நிகழ்மே. 16

187. அதுவே
வேற்றுப்பொருள் சிலேடை ஏதுவி னும்வரும் 17

[ வேற்றுப்பொருள் வைப்பு ]

188. முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்னொரு பொருளை உலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே. 18

[ அதன்வகை ]

189. முழுவதும் சேரல் சிலசெலல் முரணுதல்
சிலேடையின் முடித்தல் விபரீதப் படுத்தல்
கூடா இயற்கை கூடு மியற்கையவ்
இருமைஎன் றின்னன அதன்விரி என்ப. 19

[ வேற்றுமையணி ]

190. குணம்பொருள் சாதி தொழிலெனும் பாங்கில்
ஒப்புடை இருபொருள் கூற்றினும் குறிப்பினும்
வேற்றுமைப் படவரல் வேற்றுமை யணியது
விலக்கியல் சிலேடையொடு மேவியும் வருமே. 20

[ விபாவனை ]

191. நிகழ்வுறு செயலுக் குலகியல் காரணம்
ஒழித்துவே றேதுவை இயல்பு குறிப்பின்
வெளிப்பட உரைப்பது விபாவனை யாகும். 21

[ தற்குறிப்பேற்றம் ]

192. இயங்குபொருள் இயங்காப் பொருளவற் றியல்பின்
விளைசெயற் கயலொரு காரணம் தாமே.
கற்பித் துரைத்தல் தற்குறிப் பேற்றமாம். 22

[ ஒட்டணி ]

193. கருதிய பொருள்மறைத் ததுபுலப் படுத்தற்கு
ஒத்ததொன் றுரைத்தல் ஒட்டணி யாகும். 23

[ அதன் வகை ]

194. அடையும் பொருளும் அயல்பட மொழிதல்
அடைபொது வாக்கி ஆங்ஙன முரைத்தல்
விரவத் தொடுத்தல் விபரீதப் படுத்தலென்று
ஈரிரு வகையான் இயலுமன் னதுவே. 24

[ அதிசயவணி ]

195. மனப்படு பொருள்வனப் புவந்துரைப் பழிஉலகு
இயல்பிற வாநிலைத் தாகி உயர்ந்தோர்
வியப்புற விளம்புவ ததிசய அணியாம்.
பொருள்குணம் தொழில்துணை ஐயந் திரிபெனும்
வகைபடத் தோன்றி நிகழுமற் றதுவே. 25

[ ஏதுவணி ]

196. இதனினிக் காரியம் விளைந்ததென் றேதுவை
விதந்தெடுத் துரைத்தல் ஏதுவணி யாமது
காரகம் ஞாபகம் அபாவம் சித்திரம்
எனும் நால் வகையான் இயலும் என்ப. 26

[ வகை விளக்கம் ]

197. முதல்வனும் பொருளும் கருமமும் கருவியும்
ஏற்பதும் நீக்கமு மாய்வரும் காரகம்,
அவையல பிறவான் அறிவது ஞாபகம்,
என்றும பாவம் இன்மைய தபாவம்
ஒன்றினொன் றபாவம் உள்ளத னபாவம்
அழிவுபாட் டபாவம் எனவரும் அபாவம்,
தூர காரியம் ஒருங்குடன் தோற்றம்
காரணம் முந்துறாஉம் காரிய நிலையே
யுத்தம யுத்தமெனச் சித்திரம் வருமே. 27

[ நுட்பவணி ]

198. வெளிப்படக் கிளவா தரிதாய்ந் துணரக்
குறிப்பினும் செயலினும் தெரிப்பது நுட்பம்.

[ இலேசவணி ]

199. கருதியது வெளிப்பட நிகழுமெய்ப் பாட்டிற்கு
உரியதை மறைத்துப் பிறிதொன் றுரைத்தலும்
புகழ்வது போலப் பழித்தலும் பழிப்பது
போலப் புகழ்வதும் இலேசவணி யாகும். 28

[ சமாயிதவணி ]

200. முந்துதான் முயல்வுறும் தொழிற்பயன் பிறிதொன்று
தந்ததா வுரைப்பது சமாயித அணியாம்.

[ புணர்நிலையணி ]

201. வினைபண் பெனுமவை இருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை அணியே. 29

[ அவநுதியணி ]

202. சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மை
மறுத்துப்பிறி துரைப்பது அவநுதி அணியாம். 30

[ உதாத்தவணி ]

203. வியத்தகு செல்வமும் மேம்படு முள்ளமும்
உயர்ச்சிபுனைந் துரைப்பது உதாத்த அணியே. 31

[ ஒப்புமைக் கூட்டம் ]

204. கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்து
ஒருபொரு ளுரைப்பது ஒப்புமைக் கூட்டம்
புகழினும் பழிப்பினும் புலப்படு மதுவே. 32

[ சிலேடையணி ]

205. ஒருதொடர் செம்மொழி பிரிமொழி யாய்ப்பல
பொருள்தரப் புகல்வது சிலேடை என்ப. 33

[ அதன் வகை ]

206. ஒருவினை பலவினை முரண்வினை நியமம்
நியம விலக்கு விரோத மவிரோதம்
எனுமெழு வகையான் நிகழுமற் றதுவே. 34

[ விசேட அணி ]

207. குணத்தொழில் சாதி பொருள்உறுப் பின்னன
குறைபடு தன்மையின் மேம்பட ஒருபொருள்
விரித்து விளம்புதல் விசேட அணியாம். 35

[ அற்புத அணி ]

208. நிகழ்தற் கரியதொன் றாங்ஙனம் நிகழ்ந்ததென்று
உகந்தொரு நிகழ்ச்சியை உரைப்பதற் புதமே. 36

[ ஐயவணி ]

209. உற்றதொரு பொருளை ஐயுற் றுரைப்பதும்
ஆய்ந்துதேர்ந் துரைத்தலும் ஐயஅணி யாகும். 37

[ நிதரிசன அணி ]

210. ஒருவகை நிகழ்வின் பயனைமற் றொன்றற்கு
உயர்விழிவு புலப்பட உரைப்பது நிதரிசனம். 38

[ பரியாயவணி ]

211. கருதிய துரையாஅதப்பொருள் தோன்றப்
பிறிதொன்று கிளத்தல் பரியா யம்மே. 39

[ பரிவருத்தனை ]

212. பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே 40

[ சுவையணி ]

213. அகத்துநிகழ் உணர்வு புறத்து வெளிப்பட
முகப்படுத் துரைப்பது சுவையணி யதுதான்
வீரம் வியப்பிழிவு அச்சம் அவலம்
காமம் வெகுளி நகைஎன வருமே. 41

[ கலவையணி ]

214. ஒருவழிப் பலவணி ஒருங்குடன் பொருந்தி
வருவது கலவை யணியென மொழிப. 42

[ பாவிக ஆணி ]

215. காப்பியப் பண்பினைக் காட்டுவது பாவிகம். 43

[ சிறப்பில்லா அணிகள் ]

216. வீறுகோள் ஆர்வம் உபாயம் வாழ்த்து
பலபடப் புனைதல் நினைப்பு மயக்கம்
உறழ்ச்சி மாலை திரிவு நவிற்சி
மலர்ச்சி எதிர்நிலை பிறிதா ராய்ச்சி
தகுதிவனப் பின்பம் துன்பம் வேண்டல்
ஒழித்துக் காட்டல் தற்குணம் அளவை
சிறுமை பெருமை மிகுதி பிரிநிலை
உத்தரம் விதியென் றன்ன பிறவாக
வருவன உளஅவை சிறப்பில என்ப. 44

[ வடநூலார் கூறும் தொனி ]

217. இனம் இடம் சார்பெதிர் மறைசூழ் நிலையே
எள்ளல் இறைச்சி சுட்டாகு பெயரே
புணர்மொழிப் பிரிப்பு மெய்ப்பாடு சுவையே
சொற்றொட ராக்கம் பல்வகை அணியிவை
இடமா எடுத்தல் படுத்தல் நவிதலா
ஒன்றனைச் சுட்டிக் கேட்போர் உணர்வகை
இயம்புங் காலை கருதிய தகத்ததாய்க்
குறிப்போ டொளிர்தர இசைக்கும் உட்குரல்
தொனியா மென்ப தோன்று மொழிப் புலவர். 45

[ ஔசித்தியம் ] [ உசிதமாகப் பேசுவது ]

218. காலமிடம் நேர்ச்சி சூழ்நிலைக் கேற்ப
நலந்தீங் கென்பவற் றொருபயன் விளைய
நுட்பமும் திட்பமும் ஒளிரஒன் றுரைப்பதை
ஔசித் தியமெனும் தகவுரை என்ப. 46

[ சொல்லணி ]

219. பல்வகைத் தொடையும் வண்ணமும் அமையச்
சொற்றொகைப்புணர்ப்பினைப்பொற்புறச் சமைத்தலும்
எழுத்தொடு சொற்களை நிரல்நிறுத் தமைத்தலும்
முரண்பட வைத்தலும் பின்வரச் செய்தலும்
வெவ்வேறு பொருள்பட மடக்கலும் சித்திரப்
பாங்கினில் அமைத்தலும் எண்ணுமுறை யாகத்
தொடுத்தலும் பிறவும் சொல்லணி யாகும். 47

[ மடக்கணி இயல்பு ]

220. அடிமுதல் இடைகடை, குறித்தஒரு கிளவியை
மறித்தொரு பொருள்பட நிறுத்துதல் மடக்கது
எழுத்தினைப் பற்றியும் வருமென மொழிப. 48

221. அடியினும் சீரினும் அமைத்துற மூங்கால்
அளவிடற் கரிதாய் நடைபெறு மதுவே. 49

[ சித்திரக்கவி ]

222. எழுத்துச் சுருக்கம் பெருக்கம் வினாவிடை
கரந்துறைச் செய்யுள் காதை கரப்பே
பிறிதுபடு பாட்டு நடுவெழுத் தாக்கம்
எழுகூற் றிருக்கை திரிபங்கி நிரோட்டம்
மாலை மாற்றுபல் சக்கர பந்தம்
கமலபந் தந்தேர்ப் பந்தம்வேற் பந்தம்
நாகபந் தந்தேள் பந்தம் சுழிகுளம் 50
கோமூத் திரியே கூட சதுக்கம்
சருப்பதோ பத்திரம் என்பன பிறவும்
மிறைக்கவி எனப்படும் சித்திரக் கவியே.

[ கிழமை ]

223. இருவகைக் கிழமை மேற்கிளந் தனவே, 51

[ மலைவு ]

224. காலம் இடம்கலை உலகியல் அளவை
நூலிவை பிறழ நுவலுதல் மலைவே. 52

[ வழு ]

225. தொடர்கருத் தின்மை முரண்பாடு கவர்பொருள்
விட்டிசை பிறவும் வழுவென மொழிப. 53

[ புறனடை ]

226. உரைத்தவற் றியலான் உரையாத வற்றையும்
பொருத்தியறி வுறுத்தல் புலவர்தம் கடனே. 54

## 6. பொருள் மரபியல்

227. மரபெனப் படுவது இருதிணைக் கண்ணும்
ஆண்பெண் பாற்பெயர் இளமைப் பெயர்புல்
மரம்அவற் றுறுப்பறு வகைஉயிர் பற்றியும்
இலக்கியக் காட்சியுள் நாற்பா லாரையும்
தெரிதற் காம்அடை யாளம் புரிதொழில்
ஆயவை பற்றியும் தொன்றுதொட் டுயர்ந்தோர்
வழக்கறிந் தாங்கனம் வழங்குத லாகும். 1

228. இருதிணைப் பொருள்களின் குணந்தொழில் பற்றிய
சொற்பொரு ளியைபும் அதன்பாற் படுமே. 2

[ ஆண்பாற் பெயர் ]

229. ஏறும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
போத்தும் கண்டியும் கடுவனும் விடையும்
அன்னவும் ஆண்பாற் பெயரென மொழிப. 3

[ பெண்பாற் பெயர் ]

230. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகும் கடமையும் அளகும்,
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணாவும்
ஆவும் பிடியும் அன்ன பிறவும்
பெண்பாற் பெயரெனப் பேசுவர் புலவர். 4

[ இளமைப்பெயர் ]

231. பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியும்
குழவியும் பிறவும் இளமைப் பெயரே. 5

[ ஆண்பாற்குரியவை ]

232. புல்வாய் உழையே கவரி எருமை
பெற்றம் சுறவு பன்றி மரைஇவை
ஏறெனற் குரிய வுசுகும் என்ப. 6

233. ஆண்பால் யாவும் ஏற்றை எனத்தகும்
பனைமரத் திற்கும் ஒரோவழிப் பயிலும். 7

234. புலியுழை கவரி புல்வாய் மரைகராம்
எருமை யானை பன்றியிவை ஒருத்தல். 8

235. வேழமும் கேழலும் களிறென லாகும் 9

236. சேஎன் ஒருபெயர் எருதின் மேற்றே. 10

237. மயிலல் பிறசிறைப் பறவையும் பரியும்
சேவற் பெயரான் செப்புதற் குரிய. 11

238. இரலை எனும்பெயர் புல்லாய்க் குரித்தே 12

239. உழைமுசுப் புல்வாய் கலை எனற் கேற்கும் 13

240. மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்
யாடல பெறாஅ என்மனார் புலவர். 14

241. பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
முதலை இடங்கர் கராம்சு றாவரால்
வாளை மயில்எழால் போத்தெனப் படுமே. 15

242. ஓரறி வுயிர்க்கும் எய்துமப் மெயரே. 16

243. பெற்றமும் வெருகும் விடையென லாகும். 17

244. ஆண்பெண் இருதிணைப் பொதுப்பெயர் ரென்ப. 18

[ பெண்பாற்குரியவை ]

245. ஒட்டகம் குதிரை கழுதை புலிமரை
பெட்டை பேடை பெடையெனலா லாகும். 19

246. மூடும் கடமையும் யாட்டிற் குரிய 20

247. எருமைமரை பெற்றம் நந்தும் நாகே 21

248. கோழி கூகை மயில்அள காகும் 22

249. குரங்குமுசு ஊகம் மந்தி எனப்படும் 23

250. பன்றிநாய் நரியிவை பாட்டி எனப்பெறும் 24

251. நவ்விஉழை கவரி புல்வாய் பிணையே 25

252. பன்றிநாய் புல்வாய் மக்களும் பிணாவே. 26

253. பிடியென் ஒருபெயர் யானைக் குரித்தே 27

254. பெற்றம் எருமை மரையிவை ஆவே 28

[ ஆய் ]

255. ஆய்என வருபெயர் மக்கள் மேற்றே 29

## இளமைப்பெயர்

256. பறவையொடு தவழ்பவை பார்ப்பெனப் படுமே 30

257. பன்றி புலிமுயல் குரங்குநரி பறவை
தவழ்பவை புல்மரம் பிள்ளைப் பெயர்பெறும். 31

258. சூங்கா வெருகெலி அணில்நாய் பன்றி
புலிமுயல் குரங்கு நரியிவை பத்தும்
குட்டி பறழ்எனக் கூறத் தகுமே. 32

259. புல்வாய் குதிரை யாடுமரை மறியே
புலிமுயல் நரிநாய் பன்றியும் குருளை. 33

260. மக்களும் குரங்கும் மகவெனற் கொக்கும். 34

261. மக்கள் யானை ஆண்குரங்கு ஊகம்
முசுமரை கடமை எருமையும் குழவிப்
பெயர்பெறும் ஓரறிஉயிருமற் றொரோவழி. 35

262. ஒட்டகம் யானை குதிரை கழுதை
கடமை எருமை ஆண்மரை கவரி
கராம்இவை பத்தும் கன்றெனற் குரிய
ஓரறி வுயிர்க்கும் ஒக்குமன் அப்பெயர். 36

[ சிலவழக்கு ]

263. குரங்கின் ஏற்றை கூகைகிளி வெருகு
பன்றிஆண் எருமையை நிரல்முறை யானே
கடுவன் கோட்டான் தந்தை பூசை
ஏனங் கண்டியென வழங்கலும் மரபே. 37

[ புல் - மரம்மரபு ]

264. புறக்கா முனபுல் அகக்கா ழனமரம் 38

265. தோடுமடல் ஓலை ஏடிதழ் பாளை
குலையீர்க் கெனஇவை புல்லொடு வருமே. 39

266. இலைதளிர் முறியே தோடுசினை குழையே
பூஅரும்பு நனைஇவை மரனொடு வருமே. 40

267. காய்பழம் தோல்செதிள் வீழுமற் றவைபெறும் 41

[ உயிர்வகை ]

268. மெய்ந்நா மூக்கு கண்செவி மனம் இவை
புலங்கொளும் நெறியான் உயிர்அறு வகையாம் 42

269. புல்மரம் முதலிய உற்றறி ஓருயிர் 43

270. நந்தும் முரளும் பிறவும் ஊறொடு
சுவையுணர் ஈரறி வுயிரென மொழிப 44

271. சிதல்எறும் பன்னவை ஊறுசுவை நாற்றம்
உணர்மூ வறிவுயிர் ஆமென உரைப்ப. 45

272. நண்டுந் தும்பியும் பிறவும் ஊறுசுவை
நாற்றம் காட்சியுணர் நாலறி வுயிராம். 46

273. மாவும் புள்ளும் அன்னவும் ஐம்புல
உணர்வுடை ஐயறி உயிராம் என்ப.

274. மனனொடு ஐம்பொறி அறிவுணர் வமைந்த
மக்களா றறிவுயிர் பிறவுமாங் குளவே 47

[புறனடை ]

275. வளமில் பொறியான் புலனுணர் வழிதலும்
ஐம்புலத் துடன்மனம் அவையவைக் கேற்பக்

கூறுபாட் டியறலும் கூர்ந்தறிந் துயிர்வகை
மரபினைத் தேறுதல் மதிவலார் கடனே. 48

[ காப்பாளர் அடையாளம் ]

[ அந்தணாளர் ]

277. அந்தணா ளர்க்குநூல் கரகம் முக்கோல்
மணையடை யாளம்நூல் ஓதலோது வித்தல்
வேட்டல் வேட்பித்தல் காவல் ஓரோவழி
ஆட்சிமேற் கோடல்மற் றவர்தொழில் என்ப. 49

[ வேந்தர் ]

278. நாடாள் வேந்தர்க்குப் படைகொடி முரசு
களிறுபடை செங்கோல் தேர்பரி தார்முடி
அடையா ளங்குடி காத்தல்பகை யழித்தல்
படைக்கலம் அறநூல் பயிலுதல் வேட்டல்
அளித்தல் களித்தல் ஆணை யிடல்போர்
புரிதல் தொழில்எனப் புகலுவர் நூலோர். 50

[ வாணிகர் ]

279. வாணிக மாந்தர்க்குத் தாரும் கண்ணியும்
பண்டச் சகடமும் காவிதிப் பட்டமும்
அடையா ளம்மாண் கூலமுத லாயவை
கோடலும் விற்றலும் தொழிலவர்க் கென்ப. 51

280. மன்னர் ஏவின் படைதொடல் போரிடல்
காவல் புரிதலும் மேவுமற் றவர்க்கே. 52

[ வேளாண்மாந்தர் [

281. வேளாண் மாந்தர்க்கு வேந்துவிடு தொழிலின்
படையும் கண்ணியும் தாரும் மாலையும்
கோடலடை யாளம் அமரிடை மேவலும்
அரசுபணி யாற்றலும் உழுதுபயன் விளைத்தலும்
வழங்கலும் பிறவும் தொழிலென மொழிப. 53

282. ஏனையோர்க் கவரவர் தொழிலடை யாளமாம். 54

[ சொற்பொருள் மரபு ]

283. நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலக மாதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும். 55

284. மரபுநிலை திரியின் பிறிதுபிறி தாகும். 55

285. பழையன தவிர்தலும் புதியன மேவலும்
வழுவல கால வகையினவை மரபே. 56

[ புறனடை ]

286. உரைத்தன வல்ல வேறுபிற தோன்றினும்
உரைத்தவற் றியலான் உணர்ந்துணர்த் துகவே. 57

## 7. யாப்பியல்

[ வார்ப்பு ]

287. நால்வகைச் சொற்கொண் டிருவகை நடையான்
படைக்கும் இலக்கிய வடிவினைப் புனையும்
வரன் முறையானே மாத்திரை எழுத்தசை
சீர்தளை அடிதொடை நோக்கோசை வண்ணம்
எனுமுறுப் பொடுவனப் பமைந்துவரல் யாப்பே. 1

[ வடிவம் ]

288. இயற்பா இசைப்பாட் டுரைப்பா காவியம்
சிற்றிலக் கியம்உரை நூலொடு சிறுகதை
புதினம் நாடகம் கட்டுரை ஆய்வுரை
ஆயவற் றின்வகை இலக்கிய வடிவாம். 2

[ புனைதல் ]

289. அவ்வவ் விலக்கியப் படைப்பிற் கோதிய
நெறிமுறை யானே வழுவா தியற்றுதல்
புனைதல் என்மனார் புலமை யோரே. 3

[ மாத்திரை ]

290. செப்பல் முதலா நால்வகை ஓசையும்
ஒப்புற் றிலங்க ஒற்றுயிர் ஒலிப்பினை
ஏற்ற இரக்கமா இசைத்தலும் அளபெடை
ஆக்கலும் மாத்திரை இலக்கணம்என்ப 4

[ எழுத்து ]

291. ஒற்றுயிர் உயிர்மெய் குறுகியல் இகரம்
உகரம் ஆய்தம் எனவரும் முப்பான்
மூன்றவற் றுயிரளபு ஒற்றளபு ஐ ஔக்
குறுக்கமிவை அசைக்குறுப் பாய்வரு மெழுத்தே. 5

292, உயிரும் உயிர்மெயும் அளபெடை ஒற்றும்
உயிரும் அலகிட் டெண்ணப் பெறுமாங்கு
ஈரொற் றாயினும் ஒற்றலகு பெறாஅ
ஆய்தம் ஓரோவழி உயிரொத் திசைப்புழி
அலகிடப் பெறும்குறிப் போசையு மற்றே. 6

293. சீர்தளை சிதையும் எனின்அள பெடையும்
இஉக் குறுக்கமும் அலகுறா ஐஔ
போலியாய்க் குற்றுயிர் இயல்புறு மென்ப. 7

294. சந்தப் பாவினுள் இசையழுத் தம்பெறும்
உகரத் திறும்மொழி முற்றிசை பெறுமே. 8

[ அசை ]

295. தாள அலகிற் கியையவோ ரெழுத்துமேல்
வருமெழுத் தொலியுடன் அணைந்திசைத் தியங்கல்
அவையெனப் படும்அஃ திருவகைத்து ஆகும். 9

[ இருவகை அசை ]

296. குறில்நெடில் தனித்தும் ஒற்றடுத் தும்வரல்
நேரசை, குறிலோடு குறிலும் நெடிலும்
இணைந்தும் அவற்றுமேல் ஒற்றடுத் தும்வரல்
நிரையசை அவைசீர்க் குறுப்பாய் நிகழுமே. 10

[ சந்தக்குறியீடு ]

297. த - தா தம்தாம் தனதனா தனம்தனாம்
எனுமிவை நேர்நிரை அசைக்குச் சந்தமாம். 11

298. இன்னிசை இசைநிறை அளபெடை உயிர், பின்
வரும்உயிர் மெய்யுடன் இணையா, சொல்லிசை
அளபிடத் திணைந்தோர் அசையாம் என்ப. 12

299. விட்டிசை யாவழி மொழிமுதல் தனிக்குறில்
நேரசை யாகாது உயிரள பெடைதனிந்
தனிஓர் அசையாம் ஒற்றள பும்அது. 13

300. தற்சுட் டேவல் குறிப்புப் பொருள்வயின்
மொழிமூ விடத்தும் குறில்விட் டிசைக்கும். 14

301. தொல்லோர் வழங்கும் நேர்புநிரை பசைகள்
பழம்பா, வெண்பா இறுதி தவிர்த்த
இயற்பாக் களில்ஈ ரசையா நிகழும். 15

[ சீர் ]

302. தாளக் கூறுபட அசையா லியன்றடிக்கு
உறுப்பாய் வருவது சீர்எனப் படுமஃது
அசையது தொகையான் வகைபட வருமே. 16

303. அசையளவு உரிமைகொள் பாவாய் பாட்டான்
பெயர்பெறும் அவற்றின் விரிபதி னான்காம் 17

304. நேர்நிரை அசைகள் விட்டிசை யாமல்
தொடர்ந்து நாலசையொடு வரும்சீ ரினையும்
நேர்புநிரை பமைதொல் வஞ்சியுரிச்சீரையும்
நாலசைப் பொதுச்சீர் என்ப ஒருசாரார்
அவற்றொடும் சீர்ஆ றைந்தெனல் வழக்கு. 18

305. தொல்லோர் வரைந்த செய்யுள் வழக்கினுள்
அசைச்சீர் இயற்சீர் ஆசிரிய உரிச்சீர்
வெண்சீர் வஞ்சிச் சீரென ஐவகைத்
தாகி எண்பத்து நான்காய் நிகழும். 19

[ பெயர்க்குறியீடு ]

306. ஓரசை ஈரசை மூவசைச் சீரெனல்
அளவின் பெயராம் ஆசிரிய உரிச்சீர்
வெண்பா உரிச்சீர் வஞ்சி யுரிச்சீர்
எனல்பா உரிமைப் பெயராம் நாள்மலர்
மாச்சீர் விளச்சீர் காய்ச்சீர் கனிச்சீர்
எனல்வாய் பாட்டு முறைப்பெய ராமே. 20

[ பா உரிமை ]

307. ஈரசை நாற்சீர் அகவற்கும் மூவசைச்
சீரிரு நான்கனுள் நேரிறு நான்கும்
வெண்பா விற்கும் நிரையிறு நான்கும்
வஞ்சிப்பா விற்கும் உரியவை என்ப. 21

[ தொல்மரபு ]

308. நேர்நிரை தம்மொடும் நேர்புநிரையுடனும்
வரும் ஈரசைச்சீர் ஆசிரி யக்கும்
நேர்நிரை தம்மொடு நேரிறு நான்கும்
வெண்பாவிற்கும் ஏனைய றுபஃது
வஞ்சிக்கும் உரியவென் றியம்புவர் தொல்லோர். 22

[ சந்தவிகற்பம் ]

309. மொழி முதல் தனிக்குறில் நேரசை தவிர்ந்த
தாத தம்த தாம்த தாதம்
தம்தம் தாம்தம் தாதா தம்தா
தாம்தா தாதாம் தம்தாம் தாம்தாம்
எனவரும் ஈரசை உறழ்ச்சி ஈராறாம். 23

310. தனதன தனாதன தனம்தன தனாம்தன
தனதனா தனாதனா தனம்தனா தனாம்தனா
தனதனம் தனாதனம் தனம்தனம் தனாம்தனம்
தனதனாம் தனாதனம் தனம்தனாம் தனாம் தனாம்
எனவரும் நிரையசை உறழ்ச்சியீரெட்டாம். 24

311. தாதன தம்தன தாம்தன தாதனா
தம்தனா தாம்தனா தாதனம் தம்தனம்
தாம்தனம் தாதனாம் தம்தனாம் தாம்தனாம்
எனவரும் நேர்நிரை உறழ்ச்சி ஈராறாம். 25

312. தனத தனாத தனம்த தனாம்த
தனதா தனாதா தனம்தா தனாம்தா
தனதம் தனாதம் தனம்தம் தனாம்தம்
தனதாம் தனாதம் தனம்தாம் தனாம்தாம்
எனவரும் நிரைநேர் உறழ்ச்சி ஈரெட்டாம். 26

[ மூவகைச்சீர்கள் சந்தம் ]

313. ஈரசைச் சந்த நிரலொடு நேர்நிரை
சந்தக் குறிப்பினைக் கூட்டியுற ழுங்கால்
இடைவரும் தனிக்குறில் நேரசை தவிர்ந்த
நேரீற்று மூவசைச் சீர்நூற்றுத் தொண்ணூற்று
ஆறாம் நிரையீற்றுச் சீர்க்கும் அதுஒக்கும். 27

[ வாய்பாடு ]

314. தேமா புளிமா கருவிளம் கூவிளம்
அகவற் சீர்க்குமவற் றந்தம் காய்பெறின்
வெண்சீர்க் கும்கனி யுறின்வஞ் சிக்கும்
உரிய, நாள் மலர்அசைச் சீர்க்குவாய் பாடாம். 28

[ நாலசைச்சீர் ]

315. தேமா முதலிய நான் கொடும் தண்பூ
நறம்பூ தண்ணிழல் நறுநிழல் கூட்டி
உறழ்தர வருமீ ரெட்டுவாய் பாடும்
நாலசைப் பொதுச்சீர்க் குரியவை என்ப. 29

[ வெண்பா இறுதிச் சீர்க்குச் சிறப்பு வாய்பாடு ]

316. காசு பிறப்பெனும் நேர்நிரை யடுத்த
உகர இறுசீர் வெண்பா இறுதிச்
சீர்க்குவாய் பாடெனச் செப்புவர் பின்னோர். 30

317. கனிச்சீ ரிடைநே ரசைக்குறில் பின்னர்
நின்றதனி மெய்யினை தவிர்த்துமுன் எழுத்தொடு
ஒன்றி நேரசையாம் ஓரோவழி. அவ்வழிக்
கனிகாய்ச் சீராய்த் தளைகொளும் என்ப. 31

318. தேமாந் தண்பூ புளிமாந் தண்பூச்
சீரிடை ஒற்றினை உற்றிசை யாமல்
ஒலிதொக இசைத்துக் காய்கனி யாக்கல்
இசைவழி மரபென ஏற்கத் தகும்பிற
இவ்விரு சீராக் கோடற்கும் ஒக்கும். 32

[ வகையுளி ]

319. ஓசையும் தளையும் நோக்கிச் சீர்களை
துணித்துச்சீர் வகுத்தலை வகையுளி என்ப. 33

[ தளை ]

320. நால்வகைப் பாக்களின் ஓசைநனி விளங்க
நின்றசீர் ஈற்றசை வருமுத லசையொடு
ஒன்றியும் மாறியும் புணர்வது தளை அவை
நின்றசீர்ப் பெயரான் நிகழ்ந்து நால்வகைத்தாய்
ஏழாய் விரிதல் பின்னையோர் வழக்கே. 34

[ தளை இயல்பு ]

321. அகவற் சீரின் இறுதி அசையொடு
வருஞ்சீர் முதலசை ஒப்பின் ஆசிரியத்
தளை, முரண் படின் இயற் சீர்வெண் டளையாம்
வெண்சீர் ஈற்றசை வரும்நே ரசையொடு
பொருந்துதல் வெண்சீர் வெண்டளை, நிரையொடு
கூடுதல் கலித்தளை, வஞ்சிச்சீர் இறுதி
வருஞ்சீர் முதலொடு ஒன்றினும் முரணினும்
வஞ்சித் தளையென வழங்குவர் தளைக்கண்
பூச்சீர் வெண்பா நிழற்சீர் வஞ்சி
அசைச்சீர் அகவற் சீர்களை ஒக்கும். 35

[ சந்தக் குறியீட்டு வழி தளையறிதல் ]

322. ஈரசைச் சீரிறுதி த, தா தம்தாம்
என்பவற்று முன்னவை யேவரின் நேரொன்
றாசிரி யத்தளை தன தனா தனம்தனாம்
என்பவை வரினியற் சீர்வெண் டளையாம்
இயற்சீ ரிறுதி தனதனா தனம் தனாம்
என்பவற்று முன்னவை யேவரின் நிரையொன்
றாசிரி யத்தளை த-தா தம் தாம்
வரின துவும்இயற் சீர்வெண் டளையே. 36

323. மூவசைச் சீரிறுதி த-தா தம்தாம்
என்பவற்று முன்னவை யேவரின் வெண்சீர்
வெண்டளை அவற்றுமுன் தன தனா தனம்தனாம்
என்பவை வரினது கலித்தளை யாகும்
மூவகைச் சீரிறுதி தனதனா தனம்தனாம்
என்பவற்று முன்னவை யேவரின் ஒன்றிய
வஞ்சித்தளை த-தா தம்தாம் எனவரின்
ஒன்றாத வஞ்சித் தளைஎன உரைப்ப. 37

324. சீரசை ஓசை அடிப்படை யாக
ஆசிரி யத்தளை வெண்டளை கலித்தளை
எனமுத் தளையே கொள்வர்தொன் னூலோர். 38

[ அடி ]

325. சீரான் அடுக்கித் தாள முடிவாய்ப்
பாவுறுப் பாகப் பயிலுதல் அடியே. 39

326. நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே. 40

[ வகை ]

327. அடிக்கண் அமைந்த எழுத்தள வான்வகைப்
படுத்தல் முன்னையோர் மரபு; சீர் அளவான்
வகுத்தல் பின்னையோர் வழக்குஅது குறள் சிந்து
அளவு நெடில்கழி நெடிலென ஐந்தாம். 41

[ எழுத்தளவையடி ]

328. ஒற்றொடு சார்பெழுத் தல்லாப் பிறஎழுத்து
ஒன்றுமுதல் ஐந்தொரு சீர்க்கள வாக
ஐவகை அடியும் வகுப்பர் அளவடி.

அல்லாத வற்றைச் சீர்களை எண்ணிப்
பெயர்கொடுத் துரைத்தல் தொல்லோர் வழக்கே. 42

329. அவ்வழி,
நான்குமுதல் ஆறெழுத் தான்வரல் குறளடி
ஏழுமுதல் ஒன்பது சிந்தடி பத்து முதல்
பதினான் களவடி பதினைந்து முதற்பதி
னேழ் வரை நெடிலடி பதினெண்முத லிரு
பது வரை கழிநெடி லடிஅம் முறையான்
எழுத்தள வடிபதி னேழாய் அமையும். 43

[ சீர்வகையடி ]

330. சீரள வான்வரும் அடிகளுள் இருசீர்
கொண்டது குறளடி முச்சீர் சிந்தடி
நாற்சீர் அளவடி ஐஞ்சீர் நெடிலடி
அறுசீர் முதலாக் கழிநெடில் என்ப. 44

331. பாவுறுப் பாகத் தனிவரும் சீரினைச்
சொற்சீ ரடியெனச் சொல்லுவர் அதனைக்
கூன்என வழங்குவர் ஒருசார் அதுவே
பாவினத் தடிமுதல் தனித்து முன்னிற்கும்
வஞ்சியுள் இணைந்திடை ஈற்றினும் வருமாங்கு
அசைச்சீ ராக வருதலும் மரபே. 45

[தொடை ]

332. அடிவகைத் தொடையிரு நான்காம் சீர்வகைத்
தொடைஏழைந்தாய் நடைபெறும் என்ப. 46

333. வேறுபட வருஉம் தொடையுமா ருளஅவை
கூறுங் காலைச் சிறப்பில என்ப. 47

[ பெயர்க் குறியீடு ]

334. மோனை எதுகை முரணியைபு அளபெடை
செந்தொடை இரட்டை அந்தாதி என்றும்
மோனை முதலைந்தும் அடிப்படை யாக
இணைபொழிப் பொருஉமேல் கீழ்க்கது வாய்முற்
றென்றும் வகைப்பட் டிலங்கும் அவையே. 48

[ அவற்றின் இயல்பு ]

335. அடிதொறும் முதலெழுத் தொத்துவரல் மோனை
இரண்டாவ தொத்தல் எதுகை சொற்பொருள்

முரண்பட வரல்முரண் ஈற்றெழுத்து ஒத்தல்
இயைபு அளபெழுதல் அளபெடை அவையலாது
இயல்பாய் வரல்செந் தொடை ஒருசொல்லடி
முழுதுறல் இரட்டை முடிவுபின் முதலா
வருதல் அந்தாதித் தொடைஎன மொழிப. 49

[ தொடை விகற்பம் ]

336. முதலிரு சீர்க்கண் மோனைமுத லைந்தும்
வருதல் இணைத்தொடை இடையிட்டு வருதல்
பொழிப்பு இருசீ ரிடையிட்டு வரல்ஒரூஉ.
முதல்முச் சீர்களில் அமைவது கூழை
முதலயற் சீர்தவிர்ந்துறல்மேற் கதுவாய்
ஈற்றய லின்றி வரல்கீழ்க் கதுவாய்
சீர்நான் கிறும்வரல் முற்றாம் ஏழும்
அளவடி தமக்கே உரியவை என்ப
இயைபிற் கிறுதிச் சீர்முதற் சீரம் 50

[ கிளையும் வருக்கமும் ]

337. எதுகையும் மோனையும் கிளையெழுத் தேற்கும்
அ ஆ ஐ ஔ, இ ஈ எ ஏ,
உ ஊ ஒ ஓ உயிருள் கிளையாம்
தசவும் ஞநயவும் மவவும் மெய்யுள்
கிளையாம் உயிர்மெய்க் கும்இவை ஒக்கும் 51

338. வருக்கமும் ஓரெழுத் தொடை மதிப்புறுமாம்
இனக்குறில் நெடிலுயிர் வலிமெலி இடைஎழுத்
தெனுமிவை வருக்க எழுத்தா மென்ப. 52

339. நேரடிக் கண்வரும் கடையிணை கூழை
பின், இடைப் புணர் விவை சிறப்பில என்ப. 53

340. நாற்சீ ரிகந்த அடிக்கண் வரும்தொடை
வழித்தொடை எனப்பெறும் எதுகை மோனைகள்
தலையிடை கடைவிட் டிசைஆ சிடைஎனப்
பிறவகை யானும் வரல்தொடை மரபே. 54

[ நோக்கு ]

341. மாத்திரை எழுத்தசை சீர் அடி தொடை இவை
நுண்ணிதின் அமைந்து நுவல்தொறும் பொருட்சுவை
ஆக்கமுற் றிலங்குதல் நோக்குறும் பெ…ப. 55

[ ஓசை ]

சீரமை வானும் தளைநிலை யானும்
அசையொடு மாத்திரை அளவுதலானும்
இசையொடு சீர்தளை இணைவத னானும்
இஃதிப் பாவெனச் செப்புதற் கேதுவாய்
உருப்பெற் றியலுவது ஓசை. அதுவே
செப்பல் அகவல் துள்ளல் தூங்கல்
எனநால் வகையான் இலங்கும் என்ப. 56

[ அவற்றின் விரி ]

343. தளைநிலை வகையான் செப்பலும் அகவலும்
ஏந்திசை தூங்கிசை ஒழுகிசை எனவும்
துள்ளலும் தூங்கலும் ஏந்திசை அகவல்
பிரிந்திசை எனமும் மூன்றாய் விரியும். 57

[ செப்பலோசை ]

344. வெண்சீர் வெண்டளை யேவரல் ஏந்திசை
இயற்சீர் வெண்டளை யேவரல் தூங்கிசை
அவை விராய் வருதல் ஒழுகிசைச் செப்பலாம். 58

[ அகவலோசை ]

345. நேரொன் றாசிரி யத்தளை யேவரல்
ஏந்திசை நிரையொன் றாசிரி யத்தளை
யான்வரல் தூங்கிசை அவற்றொடு பிறதளை
கலந்து நடத்தல் ஒழுகிசை யகவலாம். 59

[ துள்ளலோசை ]

346. கலித்தளை யேவரல் ஏந்திசை அதனொடு
வெண்டளை விரவுதல் அகவற் றுள்ளல்
பிறதளை கலத்தல் பிரிந்திசைத் துள்ளலாம். 60

] தூங்கலோசை ]

347. ஒன்றிய வஞ்சித் தளையே வருதல்
ஏந்திசை ஒன்றாத வஞ்சித் தளையே
வருதல் அகவற் றூங்கல் அவற்றொடு
பிறதளை விரவுதல் பிரிந்திசைத் தூங்கலாம். 61

[ புறனடை ]

348. தளையும் சீரும் தவஃபில வாயினும்
கொளையிசை கோடின் குற்றப் படுமே. 62

[ வண்ணம் ]

349. குறில்நெடில் ஆய்தம் வல்லின மெல்லின
இடையின ஒற்றொடு சொல்நிலை எண்இவ்வ
அடைவுறும் முறையான் நடைபெறல் வண்ணம்
தாளத் தமைவொடு சந்தக் குழிப்பமைந்து
ஆளத்தி முறையான் அமைவதும் அதுவே. 63

[ வண்ணத்தின்வகையும் பெயரும் ]

350. பாவே தாவே வல்லிசை மெல்லிசை
இயைபே அளபெடை குறிலே நெடிலே
சித்திரம் நலிபே தூங்கல் ஏந்தல்
ஒருஉவே ஒழுகல் அடுக்கல் முடுகே
அகைப்பே உருட்டு எண் நீரலை பிறவும்
வண்ணத்தின் வகையெனப் பன்னுவர் புலவர். 64

[ அவற்றின் இயல்பு ]

351. அவற்றுள்
பாவே நூற்பா யாப்பினிற் பயிலும் 65

352. தாவே இடைஇட்ட எதுகைத் தாகும் 66

353. வல்லிசை வல்லெழுத் தான்சிறந் தியங்கும் 67

354. மெல்லிசை மெல்லெழுத் தானமைந் திசைக்கும் 68

355. இயைபு வண்ணம் இடை எழுத்தான் மிகும் 69

356. அளபெடை வண்ணம் அளபெடை பயிலும் 70

357. குறுஞ்சீர் வண்ணம் குறில்மிகுந் தொழுகும் 71

358. நெடுஞ்சீர் வண்ணம் நெடில்நனி பயிலும் 72

359. சித்திர வண்ணம் குறில்நெடில் விரவும் 73

360. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும் 74

361. தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும் 75

262. ஒருசொல் பன்முறை இயைந்துவரும் ஏந்தல் 76

363. ஒருஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும் 77

364. ஒழுகு வண்ணம் ஓசைஒத் திசைக்கும் 78

365. அடுக்கல் வண்ணம் சீரொத் தியங்கும் 79

366. அராகத் தடிநீண் டியல்வது முடுகே 80

367. அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும் 81

368. உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும் 82

369. எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும் 83

370. குறுகத் தொடங்கி விரிந்திறும் நீரலை. 84

[ வரல்முறை ]

371. வண்ணம் தனித்து வரல்சிறப் பாமவை
கலந்து நடப்பினும் கடிவரை யின்றே. 85

[ ஆளத்தி வண்ணம் ]

372. தத்த தாத்த தந்த தாந்த
தனதனா தன்ன தய்ய வென்எட்டும்
தத்தா தாத்தா தந்தா தாந்தா
தான தானா தன்னா தய்யா
எனவரும் அவற்றின் நீட்சியும் அடிப்படைச்
சந்தமாம் அவற்றொடு குறில் நெடில் தனித்தும்
ஒற்றடுத் தும்வரின்னன்னா எனுமரைச்
சந்தம் இணைத்துச் சாற்றப் படுமே. 86

[ சில மரபு ]

373. சந்தக் குழிப்பினில் ஐஔ ஈற்றில்
குறிலையும் முதலிடை குறிலொற் றினையும்
போல்வரும் ஆய்தம் இடையொற் றொக்கும் 87

374. அளபெடை சேரி வழக்கு மரூஉச்சொல்
அயல்மொழி சந்தக் குழிப்பினுக் காகா 88

[ சந்த அமைப்பு ]

375. சந்தத்தின் தொடர்ச்சி துள்ளல் துள்ளல்
சிலபல தொடர்தல் குழிப்பு குழிப்பின்
இறுதிநின் றிறுஞ்சீர் தொங்கல் என்பவே 89

[ வனப்பு ]

376. மொழிநடை நவில்முறை பொருள்மரபு அளவிலை
எழிலொடு திகழ்நிலை வனப்பாம் அவைதாம்
அம்மை அழகே தொன்மை தோல்விருந்து
இயைபு புலனிழைபு எனஎட் டென்ப. 90

377. அவற்றுள்
சின்மென் மொழியான் சிலவடி புனைந்தாங்கு
ஒண்பொரு ளுணர்த்துவது அம்மை என்றுரைப்ப 91

378. செம்மொழி யாற்சீர் அமைபா அழகே 92

379. உரையொடு புணர்ந்த யாப்பே தொன்மை 93

380. விழுமியது இனிதின் நுவறலும் பரந்த
மொழியா னடிநிமிர்ந் தொழுகலும் தோலே. 94

381. புதுவது சிறந்த யாப்பினது விருந்தே 95

382. ஞகரமுதல் னகரப் புள்ளி இறுதிதம்
புணர்ச்சி வழுவா தியற்றுதல் இயைபே 96

383. இயற்சொல் பயின்றெளிது இலங்குதல் புலனே 97

384. எழுத்தள வடியான் இலக்கிய மொழிபயின்
றிசைத்தல் இழைபின் இயல்பென மொழிப. 98

[ புறனடை ]

385. உறுப்பினுள் உரையா தெஞ்சியன ஓர்ந்து
திறப்பட உணர்த்தல் தெள்ளியோர் கடனே. 99

## 8. இயற்பாவியல்

386. மேற்கிளந் துரைத்த தனிநிலைச் செய்யுள்
இயற்பா இசைப்பா உரைப்பா உரை, நூல்
என்றை வகைப்படும் உறுபொருட்கேற்ப
உரைநூல் தொடர்நிலை ஆகலும் உண்டே 1

387. அவற்றுள்,
ஈரைந் துறுப்பொடு வனப்பமைந் தியற்பா
சீரடி ஓசை தளைநிலைச் சிறப்பான்
வெண்பா அகவல் கலிவஞ்சி மருட்பா
எனும்ஐ வகையான் வெளிப்படைக் குறிப்புப்
பொருளமைத் தியலும் என்மனார் புலவர் 2

388. மருட்பா தவிர்ந்தவை ஒவ்வொன் றுந்துறை
தாழிசை விருத்தம்மென் றினம்பெறு மென்ப 3

[வெண்பா]

389. அவற்றுள்,
இயற்சீர் வெண்சீர் தனித்தும் விரவியும்
தன்தளை ஓசை தவிராது நாள்மலர்
காசு பிறப்பான் இற்றசிந் தடியே
ஈற்றடி யாய்ப்பிற நேரடி யான்வரல்
வெண்பா வியல்பென விளம்புவர் நூலோர். 4

[வெண்பா வகை]

390. குறளே சிந்தியல் நேரிசை இன்னிசை
பஃறொடை எனஐந் தாகும் அதுவே. 5

391. ஈரடியான் வரும் எழுசீர் குறட்பா 6

392. மூன்றடியான் வரும் சிந்தியல் வெண்பா 7

393. நான்கடி யாய்ஓ ரிருவகை எதுகை
விகற்பமொடு இரண்டாம் அடியிறு திச்சீர்
தனிச்சொற் போல்அவ் எதுகைத் தொகைபட
வருவன நேரிசை அம்முறை பிறழ்ந்தாங்
கியல்வன யாவும் இன்னிசை யாமவை
இரண்டும் அளவியல் வெண்பா எனப்படும். 8

394. பஃறொடை முந்நான் கடிவரை பயிலும் 9

[ஆசிரியப்பா]

395. இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும்
தன்தளை ஓசை தழுவியும் அயலவை
விரவியும் அளவடி யான்அக வற்பா
வரும்ஒரோ வழிப்பிற அடிவரும் ஆங்கே. 10

[வகை]

396. நேரிசை இணைக்குறள் நிலைமண்டிலம்அடி
மறிமண் டிலமென நால்வகைத் ததுவே. 11

397. அவற்றுள்
ஈற்றயல் சிந்தடி ஏனைய அளவடி
ஏற்றுவரல் நேரிசை யாசிரி யப்பா. 12

398. இடையிடை சிந்தடி குறளடி விரவ
நடைபெறு மிணைக்குற ளாசிரி யப்பா
நெடிலடி ஒரோவழி நேர்தலும் உண்டே. 13

399. எல்லா அடியும் அளவடி யான்வரல்
நிலைமண் டிலமென நிகழ்த்துவர் புலவர். 14

400. அடிநிலை மாறினும் பொருள்நிலை திரியாது
அமைவன அடிமறி மண்டில மாமே. 15

[ கலிப்பா ]

401. நிரை முதல் வெண்சீர் நிரம்பியும் தன்தளை
ஓசைமிக் கயலவை அருகியும் அளவடி
பயின்றும் பிறவடி நேர்ந்தும் தரவே
தாழிசை அராகம் நீரலை தனிச்சொல்
சுரிதகம் எனும்ஆ றுறுப்பினுள் ஏற்பவை
பொருந்திவரல் கலிப்பா இயல்பென மொழிப. 16

[ வகை ]

402. ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகம்
உறழ்கலி எனநால் வகைப்படு மதுவே. 17

403. அவற்றுள்
ஒத்தா ழிசைக்கலி நேரிசை அம்போ
தரங்கம் வண்ணகம் எனவும் கொச்சகம்
தரவே தரவிணை சிஃறா ழிசையே
பஃறா ழிசையே மயங்கிசை எனவும்
உறுப்பு வகையான் நெறிப்பட வருமே. 18

404. கொச்சக ஒருபோகு அம்போ தரங்க
ஒருபோ கெனவரும் வகையுமா ருளவே. 19

### கலியுறுப்புக்களின் இயல்பு

[ தரவு ]

405. துள்ளலிற் சிதையாது மூன்றடி முதலா
உள்ளுறு பொருளின் முன்னுரை யாக
முதல்வரும் எருத்தம் தரவெனப் படுமே. 20

[ தாழிசை ]

406. ஒழுகிசை தழுவித் தரவினிற் சுருங்கி
ஒத்துமூன் றடுக்கி அளவடி யானே
தரவின் பின்வரும் தாழிசை என்ப. 21

[ அராகம் ]

407. அளவடி முதல்எண் சீர் ஈ றாக
முடுகிய விசையொடு நடைபெறும் வண்ணகம் 22

[ அம்போதரங்கம் ]

408. ஓரடிக் கொருகருத் தாக முறையே
சீரிரு நான்கமை ஈரடி தொடங்கி
அளவடி சித்தடி குறளெனச் சுருங்கி
எண்ணாற் பெருகி வரும்நீ ரலையே 23

[ தனிச்சொல் ]

409. சுரிதக உறுப்பின் முன்வரும் தனிச்சொல்
தாழிசைக் கிடையிடை வருதலும் உண்டே. 24

[ சுரிதகம் ]

410. எருத்து முதலா இயம்பிய கருத்தின்
முடிவுரை யாக வெண்பா அகவற்
பாவியல் பாலுறல் சுரிதகம் என்ப. 25

[ நேரிசை ஒத்தாழிசைக்கலி ]

411. தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்
தனிச்சொல் சுரிதகம் எனும்நான் குறுப்பொடு
நிகழ்வது நேரிசை ஒத்தாழி சையே. 26

[ அம்போதரங்க ஒத்தாழிசை ]

412. அசையடி அடுக்கித் தாழிசைப் பின்னமைந்
தைந்துறுப் பொடும்வரின் அம்போ தரங்க
ஒத்தா ழிசையென உரைக்கப் படுமே. 27

[வண்ணக ஒத்தாழிசைக்கலி]

413. அசையடி முன்னர் அராகம் அமைந்தாறு
உறுப்பொடும் வண்ணக ஒத்தா ழிசைவரும் 28

[ வெண்கலி - கலிவெண்பா ]

414. வெண்பா நடையான் கலித்தளை பயின்று
ஒருபொருள் நுதலிய பலஅடி யானும்
சிலவடி யானும் ஒன்றுவிட்டடி தொறும்
ஒருஉஎது கைத்தொடை அமைந்தும் வெண்டளை
வழுவா தகப்பொருள் பற்றியும் வெண்பா
இயலான் முடிவன வெண்கலிப் பாவது
கலிவெண் பாவெனக்கழறவும் படுமே. 29

[தரவு கொச்சகம்]

415. தரவே தனித்தும் தனிச்சொல் சுரிதகம்
மருவியும் தரவு கொச்சகக் கலிவரும். 30

[ தரவிணைக் கொச்சகம் ]

416. தரவிரண் டாங்ஙனம் தழுவி வரினது
தரவிணைக் கொச்சக மாமென மொழிப. 31

[ சிஃறாழிசைக் கொச்சகம் ]

417. தரவொடு தாழிசை மூன்றவற் றிடையினும்
தனிச்சொல் லமைந்து சுரிதகத் தாலிறின்
சிஃறா ழிசைக்கொச் சகமெனச் செப்புப. 32

[ பஃறாழிசைக் கொச்சகம் ]

418. தாழிசை பலவாய் அடுக்கியாங் ஙனம்வரின்
பஃறா ழிசைக் கொச் சகமெனப்பகர்ப. 33

[ மயங்கிசைக் கொச்சகம் ]

419. தரவுமுத லாகிய உறுப்புநிலை பிறழ்ந்தும்
மிக்குங் குறைந்தும் திரிந்தும் வருவன
மயங்கிசைக் கொச்சகக் கலியென மொழிப 34

[ கொச்சக ஒருபோகு ]

420. தரவின் றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்
எண்ணிடை யிட்டுச் சின்னங்குன்றியும்
அடுக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேறுபட் டிரைத்
தடிமுதல் இருபா னடிமுடி பாய்வரல்
கொச்சக ஒருபோ காகும் என்ப. 35

[ அம்போதரங்க ஒருபோகு ]

421. எருத்தே வண்ணகம் நீரலை சுரிதகம்
கொச்சகப் பாஇடைவிரவ முப்பானடி
முதலறு பான்வரை வருவதை அம்போ
தரங்கஒரு போகெனச் சாற்றுவ ரவரே. 36

[ உறழ்கலி ]

422. கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்
போக்கின் றாகல் உறழ்கலிக் கியல்பது
நாடகப் பாங்கினில் நடைபெறு மென்ப. 37

[ வஞ்சிப்பா ]

423. கனிச்சீர் தன்தளை மிக்கும் அயலவை
அருகியும் பொதுச்சீர் விரவியும் தூங்கல்
ஓசையொடு குறள்சிந் தடியான் பிறஅடி
அருகியும் சமனிலை வியனிலை யாக
அகவற் சுரிதகத் தாலிறும் வஞ்சி. 38

[ மருட்பா ]

424. வெண்பா அடிகள் முன்வர அகவல்
பின்வந் திறுவது மருட்பா அவற்றுள்
வெண்பா அடிமிகின் வியனிலை எனவும்
ஒப்பின் சமனிலை எனவும் வழங்குப. 39

[ பாக்களின் அடியளவு ]

425. வெள்ளைக் கிரண்டடி கலிக்கீ ரிரண்டடி
அகவற்கும் வஞ்சிக்கும் மூன்றடிச் சிறுமையாம்
பெருமை உரைப்போர் கருத்தள வென்ப 40

[ பிறிதொரு சாரார் கூறும் பாவகை ]

426. குறள்சிந்து திரிபாதி வெண்பா திலதம்
விருத்தம் சவலை அவற்றது போலி என்று
ஈரேழ் பாவகை கூறுவர் ஒரு சார். 41

427. அவற்றுள்
குறள் சிந்து வெண்பா விருத்தம் நான்கும்
கிளந்தாங் கமையும், மற் றடிமூன்றொப்பதைத்
திரிபாதி எனவும் கட்டளைக் கலித்துறை
யாப்பினைத் திலதம் எனவும் குறள்முத
லாயவை சீர்தளை வழுவலைச் சவலை
எனவும்அவ் ஏழும் சீர்அசை அடிகளான்
சுருங்குதல் போலியாம் எனவும் கூறுப. 42

[ வெளிப்படையும் குறிப்பும் ]

428. அறமுதல் நான்கினும் ஈரேழ் திணைவழி
அறவுரை அறிவுரை வாழ்த்துரை வசவுரை
விருப்புரை வெறுப்புரை எனுமறு வகையான்
நெறிபெறு கருத்தினை நிகழ்த்துங் காலை
தேர்தல் வேண்டாது பொருள் புலனாதல்
வெளிப்படை பல்வகை முன்னம் உள்ளுறை
அங்கதம் பிசியொடு மந்திரம் முதலா
ஆய்ந்துணர் வகையான் அமைவனவெல்லாம்
குறிப்பென மொழிப குறியறிந் தோரே 43

429. பல்வகை முன்னம் அறமுதல் நான்கீ
ரேழ்திணை உள்ளுறை மேற்கிளந்தனவே 44

[ அங்கதம் ]

430. அங்கதந்தானே,
செம்பொருள் மொழிகரப் பெனவிரு திறப்படும் 45

431. வசைதெளி வாக நகையுறு மொழியான்
இழித்தலும் பழித்தலும் செம்பொரு ளங்கதம் 46

432. புகழ்வது போலப் பழித்தலும் நகைச்சுவை
நிகழ்தர இழித்தலும் மொழிகரப் பங்கதம். 47

[ பிசி ]

433. ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
இயல்வன பிசிநிலைச் செய்யுள் என்ப. 48

[ மந்திரம் ]

434. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி யாவும் மந்திரம் என்ப. 49

[ பாவினம் ]

435. முன்னோர் உரைத்த கொச்சக வகையும்
பின்னோர் கூறிய போலியும் வடமொழிச்
சந்தமும் விருத்தமும் கலந்து மயங்கி
விருந்தெனும் பாங்கில் அடிதொடை நயப்பொடும்
இசைகொளும் பாங்கொடும் எழுந்தவை இனமே, 50

[ இனவகை ]

436. அவைதாம் தாழிசை துறையே விருத்தம்
எனமூன் றுவரும் பிறபிறன் கோளே. 51

வெண்பா இனம்

[ குறட்பாக்குரியவை ]

437. குறள்வெண் செந்துறை குறட்டாழி சையென
குறள்வெண் பாவினம் இருதிறப் படுமே. 52

438. அவற்றுள்
விழுமிய பொருளோ டொழுகிசை யுற்றடி
இரண்டொத் திறுவது குறள்வெண் செந்துறை. 53

439. ஈற்றடி இறுதிச் சீர்சில தபுநவும்
செந்துறைத் தகவு தளர்நவும் குறட்பாத்
தளைசிதைந் தனவும் குறட்டா ழிசையே. 54

[ அளவியல் வெண்பாவிற்குரிய இனம் ]

440. மூன்றடி யாய்த்தனித் தும்ஒரு பொருள்மேல்
மூன்றடுக் கியும்சிந் தடியான் வெள்ளைபோல்
முடிவது வெள்ளொத் தாழிசை யாகும் 55

441. மூன்றடி முதலா ஏழடி யளவும்
ஏன்றுபின் அடிசில சீர்குறைந் திசைத்தலும்
வேற்றொலி முடுகலும் வெண்டுறை என்ப. 56

442. மூன்றடி நான்கடி யான்வந் தடிதொறும்
தான்தனிச் சொற்பெறல் வெளிவிருத் தம்மே. 57

[ ஆசிரியரிப்பா இனம் ]

443. மூன்றடி யொத்துத் தனித்தும்மூன் றடுக்கியும்
தோன்ற வருமக வற்றா ழிசையே 58

444. இடையிடை குறைந்தும் எருந்தடி நைந்தும்
இடைமடக் காயும் ஈரிரண்டடி யான்
நடைபெறல் ஆசிரி யத்துறை என்ப. 59

445. விழுமிய ஓசையும் சந்தமும் விரவக்
கழிநெடி லடிநான் கொத்துறும் விருத்தம் 60

[ கலிப்பா இனம் ]

446. அடியள வின்றி ஒத்தும் குறைந்தும்
ஒருபொருள் மேல்மூன் றடுக்கியும் தனித்தும்
கடையடி மிகவரும் கலித்தா ழிசையே. 61

447. நெடிலடி நான்காய் நிகழும் கலித்துறை
முதற்சீர் நான்கும் வெண்டளை யாகக்
கடைச்சீர் விளங்கா யாகி முதலசை
நேர்பதி னாறே நிரைபதி னேழெழுத்து
அடிதொறும் வரினது கட்டளைக் கலித்துறை
தளைதபின் திலதக் கலித்துறை என்ப. 62

448. பல்வகைச் சந்தம் பயின்றும் ஒழுகியும்
அளவடி நான்காய் வரும்கலி விருத்தம் 63

[ கட்டளைக் கலிப்பா ]

449. ஒற்றொழித் தொருசீர்க் கிரண்டுமுதல் நான்கெழுத்து
அமைந்தரை யடிக்கண் நேர் முதலாயின்
பதினோ ரெழுத்தும் நிரை முதலாயின்
பன்னி ரெழுத்தும் பொருந்தி எண்சீரடி
நான்கொத் தியல்வது கட்டளைக் கலிப்பா 64

[ வஞ்சிப்பா இனம் ]

450. குறளடி நான்கொரு பொருள்மேல் மூன்றாய்
அடுக்கி வருமது வஞ்சித் தாழிசை 65

451. குறளடி நான்கு தனிவரின் துறையே 66

452. சிந்தடி நான்கின வஞ்சி விருத்தம் 67

[ பிறன்கோட் கூறல் ]

[ வடமொழிச் சந்தம் ]

453. வடமொழி யமைப்பிற் சந்தம் அடிதொறும்
ஓரெழுத் தாதி இருபா னறுவரை
அமைந்தடி நான்காய் இசைக்கும் அவ்வழி
ஒற்றெழுத் தெண்ணப் பெறாவென மொழிப.
அவைதாம்,
உத்தம்அதி யுத்தம் மத்திமம் ஒத்தநிலை
நன்னிலை காயத் திரியுடன் உண்டி
அனுட்டுப்பு பகுதி பத்தி வனப்பு

சயதி அதிசயதி சக்குவரி அதிசக்கு
வரியாடி அதியாடி திருதியதி திருதி
சுருதிபிரகிருதி ஆகிருதி விக்கிருதி
சங்கிருதி அபிகிருதி உத்கிருதி என்றெழுத்து
அளவையினானே பெயர் பெறும் என்ப 68

[ வடமொழிவிருத்தம் ]

454. நான்கடி அளவொத்து நடத்தல் விருத்தம்
எழுத்தொடு சீரவை மிகினும் குறையினும்
விருத்தப் போலிஎன விளம்புவர் அவரே 69

[ தண்டகம் ]

455. நான்குமுதல் துண்டமெனும் சீரான் இரட்டிய
நான்கடி யாய்வரல் தண்டகம் சீர்கள்
குன்றினும் மிகினும் தண்டகப் போலியாம் 70

[ புறனடை ]

456. செப்பிய நெறிபிறழ்ந் தியல்வன வற்றை
ஒப்பிட்டு நோக்கிப் பொருந்தும் முறையான்
ஒன்றனுள் அடக்கி உணர்த்துதல் மரபே. 71

## 9. இசைப்பா இயல்

[ பொதுவியல்பு ]

457. பண்ணும் பாணியும் சொல்லொடு மிடைய
எண்ணியதைச் சுவையோ டிசைப்பது பாட்டே 1

[ பொருளமைதி ]

458. புகழ்மிகு பாட்டின் பொருளமைவு நோக்கின்
அறமுதற் பொருளோ டகம்புறந் தழுவிக்
காதலிற் களித்தல் ஊடலில் உவத்தல்
வண்ணனை மகிழ்தல் பண்ணையிற் றிளைத்தல்
உறுபகைக் கஞ்சாப் பெருமிதங் கூர்தல்
பரிசுபெற் றுவத்தல் பரிந்தாற்றுப் படுத்தல்
இன்பிற் கவாவல் துன்பிற் கிரங்கல்
பகைமையை எள்ளுதல் தகைமையை ஏத்தல்
மக்களை யுவத்தல் மன்னரைப் போற்றல்
மன்னுயிர்க் கிரங்கல் நன்னயம் விரும்புதல்
எனும்பல உணர்வான் இம்மை நோக்கியும்

தெய்வம் பரரவல் புகழ்தல் தெளிதல்
மெய்ம்மையிற் றிளைத்தல் பொய்ம்மையை வெறுத்தல்
மாயைப் பழித்தல் மனத்தொடு பேசுதல்
இறைவனுக்கு ஆட்செய ஏங்குதல் இறைவனைக்
காதல னாகக் காமுற் றுரைத்தல்
தோழமை பேசுதல் ஊழ்முனிந் துரைத்தல்
அன்னபிற வானெழும் ஆன்ம உணர்ச்சியான்
அம்மை நோக்கியும் அணியும் தொடையும்
செம்மையொடு பொருந்தித் திகழுமற் றவையே 2

[ வகை ]

459. அவைதாம்
இசைத்தமிழ் தமிழிசை எனஇரு திறப்படும்
செய்யுளை இசைத்தற்கு ஒத்தஇசை கூட்டல்
இசையை முன்னமைத்ததற் கேற்றசொல் புனைதல்
இசைத்தமிழ் தமிழிசைக் குரியவேற் றுமையாம். 3

[ இசைத்தமிழ்ப் பாவகை ]

460. பண்ணும் பாணியும் வண்ணப் புணர்ப்பொடு
பாஇன வடிவான் பயில்வன இசைத்தமிழ்
அதுவே,
இசைதுணை யாக இயலாற் சிறப்பவை
இசையும் இயலும் சமனுப் பிறப்பவை
எனஇரு திறனாய் இலங்கும் என்ப. 4

461. பண்ணெனல் இராகம் பாணி தாளமாம்
அவற்றது கலப்பிசை வண்ண மாகும். 5

462. பரிபா டல்வரிப் பாட்டு பண்ணத்தி
குரவை அம்மானை குறத்திப்பாட் டூசல்
பாவை கோத்தும்பி உழத்தி பூவல்வி
தெள்ளேணம் உந்தி சாழல் புலம்பல்
தாழிசை வண்ணம் தாண்டகம் மங்கலம்
ஓடம் தாலாட் டேசல் ஒப்பாரி
வள்ளை ஏற்றம் வில்லு கிளிகடி
குயிலா னந்தக் களிப்பென வரூஉம்
அன்ன பிறவும் இசைதுணை யாக
இயலாற் சிறப்பவை என்மனார் புலவர். 6

463\. பாணியொடு பொருந்தும் பல்வகைக் கண்ணி
சிந்துதென் பாங்கு கும்மிதே வாரம்
அன்ன பிறவும் இசையும் இயலும்
சமனா இசைக்கும் சால்பின என்ப. 7

464\. சொல்லிய பொருளமைவு ஒல்லும் வகையான்
எல்லாப் பாவினும் இயைந்துவரல் நெறியே. 8

[ பரிபாடல் ]

465\. அவற்றுள்
எருத்தே கொச்சகம் அராகம் நீரலை
சுரிதக உறுப்பொடு இடையிடை முடுகியல்
வண்ணம் விரவ உறுப்பு வரை யின்றிப்
பண்ணும் பாணியும் அமைய அகத்திணைப்
பொருளும் கடவுட் பராவ லுமாக
விரிவொடு வருவது பரிபாட் டாம்அது
ஐம்பது முதல்நா னூறடி வரைவரும். 9

[ வரிப்பாட்டு ]

466\. பண்ணும் திறனும் மயக்கமை பாணியும்
நண்ணி அளவடி முதலா விருத்தம்
ஒருமூன் றடுக்கியும் இறுதி குறைந்தும்
இடைமடக் காயும் தெய்வம் சுட்டியும்
மக்களைப் புகழ்தும் வரும்வரிப் பாட்டது
பொருளமை வானே ஆற்றுவரி கானல்
வரி, நிலை வரிமுரி வரிதிணை நிலைவரி
சார்த்துவரி மயங்குதிணை நிலைவரி சாயல்
வரி, வேட் டுவவரி எனநா லிரண்டு
வகையொடு வழங்கும் தகவின தாகும் 10

[ பண்ணத்தி ]

467\. அள்ளற் பள்ளத் தரிவையர் ஓரை
ஏற்றம் கொடிக்கால் மீன்வலைப் பாட்டு
கைக்கிளை பெருந்திணை காதல் விளையாட்டு
போர்க்கள வருணனை புலம்பல் புரவலர்
வண்மை மறவர் வீரப் புகழ்ச்சி
குலமுறை தெய்வ நலம்புனைந் துரைத்தல்
பல்வகை நரட்டுப் புறக்கதை பிறவும்
இசையும் பாணியும் நசைவரப் பொருந்தும்
இனிய வழக்குச் சொற்களொடு ஓரடி

பலவடி யாக இறுதியில் தொங்கல்
நண்ணவும் பாடுதல் பண்ணத்தி வகையவை
நாட்டுப்புறப் பாடலென நவிலவும் படுமே. 11

[ குரவை ]

468. ஏழுவகைப் பண்ணும் பன்னிரு நிலையில்
கெழுமி இசைக்குங் கேண்மையின் மாதர்
எழுவர் வட்டமாய் இணைந்தும் மாறியும்
கொட்டும் இசையும் ஒட்ட ஆடுதற்கு
ஏற்ப அளவடி மூன்றும் நான்கும்
தாழிசை யாக ஒருமூன் றடுக்கியும்
இடைமடக் காயும் வழிபடு கடவுளை
முன்னிலைப் படர்க்கைப் பரவலாகப்
பன்னுவது குரவைப் பாட்டென மொழிப. 12

[ அம்மானை ]

469. அளவடி இருமூன் றாகவும் கொச்சகக்
கலியான் ஒருவர் தொடுக்குங் கருத்தினுக்கு
உள்ளுறை குறிப்பமை செப்பாய் ஒருவர்
அணிநயந் தோன்ற உரைப்பது அம்மானை 13

[ குறத்திப்பாட்டு ]

470. இயற்பா இனவகை இசைப்பாட் டுருக்கள்
நயம்பட விரவி நாடகப் பாங்கில்
பண்ணத்தி யொடுவரல் குறத்திப் பாட்டே 14

[ ஊசல் ]

471. வெண்டளை வழாத தரவுகொச்ச கத்தரன்
ஆடாமோ ஆடீரென் றூசலை வருணித்து
அசைவது போலிசை மேவரும் ஊசல். 15

[ பாவை ]

472. ஈரசை மூவசைச் சீர்பெற் றளவடி
இருநான் கமைந்த வெள்ளடி யாப்பான்
இசையொடு பொருந்திப் பாவை நோன்புகொள்
கன்னியர் நன்னீர் ஆடற் பொருட்டுத்
துயிலெடை யாக இயல்வது பாவை. 16

[ கோத்தும்பி ]

473. நாலடித் தரவு கொச்சக மாகக்
கோலமுற் றிசைத்தல் கோத்தும்பி யாகும் 17

[ உழத்திப்பாட்டு ]

474. இசைப்பாட் டுருக்களும் இயற்பா வகையும்
கண்ணியும் கும்மியும் பண்ணத்தி விரவப்
பன்னப் படுவது உழத்திப் பாட்டே. 18

[ உந்தி

475. நேரடி முதற்பின் சிந்தடி இரண்டாய்க்
கலித்தா ழிசைபோல் வருந்திரு உந்தி. 19

[ சாழல் ]

476. அளவடி நான்காய்த் தரவு கொச்சகம்
வினாவிடை யாக விளைவது சாழல் 20

[ தாழிசை ]

477. இரண்டடி முதலா ஈரிண் டிறாத்
தனித்தும்மூன் றடுக்கியும் தழுவிய இசையான்
அளவடி முதல்பிக் கியலுமன் தாழிசை. 21

[ வண்ணம் ]

478. தத்த முதலாய எண்ணிரு சந்தக்
குழிப்பிற் சிதையாது அளவடி நெடிலடி
தண்ணெனப் பொருந்தி இசைப்பது வண்ணம் 22

[ தாண்டகம் ]

479. ஈரசை மூவசைச் சீரொடு கழிநெடில்
அடிநான் காய்வரும் தாண்டகம் சீர்சில
குறைந்து வரினது குறுந்தாண் டகமாம். 23

[ மங்கலம் ]

480. நாற்சீரடியினும் தாழிசைப் பாவினும்
இலங்குபல் பண்ணான் இயல்வது மங்கலம்
நலங்குமுத லாயவைக் கடிவரை யின்றே. 24

[ ஓடம் ]

481. ஏலோ லோவெனும் எடுப்பும் முடிப்புமாய்
ஐயலே ஈசா என்பவை மிடைந்து
நாற்சீரடியான் தென்பாங் கொப்ப
ஒழுகிசை யான்வரும் ஓடப் பாட்டே. 25

[ தாலாட்டு ]

482. அசை வரையின்றி இருசீர் முதலா
நசைதரு வழக்கு நடையமைந் திசையொடு
இடையிடை சுவைமிகு விளிப்பெயர் விரவ
கண்வளை ராய்எனும் வேண்டல் விளங்க
ஆரிரரோ வெனத் தொடங்கி இறுதியில்
நாவொலி முரல வருந்தா லாட்டே 26

[ ஏசல் ]

483. ஓரடி முதலாத் தாழிசை விருத்த
நடையான் வழக்கு வழூஉச்சொல் விரவக்
குறிப்பொடு வெளிப்படை யான்வரும் ஏசல்
சிந்து நடையினும் செப்பிடப் பெறுமே 27

[ ஒப்பாரி ]

484. எதுகை மோனை இயைபொடு பொருந்திப்
பாவடி வுற்றும் உறாதும் கையறவு
உணர்த்தும் பாங்கின்ஒத் தியலும் ஒப்பாரி 28

[ ஏற்றப்பாட்டு ]

485. அசை வரைவில்லா நாற்சீ ரடியான்
எண்ணுப் பெயர்த் தொடர் இறுதியாகப்
புராண வரலாற்றுக் கடவுள் மாந்தரைப்
போற்றுமுறை யான்வரும் ஏற்றப் பாட்டே 29

[ வில்லுப்பாட்டு ]

476. பல்வகைக் கண்ணியும் சிந்தும் ஓசையொடு
இயற்பா விரவ விஞ்செப் புரையொடு
ஒல்லும் வகைவரும் வில்லுப் பாட்டே 30

[ கிளிகடி ]

487. நாற்சீ ரடியான் மரூஉமொழி விரவ ஆ
லோலமிட் டிசைத்தல் கிளிகடி, கொக்குக்,
குருவி ஒப்பலும் அதன்பாற் படுமே. 31

[ குயிற்பாட்டு ]

488. விருத்தப் பாவொடு பொருந்தி வரும்குயில் 32

[ ஆனந்தக்களிப்பு ]

489. ஓரடி ஈரடி பல்லவி யாகத்
தனிச்சொல் லமைந்த கண்ணிக ளானும்
பல்லவி இன்றிக் கண்ணிக ளாயும்
அறுத்திசை யொடுவரும் ஆனந்தக் களிப்பே, 33

[ கண்ணி ]

490. குறட்டாழிசை யான் ஒழுகிசை யாயும்
பாணியொடு பொருந்தியும் விளிக்கப்படும்பெயர்
இடையினும் ஈற்றினும் இயையத் தனித்தும்
இசைப்பாட் டிடையினும் வரும்இசைக் கண்ணி 34

[ சிந்து ]

491. இருகழி நெடிலடி தனிச்சொல் இடைவர
ஈரடிப் பின்னர் முடுகியற் சந்தமொடு
இருசீர் முதற்பல் சீர் வந்து இயைபுறத்
தொடைபடப் பல்வகைத் தாளக் கொட்டொடு
பலவடி யானும் தனிச்சொல் இடையுற்று
ஓரடி யானும் ஈரடி யானும்
காதல் வண்ணனை, கதை முதலாய
பொருள்பொரு ளாகக் காவடி நொண்டி என்று
அவ்வப் பெயரொடு வருமிசைச்சிந்து
சீரொத்து வரினவை சமனிலைச்சிந்தாம்
ஏனைய வியனிலைச் சிந்தெனப் படுமே. 35

[ தென்பாங்கு ] [ தெம் மாங்கு ]

492. நெடிலடி யின்பின் நேரடி இரண்டாய்
தனிச்சொல் பொருந்தி விளிச்சொல் இயைய
பேச்சு நடையின் றியலுந்தென் பாங்கே. 36

[ கும்மி ]

493. எண்சீர் ஈரடித் தாழிசை போலக்
கண்ணியா யமைந்துகைக் கொட்டுக் கியையப்
பண்ணமைந் திசைப்பது கும்மிப் பாட்டே, 37

[ தேவாரம் ]

494. சீர்நான் கிரண்டடியான்குறள் வெண்டுறை
நேர்தரு யாப்பினும், ஈற்றடி குறைத்திறும்
குறட்டா ழிசைநிகர் ஈரடி யாப்பினும்
வஞ்சித் துறைபோல் இருசீர் நான்கடி
உறவரும் திருவிருக் குக்குறள் யாப்பினும்
ஏக பாதமாய் இசைக்கும் யாப்பினும்
வஞ்சி விருத்தம் போல்வரு தூக்கினும்
மூச்சீ ரானும் நாற் சீரானும்
பல்லவி போல்மேல் வைப்பமை யாப்பினும்
நாற்சீர் ஈரடிப் பின்னர் இரண்டடி
மேல்வைப் பாக விளங்கும் யாப்பினும்
அளவடி முன்னும் சிந்தடி பின்னுமாய்
நான்கடி ஆசிரி யத்துறை போல
வருந்திரு முக்கால் எனும்தனி யாப்பினும்
அளவடி நான்காய்க் கொச்சகக் கலிகலி
விருத்த யாப்பினும் நெடிலடி நான்காய்க்
கலித்துறைபோல்வழித் தொடையும் சந்தமும்
பொலிதிரு விராக யாப்பினும் எண்சீர்
விருத்தமொத் தடிதொறும் பின்சீர் நான்கும்
முடுகியும் தளர்ந்தும் நடைகொளும் யாப்பினும்
துள்ளலும் முடுகுமாய்த் திருத்தா ளச்சதி
அமைந்தெண் சீரடி யாய் வரும் யாப்பினும்
எழுசீர் முதலடி ஐஞ்சீர் பின்னடி
எண்சீர் முதலடி நாற்சீர் பின்னடி
ஆகநான் கடியான் வெண்டுறைபோலத்
தகவுறு யாப்பினும் கழிநெடி லடியான்
விருத்தம் போல்வரு யாப்பினும், அதன்பின்
ஓரடிப் பல்லவி போல்மேல் வைப்பாய்
இலங்கும் யாப்பினும் இணைக் குறளகவல்
துலங்கும் யாப்பினும் நாற்சீர் குறுந்தொகை
யாப்பினும் ஐஞ்சீர் அடிஎடுப்பாகவும்
நாற்சீ ரடிதொடுப் பாகவும் அமைந்த
யாப்பினும் நனியமைந் தியற்பா இனத்திற்கு
ஓதிய இலக்கண மரபெலாம் இயைந்து
கொட்டமை தாளக் கட்டளைக் குரியவாய்
ஏழிசைப் பண்ணும் ஒத்துறு தானமும்
பாங்கொடு மிடைந்து பரம்பொருள் சீர்த்தி
இறையுறை பதிநலம் இயற்கையொடு கமழ

நான் மறை உட்பொருள் ஆகம ஒளியொடு
புத்திவழி மிளிரப் பாவனை யாக
மேவரும் பாடல் தேவாரமாம், அவை
ஆழ்வார் பாசுரங் கட்குற் ஒக்குமே. 38

[ தமிழ் இசைப்பா பொதுவியல்பு ]

495. குழல்யாழ் இசையொடும் முழவத் தொலியொடும்
கெழுமிப் பாடுதற் கொத்த தாக
எழுவகைச் சுரநிலை ஏற்ற இரக்கம்
பழுநிய ராகத் தாளப் புணர்ப்புடன்
சுருதி லயநிலை தோன்றத் திறமும்
சுவையும் இலங்க இயல்துணை யாக
இசைமேம் படவரூஉம் தமிழிசைப் பாட்டே. 39

[ பண் - சுரநிலை ]

496. குரலே துத்தம் கைக்கிளை உழையே
இளி விளரி தாரமெனும் : சட்சம் இடபம்
காந்தாரம் மத்திரம் பஞ்சமம் தைவதம்
நிஷாதம் எனுமவை ஏழ்சுரம் அவற்றை
சரிகம பதநி எனவரைந் துணர்த்துப. 40

[ ஏற்றஇரக்கம் - ஆரோகண அவரோகணம் ]

497. எடுத்த ராகத் தியைந்த சுரங்களின்
ஆரோ சையம ரோசையை ஏற்றம்
இறக்கம் என்ப இசைநூற் புலவர். 41

] இராகம் - பண்ணியக்கம் ]

498. பண்ணமை அலகின் பல்வகைப்புணர்ப்பான்
எழுந்தொட ரோசை நிறமெனும் ராகமது
பொழுதினுக் கியைப் பொருந்திவரல் மரபே. 42

[ ராகவகை ]

499. அவைதாம்
செவ்வழி சீகா மரந்தக்க ராகம்
இந்தளம் முதலிய பழம்பெயர் தாங்கியும்
சங்கரா பரணம் பைரவி தோடி
கல்யாணி வசந்தம் காம்போதி மோகனம்
வராளிபூ பாளம் சுருட்டிநீலாம்பரி
முதலியநடைமுறைப் பெயரொடு நூறுநூறு
ஆயிர மாவிரிந் திசைக்கும் என்ப. 43

[ தாளம் ]

500. கையினும் காலினும் கருவிபல வற்றினும்
எழுப்பும் கால அளவமை ஒலியே
பாணி தூக்குசீர் எனப்படும் தாளமாம். 44

501. அதுவே,
சச்சபுடம் முதலாய மார்க்கமும் பிறவகைத்
தேசியு மாகத் திகழும், வழக்கினுள்
அட்சர அளவையான் சதுசிரம்திசிரம்
மிச்சிரம் கண்டம் சங்கீரண மெனும்
ஐவகைப் பிரிவாய்க் கொட்டும் வீச்சும்
மேவும் நிலையான் துருவம் மட்டியம்
ரூபகம் ஜம்பை திரிபுடை அடவே
ஏகம் எனும்ஏழ் நிலையொடும் உறழ்ந்து
முப்பத் தைந்தாய் நிகழும் வாச்சிய
முறையான் வரும்பிற தாளமும் உளவே. 45

[ சுருதி ]

502. சபதவிர்த் தவைஐம் பாலா இரட்டச்
சுரநிலை ஈரா றாகும்அவ் ஐந்தும்
நான்காய் விரிந்திரு பத்திரண் டாக
இயங்குதல் சுருதியாம் அவற்றின் கூறுகள்
நுட்ப சுருதியென் றியம்புவர் நூலோர். 46

[ லயம் ]

503. அட்சர கால அளவின் சமநிலை
இரட்டிப்பு நீட்சிகள் லயமெனப் படுமது
முதனிலை வாரம் கூடை அல்லது
விளம்பம் மத்திமம் துரிதம் எனமுத்
திறமாய் விரவி நடைபெறு மென்ப. 47

[ திறம் ]

504. ஏழ்சுர மும்பெறின் முழுப்பண் ஒன்றிரண்டு
இரிவது திறமாம் அதுசம் பூரணம்
ஃசாடவம் ஔடவம் எனவழங் கப்பெறும். 48

[ சுவை ]

505. சுவையு மெய்ப்பாடும் மேற்கிளந் தனவே. 49

[ இசைப்பா வகைகள் ]

506. அலங்காரம் கீதம் பிரபந்தம் தாயம்
சூளாதி சுரஜதி ஜதிசுரம் வர்ணம்
கீர்த்தனை இராக மாலிகை ஜாவளி
பதந்தில் லானா பஜனை நாமாவலி
அன்ன பிறவும் இசைப்பாட்டு வகையே. 50

[ மெல்லிசை ]

507. தமிழிசைத் திரிபும் வடதிசை மேற்றிசை
கீட்டிசை முறையும் கலந்தவை மெல்லிசை
நோட்டுவகைக் குறிப்பிலப் பாட்டுவகை வருமே. 51

[ அலங்காரம் ]

508. எடுத்த சுரங்களை ஏற்ற இரக்கம்
சமநிலை யாகத் தாளக் கேற்ப
அடுக்கி இசைத்தல் அலங்கார மாம் அஃது
இயற்பாத் துணையின் றிலங்கும் மன்னே. 52

[ கீதம் ]

509. அமைந்த சுரங்களின் நன்னடை தாள
அமைவொடு சமனாய்ப் பண்ணொடு தோன்ற
வெண்டா ழிசைபோல் மெல்லிய சொற்களான்
சீரமைந் தியல்வது கீதம் எனப்படும். 53

[ பிரபந்தம் ]

510. பாட்டுடைத் தலைவன் பண்புந் திறலும்
தீட்டிய பாணிபண் சுரங்கட் கியைய
விருத்தம் தாழிசை கீர்த்தனை வகையுள்
பொருந்தப் புனைவது பிரபந்த மாகும். 54

[ தாயம் (டாயம்) ]

511. பண்ணொடு சுரவரி கண்ணிய டாயம்
பாணிக் கேற்ற சீரமைந் தடிகள்
எடுப்பும் முடிப்புமாய் இயலும் என்ப. 55

[சூளாதி ]

512. தாள வகைபல சார்ந்தினி திசைக்கும்
சூளாதி அவ்வகை பாணிக் கேற்பக்
கொச்சக ஒருபோகுக் கொத்த வடிவான்
ஆளத்தி விரவ அமைந்துவரு மென்ப. 56

[ சுரசதி ]

513. அவிநயக் கூத்திற் கிசைந்த தாகச்
சிட்டை முத்தாயி சுரமிடை விரவ
குறைந்த அடிகளான் கீர்த்தனை வடிவாய்ச்
சிறந்து வரும்சுர சதியென மொழிப. 57

[ சதிசுரம் ]

514. இலக்கிய மின்றிச் சுரக்கோவை யாகத்
துலங்குவது சதிசுரம் ஆகும் என்ப. 58

[ வர்ணம் ]

515. பல்வகைச் சுரவரி சிட்டை மகுடம்
முத்தாயி சுரத்தொடும் அகரப் பலுக்கலாய்ச்
சிலஎழுத் தமைந்த சீரொடு எடுப்பும்
தொடுப்பும் முடிப்புமாய்த் தோன்றிப் பல்வகை
தாள நிலை விளக்குவது தான வர்ணமாம். 59

[ கீர்த்தனை ]

516. விரும்புமொரு குறிக்கோள் வேட்கை நீதிகளை
முதன்மைப் படுத்தும் எடுப்பும் அதனை
விரித்துவலி யுறுத்தும் தொடுப்பும் அதனது
காரணகாரியம் விளக்கும் முடிப்புமாய்ப்
பாவமும் கருத்தும் பாணியும் பண்ணும்
நனிபுலப் படுத்தும் இனிய சொற்களான்
மோனை எதுகை இயைபுத் தொடைமிக
சிலபல அடிகளான் கலைநலங் கூடக்
கிளப்பது தருவெனும் கீர்த்தனை யாகும். 60

[ இராகமாலிகை ]

517. பற்பல ராகம் பொற்புற விளங்க
அடுக்கிப் பாணியொடு தாழிசை கண்ணி
கீர்த்தனை யாயும் தாளப் புணர்ப்பு
தவிர்ந்தவை விருத்த யாப்பொடும் பொருந்தி
வருவது ராக மாலிகை யாகும். 61

[ சாவளி ]

518. இனிய எளிய பண்ணும் பாணியும்
கனியக் காதற் சுவையொடு தெய்வப்
பத்திமை துலங்கக் கீர்த்தனை வடிவாய்

நிரம்பிய சீரொடு குறைந்த அடிகளான்
திறம்பட வருவது சாவளி என்ப. 62

[ பதம் ]

519. விரும்பிய தலைவன் மேல்தன் வேட்கை
அரும்பிய காமச் சுவைகமழ் சொற்களான்
நிரம்பிய ராகத் தாளப் புணர்ப்பொடு
கீர்த்தனை போல எடுப்புந் தொடுப்பும்
முடிப்புமாய் விரகந் தோன்ற வரும்பதம்
விளம்ப நடையான் இலங்குதல் சிறப்பே. 63

[ தில்லானா ]

520. வடதிசை இசைவழி திரனதொந் திரனா
தில்லில் லானவென் றாளத்தி யமைப்பொடு
பாணியும் பண்ணும் ஏணி யாகக்
கீர்த்தனை யாப்புடன் எடுப்பும் தொடுப்பும்
சொற்கட்டமைய முடிவினிற் றாழிசைப்
பாவடி யமைந்து வருந்தில் லானா
முழவொடு நாட்டியச் சதிவகை புணர்ப்பின்
பழந்தமிழ்ச் சொற்கட் டிசைமர பென்ப. 64

521. சாவளி பதம்தில் லானா மூன்றும்
அவிநய நாட்டியக் குரியவை என்ப. 65

[ பசனை - நாமாவலி ]

522. இறையவர் பெயர்ப்புகழ் ஏத்தும் வகையான்
சரணம் தவிர்ந்த கீர்த்தனை கீத
வடிவொடு தெய்வச் சீர்த்தியை விளம்பி
குறைநயப் பித்தலாய் வடதிசை மரபின்
நிகழ்வது பசனை நிரம்பிய மந்திரத்
தெய்வப் பெயர்களைப் பண்ணொடு நிரலே
நசையுறப் போற்றுதல் நாமா வலியே. 66

[ புறனடை ]

523. விதந்தன அல்லன பிறவும் தமிழிசை
அமைப்பொடு வருவன ஆய்ந்தனர் கொளலே. 67

## 10. உரைப்பாவியல்

[ பொது வியல்பு ]

524. கற்றவர் மற்றவர் இருசா ராரும்
தெற்றென அறிந்த தமிழோ டயல்மொழிச்

செறிவுடைச் சொற்களான் கவிதைக் கருப்பொருட்
கேற்ற படிமக் குறியீடு தேர்ந்து
தெளிவும் சுருக்கமும் திகழும் உத்தியொடு
ஓசை அடிதொடை சீர்வரை யின்றிச்
சொல்லமைப் போசையுள் எடக்க உருவும்
உவமம் உருவகம் தற்குறிப் பேற்றம்
பிறிது மொழிதல் குறிப்பு சிலேடை
இல்பொருள் உவவம் நுட்ப மாகிய
அணிநயம் நுண்ணிதின் பொதிய நுகர்வோர்
துணிதற் கரிய தொகுபொருட் புணர்ப்பும்
அங்கதம் பிசியெனும் நெறியான் இடியெனத்
தாக்கமும் மின்போல் பளிச்செனும் உணர்ச்சியும்
நீர்வீழ்ச்சியைப்போல் கருத்துப் பாய்ச்சலும்
தீப்போல் உறைப்பும் தோன்றப் பல்வகை
முன்னமொடு கிளப்பது புதுப்பா வாகும்.
சொல்லொழுங் கமைய பல்வகை இயற்கைப்
பொருளின் வண்ணனை மருவிய தொடரையும்
உரைப்பா என்பமன் ஒருசா ராரே. 1

[ உரைப்பாக் கருப்பொருள் ]

525. மக்கட் பிறப்பின் வாழ்க்கையில், செல்வ
உடைமையில் உரிமையில் கடமையில் காணும்
எல்லையில் ஏற்றமும் சொல்லொணா இறக்கமும்
பல்வகைப் பட்ட அடிமைக் குட்டமும்
கல்வி அரசியல் வணிகத் துறைகளின்
புல்லிய வஞ்சனைப் போக்கும் ஐம்பெரும்
பாதகங் கோல்கொளக் காவல் செய்திட்டமும்
பெண்டிரை விற்றலும் மாப்பிள்ளை விளையும்
கன்னியர் கைம்மையும் கனலிற் படுத்தலும்
காதற் கேண்மையும் கடப்பாட் டுணர்வும்
கைக்கிளைக் காமமும் மக்கள் நேயமும்
பணத்தின்முன் வளைந்து தணந்திடும் சட்டமும்
கலையெனப் புலைகள் தலைவிரித் தாடலும்
தாளிகை பதவியர்க்குத் தாளங் கொட்டலும்
சாதி சமய மொழிவெறிச் சழக்கும்
பதவிப் போர்வையுள் பதுங்கும் ஊழலும்
கோடிபல கோடி மக்களின் உழைப்பால்
கூடிய வளத்தைச் சிலருண்டு கொழும்பதும்
வறுமையும் மடமையும் வாடாது செழித்தலும்

காதலர் ஏக்கமும் மாதர்விடு தலையும்
காந்தாரி நாண மக்களைப் பெருக்கலும்
நிரோத்து முதலாய புதுமைப்பொருள்களும்
தையலர் புனையும் பொய்ம்மைக் கோலமும்
பொதுவுடைமைச்சம தருமப் பார்வையும்
மதுவும் கள்ளக்கடத்தலும் பிறவும்
புதுப்பாக் கருப்பொரு ளாமுகிழ்ப் பனவே. 2

[ படிமம் ]

526. உணர்த்தப் புகுங்கருத் தமைவு. மேற்கோளா
எடுத்த பொருளின் இயற்கை பண்புரு
வடிவு தொழில்களைப் பாப்பொருட் கேற்ப
மாற்றிஉரு வகித்தலும் அருவப்பொருட்கு உரு
வடிவமைத் தியம்பலும் நுண்பொருட்குப் பருப்
பொருட் பண்பேற்றலும் திணைமாறு படுத்தலும்
கேளா நடவா புரியா எண்ணாப்
பொருள்கள் அவற்றைப் புரிவன வாகப்
பகர்தலும் பிறவும் படிமம் என்ப. 3

[ குறியீடு ]

527. புகழ்நிலை பெற்ற புராண இதிகாசக்
கதைமாந் தர்கள நிகழ்சிகள் சமயச்
சான்றோர் வியத்தகு செயல்கள் நடைமுறை
அரசியல் தலைவர்தம் செயல், வரலாறுகள்
அன்ன பிறவும் உணர்த்தப் படும்பொருட்கு
இயையவைத் துரைத்தலைக் குறியீ டென்ப. 4

[ தெளிவு ]

528. உணர்த்தும் பொருளும் உரைபடு கருத்தும்
கணத்துள் புலப்படக் கழறுதல் தெளிவே. 5

[ சுருக்கம் ]

529. சுற்றி வளைத்தல் தொடர்ந்த வருணனை
வெற்றுக் கற்பனை விரவுத லின்றி
நறுக்கெனச் சொல்லுதல் சுருக்க மாகும். 6

[ உத்தி ]

530. உருவக முதலா அணிதொனி யமைய
அங்கத மாகவும் மங்கல மாகவும்
உள்ளுறை இறைச்சியொடு அன்னபிற வாற்றான்

தங்கூற் றாகவும் அயற்கூற் றாகவும்
பாத்திரம் தாமே பகர்வ தாகவும்
சூத்திரம் போலச் சொல்லுதல் உத்தியாம். 7

[ மின்னற்கவிதை (ஹைகூ) ]

531. உரைப்பா அமைப்பிற் கோதிய நெறியான்
நுண்ணிய கருத்தினை நோக்கமை சொற்கள்
அசைச்சீர் இயற்சீர் ஆறே முளவினில்
சிரலின் பாய்ச்சல்போல் திண்ணெனச் செப்புதல்
மின்னற் கவிதையெனப் பன்னுவர் ஒருசார். 8

[ புதுக்கவிதை விளைவிற்குச் சிலகாரணம் ]

532. அறிவியல் கடந்த முறுகிய லாகப்
பழமைய்யை நோக்கும் பார்வையும், மேற்புலக்
கவிநெறித் தாக்கமும் புதுமையில் வேட்கையும்
மரபினில் உவர்ப்பும் யாப்பினில் வெறுப்பும்
பட்டாங் கறைதற்கு ஏழுமுள ஆர்வமும்
வரையறை வேண்டா உரிமையும் உரைவழி
இயற்றுதற் கெளிதெனும் மயக்கமும் சிலர்க்கு
புகழ்பெறும் அவாவும் புதுக்கவி விளைவிற்கு
அடிப்படைக் காரணம் பலவினுட் சிலவே. 9

## 11. உரை இயல்

[பொதுவியல்பு]

533. எடுத்த பொருளின் இயல்பும் நலனும்
மடுத்துள கருத்தும் மாண்பும் பயனும்
நுட்பமும் வளமும் உள்ளுறைக் குறிப்பும்
திட்பமும் விளங்கச் செவ்விய நடையான்
ஒப்புர வறித்தினிது உரைப்பது உரையே. 1

[ உரைவகை ]

534. அதுவே,
செய்யுளுரை நூலுரை வினாச்செப் புரையே
கதையுரை நாடக உரைபாயி ரவுரை
தொடர்புரை மொழிபெயர்ப் பெனப்பல திறப்படும். 2

[ செய்யுளுரை ]

535. யாப்பினைக் கண்ணழித் துறுபொருள் சுட்டிச்
சொல்லுரு வங்களைத் துலங்கக்காட்டி
ஒல்லும் பொருள் தேர்ந்து ஒப்பிட்டு உத்தியும்
அழகும் ஆழமும் அகலமும் நுட்பமும்

தழுவித் தடைவிடை யான்ஆ சிரியன்
உட்கோள் இதுவெனக் கூறுசெய்து ரைத்தல்
செய்யுள் உரைஎனச் செப்புவர் புலவர். 3

[ நூலுரை ]

536. மேற்கூ றியல் பொடு வரலா றுதாரணம்
மேற்கோள் காட்டி விளம்புதல் நூலுரை. 4

[ வினாச் செப்புரை ]

537. உணர்த்தப் புகுமொரு பொருளின் தோற்றம்
இயக்கம் பயன்குணம் இன்னபிற வற்றை
ஒருவரோ சிலரோ வினாவிடை யாக
விளக்குதல் வினாச்செப் புரையெனப் படுமே. 5

[ கதையுரை ]

538. அறநெறி மெய்யியல் வாழ்வியல் முதலிய
உறுபொரு ளமைந்த கடவுட் புராண
இதிகாச வரலாற்றுச் செய்திகள் தம்மையும்
அருஞ்செயல் புரிந்த மாந்தரைப் பற்றிப்
புனைந்தர லாற்றையும் அன்ன பிறவற்றையும்
நகையொடு கூறல் கதையுரை என்ப
இசைச்சொற் பொழிவென இயம்பலுமதுவே
யாழ் குழல் முழவத் திசையொடு சுருதி
அமையப் பேசிடின் அரிகதை யுரையாம். 6

[ நாடகஉரை ]

539. கலையிலக் கியத்தினும் காட்சி அரங்கினும்
தலைவரும் மெய்பாட் டவிநயம் புரிந்து
தனித்தும் இணைந்தும் நாடக மாந்தர்
நடிப்பிடைக் கிளப்பது நாடக வுரையே. 7

[ பாயிரவுரை ]

540. உணர்த்தப் புகுந்த ஒன்றனது சிறப்பை
வரலாறு விளங்க முன்வகுத் துரைத்தல்
பாயிர உரையெனப் பகருவர் நூலோர். 8

[ தொடர்புரை ]

541. முன்னர்க் கூறிய கருத்தொடு செய்தியைப்
பின்வரும் கருத்தொடு இணைப்பது தொடர்புரை
வில்லிசைப் பாட்டிடை வினாவும் செப்புமாச்
சொல்லுதல் தொடர்புரைப் பாற்படு மென்ப. 9

[ மொழி பெயர்ப்புரை ]

542. ஒருமொழிக் கருத்தினைப் பிறிதொரு மொழியான்
புரையற வழங்குதல் மொழிபெயர்ப் புரையே. 10

[ நடை ]

543. தத்தம் புலமை ஆளுமை விளங்கச்
சொற்பொருள் தேர்ந்து பொற்புற வழங்கும்
மேற்கிளந் தெடுத்த உரைகளின் இயக்கம்
நடையெனப் படுமது உணர்ச்சி, மெய்ப்பாடு
அணிநடை பொருள்கோள் சேரி தருக்கம்
நாடகம் செய்யுள் பின்னல் வினாவிடை
தூய்மை கலப்பென நிகழுமன் ஆங்கே. 11

## 12. நூல் இயல்

[ பொதுவியல்பு ]

544. எடுத்த பொருளின் இயல்பெலாம் ஓர்ந்துஅதை
அடுத்துப் பயன்கொள விழைவார்க் கதன்திறம்
விளங்கு முறையான் களங்கம் நீக்கி
அறிவொளி ஆக்கத்திற் கமைவன சுட்டி
நெறிப்பட வரையறுத் துரைப்பது நூலே. 1

545. இலங்கு பல்வேறு பொருளிலக் கணங்களை
அவ்வத் துறைகளின் நூல்வழி யறிகஈண்டு
இலக்கண மென்பது மொழியிலக் கணமே. 2

546. இலக்கணம் நூல்மறை மரபெனல் ஒருபொருள்.
இலக்கணம் இலட்சணம் வேறுவே றாகும். 3

[ இலட்சணம் ]

547. உருஅரு வாய்த்திகழ் இருதிணைப் பொருளின்
வடிவுரு செயல்பயன் தோற்றம் இறுதியெனும்
இயல்பினை உள்ள வாறியம்புவது இலட்சணம். 4

[ இலக்கணம் ]

548. இவ்வியல் பமைந்த இப்பொருள் இவ்வாறு
இருத்தல் வேண்டுமென விதித்தல் இலக்கணம்
ஒத்தொருங்கு நிகழும் இடனுமா றுண்டே. 5

[ மொழிஇலக்கண இலக்கணம் ]

549. இருவகை வழக்கொடும் இயங்கும் மொழியின்
மரபியல் தெரிக்கும் நூலெனப் படுவது
முதலொடு முடிவரை முரணின் றொழுகித்
தொகைவகை விரியான் பொருண்மை சுட்டி
ஆழ்ந்தகன் றொளிரும் உரையகத் தடக்கிச்
சிதைவற விதித்தலும் விலக்கலு மாக
உத்தியும் அழகும் உள்ளுற நுண்ணிதின்
நூற்பா யாப்பொடு ஓத்தியல் படலம்
எனும்பகுப் புடைத்தாய் இலங்குவது என்ப. 6

550. அதுதான்
முதலும் வழியுமென இருதிறப் படுமே 7

[ முதனூல் ]

551. வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும் 8

[ வழிநூல் ]

552. முதனூற் பொருளின் முடிபொருங் கொத்து
முன்வழக் கொழிந்தவை முறையின் நீக்கிப்
பின்நிகழ் வழக்கினைப் பிழையறக் கூட்டித்
தொகுத்தும் விரித்தும் மொழிபெயர்த் தியாத்தும்
வழங்குதல் வழிநூல் மரபென மொழிப. 9

[ இலக்கண நூலுரை ]

553. உரையே ;
காண்டிகை அகலமென இருவகைப் படுமே. 10

[ காண்டிகையுரை ]

554. சூத்திரம் நவலும் கருத்தினை நோக்கிப்
பொருள்புலப் பாட்டிற் கேற்பத் தொடர்களைக்
கண்டம் படத்துணித் துள்பொருள் கரவாது
விளக்கும் சொற்பொருள் நுண்மையை ஏதுவின்
எடுத்துக் காட்டினும் செப்பின் வகையினும்
கவர்பற உரைப்பது காண்டிகை உரையாம். 11

[ அகலவுரை ]

555. சூத்திரத் துட்பொரு ளன்றியும் யாப்புற
இன்றிய மையாத யாவும் ஒன்ற
ஐயமும் மருட்கையும் நீங்க முன்னூற்

சான்றொடு தடைவிடை என்று திண்ணிதின்
காண்டிகை உள்ளுறுத்து உத்திகள் விளங்கப்
பொருள்வரைந் துரைத்தல் அகலவுரை யாகும். 12

[ சிதைவு ]

556. கூறியது கூறல் மாறுகொள உரைத்தல்
குன்றக் கூறல் மிகைபட மொழிதல்
பொருளில கூறல் வழூஉச்சொற் புணர்த்தல்
மயங்க வைத்தல் மற்றொன்று விரித்தல்
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்
என்ன வகையினும் மனங்கோ ளின்மை
அன்ன பிறவுநூல் உரைச்சிதை வாகும் 13

[ விதித்தல் விலக்கல் ]

557. இதனியல் பிதுவெனல் விதித்தல் இதுமுறை
அன்றெனக் கூறுதல் விலக்க லாகும் 14

[ உத்தி ]

558. நுதலிப் புகுதல் ஒத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துமெய்ந் நிறுத்தல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
உரைத்தும் என்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக் காட்டல்
தந்துணி புரைத்தல் பிறன்கோட் கூறல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
ஒப்பின் முடித்தல் மாட்டெறிந் தொழுகல்
முடிந்தது காட்டல் அதிகார முறைமை
எதிர்பொரு ளுணர்த்தல் ஏதுவின் முடித்தல்
ஒன்றென முடித்தல் தன்னினம் முடித்தல்
மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல்
மொழியா ததனையும் முட்டின்று முடித்தல்
தலைதடு மாற்றந் தந்துபுணர்ந் துரைத்தல்
இன்ன தல்லது இதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறனூல் முடிந்தது தானுடம் படுதல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்
உய்த்துணர வைத்தல் ஆணை கூறலொடு
ஒத்தவை பிறவும் உத்திவகை என்ப 15

[ அழகு ]

559. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
செஞ்சொற் புணர்த்தல் செப்புதற் கினிமை
ஓசை யுடைமை ஒண்மையுடைத் தாதல்
முறையின் வைப்பே உலகமலை யாமை
விழுமியது பயத்தல் எடுத்துக்காட் டுறுதல்
அன்ன பிறவும்நூற் கழகென மொழிப. 16

[ சூத்திரம் — நூற்பா ]

560. ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருள்நனி விளங்கச்
சில்வகை எழுத்தின் செய்யுட் டாகி
உரையகத் தடக்கிய ஒண்மைத் தாகிப்
பல்வகை யானும் பயன்தெரி புடையது
சூத்திரத் தியல்பென யாத்தனர் புலவர். 17

[ ஒத்து ]

561. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது
ஓத்தென மொழிப உயர்மொழிப் புலவர். 18

[ இயல் ]

562. கிளக்கப் படும்பொருள் உறுப்பொவ் வொன்றையும்
விளக்குதற் கமைந்த பகுப்பு இயலாகும் 19

[ படலம் ]

563. ஒருபொருள் பற்றி முறையொடு விளம்பிய
பல்லியல் தொகுதி படலம் எனப்படும். 20

564. படலம் அதிகாரம் காண்டம் ஒருபொருள்
காதை இலம்பகம் பரிச்சேதம் சருக்கமென்
றியம்புதல் இலக்கியப் படலப் பெயராம். 21

## 13. காவிய இயல்

[ தொடர்நிலைச் செய்யுள் ]

565. கடவுளர் கடவுட் டன்மையர் ஒப்பிலா
மானுடர் பற்றி உள்ளதும் இல்லதும்
கலந்திரு வழக்கினும் கிளைக்கதை விரவித்
தொன்று தொட்டினிது வழங்கு வரலாற்றையும்
புவிபுகழ் வேந்தர் குறுநில மன்னர்

இறையரு ளாளர் நிறைபே ரறிஞர்
அருந்திற லாளர்தம் மெய்வரலாற்றையும்
புலனெறி வழக்கொடு நலனுறப் புனைந்து
திரியா அறநெறி தெய்விகம் மெய்யியல்
இழுக்கிலா இன்பம் வழுக்கிலா வீரம்
மாசிலா அரசு தூசிலாக் குடிகள்
வாழ்வின் குறிக்கோள் இன்னன மாந்தர்
பயன்கொளும் வகையான் நாற்பெரும் பொருளும்
நயம்படச் சுட்டிப் பல்வகைப் பாவினும்
பாட்டினும் உரையினும் மாட்சியின் விரித்தல்
தொடர்நிலைச் செய்யுள் என்மனார் புலவர் 1

[ அதன் வகை ]

566. அதுவே
காவியம் புராணம் கதைபொதி பாடல்
சிற்றிலக் கியம்பா மாலை எனவரும் 2

[ காவியம் ]

567. அவற்றுள்
காவியம் என்பது தொகுப்பும் படைப்புமாய்ப்
பேரிது சிற்றிதென்று இருவகைப் படுமே 3

[ தொகுப்புக் காவியம் ]

568. தொன்றுதொட் டுருவாய்ப் பல்வகைக் கிளையொடு
ஒன்றி வழங்குங் கதையெலாம் ஓர்ந்து
கலைநலம் பொலிய உலகியற் கொப்பஓர்
தலைப்பினுள் தொகுத்து நிலைபெறு மாற்றான்
தகவுற ஒருவரான் செய்யப் பெறுவது
தொகுத்துரை காவிய வகையெனச் சொல்லுப. 4

[ படைப்புக் காவியம் ]

569. பண்டை வரலாற்றுப் பாங்கினிற் கற்பனை
மாந்தரை உலகிற் கேற்பவுரு வாக்கியும்
வையம் போற்ற வாழ்ந்து மறைந்த
மொய்ம்புடை மேலோர் மன்பதை வாழ
அருஞ்செயல் புரிந்து வாழ்ந்து கொண்டிருக்கும்
பெருந்தக வாளர் அன்னவர்ப் போற்றிப்
பழமையும் புதுமையும் கிழமையொடு கலந்து

விழுமிய நெறியான் வித்தகந் தோன்ற
அடைவுற ஒருவரான் தொடுக்கப் பெறுவது
படைப்புரை காவிய மாம்எனப் படும். 5

[ பெருங்காவியம் ]

570. வாழ்த்து அவையடக்கம் வருபொருள் முன்னர்ப்
பாயிர மாக, அறமுதல் நான்கும்
மேவியுள் ளுறைய தேவர் மானுடர்
அரசரென் றிவருள் ஒருவர் தலைவரா
இயைபமை பிறர்துணை மாந்தரா அமைய
அவரது பிறப்பு மரபுநிலை வாழ்ச்சி
வாழ்க்கை நிகழ்ச்சியை வரைவர லாற்றினுள்
மலைகடல் யாறு வளவயல் மாட்சி
நெடுநகர்ப் பீடு கடிநகர்ச் சிறப்பு
வான்மழை தென்றல் அற்சிரம் வேனில்
கதிரெழு காட்சி மதிநில வெழுச்சி
உடுத்தொடை ஓவம் முதலிய வண்ணனை
நன்மணம் புணர்தல் பொன்முடி சூடல்
மனையற மாட்சி மக்களைப் பெறுதல்
வெள்ளணி மங்கல விழவயர்ந் துவத்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாட்டு
மதுக்களி கூர்தல் பொதுக்கவ றாடல்
கலவியிற் களித்தல் புலவியுள் திளைத்தல்
குடிநலம் பேணல் கொடைநயந் தளித்தல்
கோல்புரி செம்மை நாற்படை வன்மை
சூழ்ந்துவினை யாற்றல் தேர்ந்தொழு கூடல்
மைந்துமலி வேந்தரொடு சந்துசெய் தூது
ஒன்னு ரொடுங்க மன்னெயில் வளைத்தல்
கடந்தடு ஞாட்பின் மடந்தபு காட்சி
புலவரைப் பேணல் கலைஞரைப் போற்றல்
அன்னபிற அகப் பொருள் புறப்பொருள் புனைவு
துன்னிய நடைத்தாய்ச் சுவைபல கூரத்
தொடக்கம் வளர்ச்சி தொடர்ச்சி முதிர்ச்சி
முடிவெனும் வகைபடக் காண்டம் படலம்
இலம்பகம் காதை முதலிய உறுப்பொடு
தன்மையும் உயர்வு நவிற்சியு மாகிய
இயலணி முழுதுறச் சொல்லணி விரவ
எக்காலத்தும் தக்க மேற் கோளாப்
பயில்வோர் பல்வகைப் பயன்கொளும் பாங்கிற்
பீடுபெறப் புனைவது பெருங்கா வியமாம் 6

### [ சிறுகாவியம் ]

571. அறமுதற் பொருளினும் வண்ணன்ன வகையினும்
சிலகுறைந் தியல்வது சிறுகாப்பிய மவ்வ
பாவியம் எனவும் வழங்கப் பெறுமே 7

## 14. புராணவியல்

### [ புராணம் ]

572. சமயச் சார்பமை கடவுளர் கடவுட்
பிறப்பாய்த் தோன்றிய பீடுடையாளர்
விண்ணவர் போற்ற விளங்கிய மன்னவர்
பார்புகழ்ந் தேத்தும் பேரரு ளாளர்தம்
சீரிய வரலாறு தெரிப்பதும் வழிபடு
தெய்வம் வீற்றிருக்கும் திருவிடப் பெயரான்
செய்வர லாறும் அன்ன வகையான்
வையம் உய்ய மெய்யறி வாளர்
அறமுதல் நான்கும் அமைவுறச் சிறந்த
காவியப் பண்பொடு அணிநலங் கமழப்
புகல்வன பிறவும் புராணம் என்ப. 1

### [ புராணப் பொருளமைப்பு ]

573. போற்றிஎடுத் துரைக்கும் புராணத் தலைவர்தம்
பிறப்பும் பிறப்பின் நோக்கமும் ஆக்கமும்
தொன்மைச் சிறப்பும் ஈன்றோர் புரந்தோர்
ஏற்றமும் தோன்றிய குடிநலச் சிறப்பும்
நாடுநகர் யாற்று வளமும் அன்னவர்
ஆற்றலும் அருளும் வாகையும் மறமும்
ஈகமும் வியத்தகு பெருமிதச் செயல்களும்
வரைவிலா தளித்த வரங்களும் அடியார்
உற்ற இடுக்கணும் நீக்கமும் அவர்தம்
அசைவிலா உரனும் நசையிலா உள்ளமும்
நற்றவர் போற்றிப் பெற்றபல் பேறும்
மற்றைய சிறப்பும் பெருங்கா வியத்திற்கு
உரைத்தனவற்றுள் ஒத்தவை பிறவும்
பொருந்தப் புனைவது புராணத் தியல்வே. 2

## 15. கதைபொதி பாடல் இயல்

574. புராண இதிகாச மாந்தருள் பொருவிலா
அருஞ்செயல் புரிந்தோர் தனிவர லாற்றையும்
தன்னிக ரின்றித் தகவொடு வீர

சாகசம் புரிந்து தனிப்புகழ் எய்திய
குலமுன் னோரை வழிபடு தெய்வமாப்
போற்றிய வர்தம் வாழ்கைவர லாற்றையும்
பழுதிலா வழக்குச் சொற்கள் விரவத்
தாழிசை கண்ணி பண்ணத்தி வகையினும்
பாவினும் புராண மரபினுள் ஏற்பவை
யாப்புற அமைத்து யாவரும் சுவைத்துப்
பயன்கொளப் புனைவது கதைபொதி பாடல்
அறமுத லாயமெய்ப் பொருள்நலம் பயக்கும்
கற்பனைக் கதைகளும் பொற்புறு மதற்கே 1

## 16. சிற்றிலக்கிய இயல்

### [ பொதுவியல்பு ]

575. கடவுளர் தகவமை பேரரு ளாளர்
பாடுபெறு மாந்தர் பீடுபெறு மைந்தர்
அருஞ்செயல் பெரும்பணி கொடைநலம் தியாகம்
மெய்யுணர் வாற்றல் செய்தவம் மாண்பு
வெற்றிச் சிறப்பு கைக்கிளைக் காதல்
மற்றைய பிறவும் தெற்றென விளங்க
பாட்டியல் கூறும் கோட்டமில் நெறியான்
பலவகைப் பாவினும் இனத்தினும் பாட்டினும்
கற்றவர் போற்றும் பெற்றியிற் படைப்பது
சிற்றிலக் கியமெனச் செப்புவர் புலவர். 1

### [ பாட்டியல் மரபு ]

576. சிற்றிலக் கியத்துப் பாட்டுடைத் தலைவர்தம்
வருணம் இயற்பெயர் பால்நிலைக் கேற்ப
மங்கலம் சொல்பால் வருணம் உண்டி
தானம் எழுத்துநாள் பிழையாக் கதிகணம்
எனுமீ ரைந்தும் எடுத்த முதற்சீர்க்கு
ஒப்பவைத் துரைத்தல் சிறப்பு அவைமுரணுதல்
பாட்டுடைத் தலைவற்குத் தீங்கெனக் கூறும்
பாட்டியல் நூலோர் பாட்டியல் மரபு
சம்மண நூற் கோளது தமிழ்நெறி யன்றே 2

577. மங்கலத் தொடக்கம் யாவர்க்கும் பொது அவை
வாழி மா, மலை மலர்தார் விசும்பு
சீர்பொன் பூமணி ஞாயிறு திங்கள்
கார்நீர் தேர்புகழ் கங்கை கடல் நிலம்

எழுத்தமிழ் தம்சொல் கடவுள் கங்கை
திருநான் மறைதமிழ் தாமரை விளக்கு
மணம்முரசு லகுஒளி தென்றல் கலைநலம்
அகரம் சிவம்முத லாயவை என்ப. 8

[ சிற்றிலக்கிய வகை ]

580. பிள்ளைத் தமிழ்உலா அகப்பொருட் கோவை
கலம்பகம் பரணி ஆற்றுப்படை தூது
குறவஞ்சி பள்ளு காஞ்சி அம்மானை
சதகம் அந்தாதி பதிகம் மழலையர்
இலக்கியம் உருவகச் செய்யுளென் றின்னன
பிரபந்த மெனும்சிற் றிலக்கிய வகையே 4

[ பிள்ளைத்தமிழ் ]

581. திருமால் முதலாத் தெய்வம் திருவருள்
மருவிய பெரியோர், மாந்தருட் சிறந்தோர்
காக்கெனத் தொடங்கிக் கருதிய தலைவரது
அறிவும் ஆற்றலும் அருளும் குணனும்
நெறியொடு விளங்கச் செங்கீ ரைத்தால்
சப்பாணி முத்தம் வருகைஅம் புலியெனும்
பொதுவேழ் பருவமும் ஆண்மகக் காயின்
சிற்றில் சிறுபறை சிறுதேர்ப் பருவமும்
பெண்மகக் காயின் அம்மனை நீராட்டு
ஊசலும் கூட்டி நகைமிகு பாவினும்
இனத்தினும் முறையான் இசைநலங் கமழ
அன்னவர் குணம்செயல் அழகுற விளங்கப்
பன்னுவது பிள்ளைப் பாட்டென மொழிப 5

[ உலா ]

582. கோயிலுள் அமர்ந்து மன்பதை புரக்கும்
தேவும் அரசும் மாநகர் மக்கட்குக்
காட்சிதந் தருளியவர் மாட்சி காணற்கு
எழுந்து நீராடி எழிலணி பூண்டு
மணிமுர சியம்ப மந்திரச் சுற்றமொடு
புகர்முக வேழத்து நகர்வலம் புரிவுழிக்
கோநகர் மாந்தரும் கொடியிடை மகளிரும்
ஓகையிற் குழுமி உளமகிழ் தேத்த
இற்புறங் கடவாக் கற்பமைந் துறையும்

பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம் பெண்எனும்
பொருவரும் வடிவிளம் பருவ மகளிர்அத்
தலைவனைக் கண்டு தம்நிலை மயங்கிக்
காமுற் றுரைத்தலும் ஆயமும் தாயரும்
ஏமுறப் பேணலும் ஆகிய வற்றினை
வரலாற்றுச் செய்தியும் அகப்பொருள் நுட்பமும்
தெற்றென விளங்கக் கலிவெண் பாவினும்
வேறுபிற பாவினும் இனிதெடுத் தியம்பல்
நகர்வலம் புரிஉலா இயல்பென மொழிப 6

[ மகளிர் இளம்பருவப் படிநிலையும் அகவையும் ]

583. இயம்புமேழ் பருவமும் இளமைப் பருவப்
படிநிலை யாதலின் ஐந்து முதற்பதி
னொன்பான் வரையும் இவ்விரண்டாக
அடுக்கி அகவை தகவுறும். நாற்பான்
வரைவகுத் துணர்த்தல் தமிழ்நெறி யன்றே. 7

[ அகப்பொருட் கோவை ]

584. கடவுளர் மாந்தருட் சிறந்தோர் ஒருவரைப்
பாட்டுடைத் தலைவராப் பாங்குற அமைத்து
முதல் கரு உரியெனும் மூன்றினும் நிறைந்த
அகத்திணை களவு கற்பெனும் கைகோட்கு
உரைத்த கிளவித் தொகைதொகை விரியாக
அகப்பொருள் மாந்தரை அமைத்துஅவர் கூற்றினை
நாடக வழக்கின் நயம்படத் தொகுத்தாங்கு
அகப்பாட் டுறுப்பெலாம் பொருந்த உள்ளுறை
உவமம் மெய்ப்பா டிலங்க ஊர்ப்பெயர்
இடப்பெயர் பாட்டுடைத் தலைவர்தம் பெயரான்
கலித்துறை யானும் பிறபா வானும்
புலத்துறை முற்றப் புனைவ தகப்பொருட்
கோவையின் இயல்பெனக் கூறுவர் புலவர்
ஒருதுறை பற்றியும் எழுத்து வருக்க
நிரலினும் கோவை நிகழ்த்தப் பெறுமே. 8

[ கலம்பகம் ]

585. கடவுளர் மன்னவர் மாந்தரிற் சிறந்தோர்
பாட்டுடைத் தலைவராக் கொண்டவர் மாண்பும்
சீர்ந்தியும் ஏத்தி அகப்பொருள் புறப்பொருள்
கூறுகள் விளங்க ஒன்பான் சுவையொடு

பொருளணி சொல்லணி பொருந்திய பல்வகைப்
பாக்களான் முதற்கண் தலைவரைப் போற்றிப்
புயவகுப் பம்மானை ஊசல் களிமறம்
சித்து சம்பிரதம் தூதாற்றுப் படைதவம்
மதங்கியர் கொற்றியர் பிச்சியர் கைக்கிளை
கார் ஊர் தழைவெறி விலக்கல் என்றின்னன
உறுப்பமைந் திடப்பெயர் தலைவர்தம் பெயரான்
புலங்கொளத் தொடுப்பது கலம்பகம் என்ப. 8

[ பரணி ]

586. தேவரும் திருவுடை மன்னரும் தவத்தான்
மேவிய குரவரும் பாட்டுடைத் தலைவரா
அமைந்தவர் களப்போர் உளப்போர் புரிந்து
பெற்றநல் வெற்றியும் மற்றவர் தோல்வியும்
புலப்பட வாழ்த்து கடைதிறப் பழற்சுரம்
காளிவாழ் கோயில் காளியைப் போற்றல்
பேய்களின் முறைப்பாடு இந்திர சாலம்
பாட்டுடைத் தலைவனின் மரபு வரலாறு
போர்க்களக் காட்சி பேய்க்கூ ழடுதல்
படைத்தல் திளைத்தல்என் றன்ன பிறவும்
கெழுமிய மரபொடு வண்ணமும் இசையும்
தழுவிய தாழிசைப் பாட்டினும் பாவினும்
இயற்றுதல் பரணி இலக்கியம் என்ப.
மோக முதலாய குணங்களை வென்ற
வாகை பற்றியும் வழங்குமற் றதுவே. 9

[ ஆற்றுப்படை ]

587. திகழ்பெருந் தெய்வம் கொடைமகிழ் மன்னர்
புகழ்மலி சான்றோர் தம்வயின் அரும்பொருள்
பரிசுபெற் றரசுபோல் மீளுமோர் இரவலன்
எதிர்வரும் புலவோர் ஏழிசைப் பாணர்
கூத்தர் பொருநர் விறலிஎன் றவர்பால்
தனக்கருள் புரவலன் தண்ணளி புகன்றவன்
உறைபதி வளனும் ஒண்மையும் செல்லும்
நெறியும் கூறி நெடுவழிப் படுத்தல்
ஆற்றுப் படையஃது இரவலர் பெயரான்
பாவினும் இனத்தினும் பயின்று வருமென்ப 10

## [ தூது ]

588\. திருவுடை மன்னர் தெய்வமென் றவர்பால்
அளப்பருங் காதல் கொண்டவொரு தலைவி
உளப்பெரு வேட்கையை உயிர்க்கிழ வன்பால்
உற்றுரைத் தவன்தார் பெற்றுவர இருதிணைப்
பொருள்களுள் ஒன்றனை விளித்துஅதன் மாண்பினை
நனிபா ராட்டி நயப்புறு தலைவன்
சிறப்பும் சீர்த்தியும் செல்முறை பிறவும்
புகன்று செலவிடுப்பது அகப்பொருள் தூதாம்
மெய்ப்பொருள் வேண்டி இகல்நிலை உணர்த்தியும்
இருவர் மாறுகோள் இரிதல் வேண்டியும்
போக்குவது புறத்திணைத் தூதாம் அவைதாம்
கலிவெண் பாவினும் பிறபா இனத்தினும்
மலைவற இயன்று வரல் மரபென்ப. 11

## [ தூதுக்குரியபொருள் ]

589\. அன்னம் கிளிகுயில் அருந்தமிழ் தென்றல்
பொன்மயில் மாரி பூவைநல் விறலி
வாரணம் காக்கை வண்டுசகி நெஞ்சம்
அறவோர் மறவர் அந்தணர் அரசர்
அனைவரும் பிறவும் வாயில்கள் என்ப. 12

## [ குறவஞ்சி ]

590\. மன்னவர் தெய்வம் அன்னவர் பாட்டுடைத்
தலைவரா அவர்நகர் உலாவரு காட்சியைப்
பந்துபயில் ஒருத்தி கண்டுகா முறுதலும்
தோழியைத் தூதுசெல வேண்டலுப் அவ்வழி
குறத்தியின் வரவும் அவள்தன் மலைவளம்
கிளைவளம் கூறலும் குறிவரைந் துரைத்தலும்
மகிழ்வுறு தலைவி பரிசில்தந் துவத்தலும்
குறவனின் வரவும் குருவிகள் வேட்டையும்
குறத்தியைத் தேடியவன் வருதலும் கடுத்தலும்
தெளிதலும் இருவரும் பாட்டுடைத் தலைவனைப்
பரவலும் வாழ்த்தலு மாகப் பாவினும்
பண்ணமை பாட்டினும் இயன்றிசை நாடகக்
கூறுபட நடத்தல் குறவஞ்சில் என்ப. 13

[ பள்ளு ]

591. தெய்வமும் திருவுடைச் செல்வரும் பாட்டுடைத்
தலைவரா அவர்தம் சீர்த்திஇடை விரவத்
தண்ணடை மிக்கதொரு பண்ணையில் வழிவழி
ஆளனாய் அமர்ந்துவே ளாண்மை புரிந்திடும்
பள்ளன்தன் மனைவியர் இருவருள் இளையாள்
பாங்குற்றொ ழுகலைப் பொறாத மூத்தவள்
பண்ணையா ரிடத்து முறையிடு தலுமவர்
குடும்பனைச் சினந்து பணிமேற் செலுத்தலும்
கடமையில் மேவா தவன்பொய்ம் மொழிதலும்
கேட்டவர் தொழுவினில் மாட்டலும் மூத்தவள்
இரங்கலும் தலைவரை வேண்டலும் விடுத்தலும்
பள்ளியர் தம்முள் சமயச் சார்பொடு
பகைத்தலும் பழித்தலும் ஏசலும் எருதினான்
குடும்பனுக் கிடையூறு நேர்தலும் இருவரும்
பகைதணிந் தொன்றிக் குடும்பனைப் பேணலும்
உழவினை முறையோ டவன்மேற் கொள்ளலும்
கதை மராகக் காட்டி உழவர்தம்
உணர்வும் வாழ்க்கை ஒழுக்கமும் விளங்க
மழைக்குறி காணல் மழையினது வரவு
ஆற்றுநீர் பெருகல் மடையில்நீர் பாய்தல்
மடையிலும் வயலிலும் மீனினம் களித்தல்
உழுதல் விளைத்தல் அறுத்தல் கடாவிடல்
நெல்வளம் முதலிய பல்வகை வருணனை
நாடகச் சுவைபடப் பொருந்திப் பண்ணமை
பாட்டினும் பாவினும் படைப்பது பள்ளே. 14

[ காஞ்சி ]

592. பல்வகைச் செல்வமும் இளமையும் யாக்கையும்
நிலையிலா இயற்கையைக் காட்சி கருதல்
நூலெனும் அளவையான் நுண்ணிதின் விளக்கி
அறநெறி ஒழுகச் செவியறி வுறுத்தல்
புறத்திணைக் காஞ்சி இலக்கிய மென்ப. 15

[ அம்மானை ]

593. புராண வரலாற்றுக் கிளைக்கதை, செவிவழி
மருவியகதை, மெய் வரலாற்று மாந்தரின்
அருஞ்செயல் பெருங்குணம் அணியுற விளங்க
அம்மனையாடும் மகளிர்உரை யாடலாய்த்

தரவு கொச்சகக் கலிப்பா முதலா
எளியமென் நடையான் இயல்வதம் மானை 16

[ சதகம் ]

594. தெய்வம் முதலாப் பல்பொருள் பற்றிக்
கலித்துறை முதலாப் பாவினும் இனத்தினும்
அணிநலங் கமழ அந்தாதி யாயும்
ஒருநூறு செய்யுள் இசைப்பது சதகமாம் 17

[ அந்தாதி ]

595. தெய்வம் அரசர் ஆன்றோர் அறமுதற்
பல்பொருள் பற்றிப் பா,ப்பா வினத்தான்
பாவடி இறுதி எழுத்த்தசை சீர்அவை
அடுத்துவரும் பாமுத லாகத் தொடக்கமும்
இறுதியும் ஒப்பப் பொருளணி சொல்லணி
திறமுற வமைந்து திகழ்வதந் தாதியாம். 18

[ பதிகம் ]

596. எப்பொ ருளாயினும் அப்பொருள் விளங்க
நாற்பொருட் பயன்பெற ஏற்புடைத்தாகப்
பாடுதற் கெடுத்த பாவான் ஒருபது
பன்னிப் படைத்தல் பதிக மாகும். 19

[ மழலையர் இலக்கியம் ]

597. பார்த்துப் பழகிடும் கைவினைப் பொருள்கள்
மனைச்சிறு விலங்குகள் வனப்பமை பறவைகள்
பற்பல விளையாட்டுப் பொருள்பரி கரிமா
நெருங்கிய உறவுகள் மருங்குபணி யாளர்
இயற்கைக் காட்சிகள் எளியநற் பண்புகள்
மேற்கொளத் தக்க மெல்லிய கடமைகள்
ஆன்றோர் அறிமுகம் அன்னபிற பற்றி
அழகுணர்வு அறிவியற் சிந்தனை முளைவிடும்
அசைந்தா டல்கை வீசி நடத்தல்
கைம்மலர் ஒற்றிக் களித்துவிளை யாடற்கு
இயைந்த இன்னிசை தாளமொடு பொருந்தப்
பிறபரு வத்தரும் சுவைக்கும் முறையான்
குறைவறப் புனைதல் குழவிப் பருவத்து
இளையவர் மழலையர் இலக்கியம் என்ப. 20

[ உருவகஇலக்கியம் ]

598. விளக்குதற் கரியபல் தத்துவச் செய்திகள்
அளப்பதற் கரிய அகமனச் சிக்கல்கள்
அறிவியற் கொவ்வாச் சாத்திரச் சடங்குகள்
நெறிதிரிந் தியங்கும் அரசுயந் திரங்கள்
முறைபிறழ்ந் தோடும் குமுகாய ஊர்திகள்
அன்னபிற வற்றை ஆங்ஙனம் உரையாது
இருதிணைப் பொருள்களுள் ஏற்பன வற்றை
வினைமுத லாக வனைந்துதங் கருத்தினை
உள்ளுறுத் துரைப்பது உருவகச் செய்யுளது
தனிநிலை தொடர்நிலை என இருபாங்கினும்
அருகிய நிலையில் வருமென மொழிப. 21

## 17. செய்யுள் மாலை இயல்

599. ஐவகைப் பாவினும் மூவகை இனத்தினும்
ஏற்பன வற்றான் தனித்தும் இணைந்தும்
கலந்தும் வழிபடும் தெய்வம் முதலாக
விரும்பிய பொருள்மேல் விந்தகந் தோன்ற
அமைந்தொரு பதுமுதல் ஈரைம் பான்வரை
சிற்றிலக் கியத்தின் பாற்பட வருஉம்
இரட்டைமணி மாலை மும்மணி மாலை
நான்மணி மாலை நாம மாலை
அங்க மாலையொடு பல்சந்த மாலை
கலம்பக மாலை புகழ்ச்சி மாலை
மகிழ்ச்சி மாலை மெய்க்கிர்த்தி மாலை
காப்பு மாலை வேனில் மாலை
தாரகை மாலை உற்பவ மாலை
தானை மாலை தண்டக மாலை
வெட்சி மாலை காஞ்சி மாலை
நொச்சி மாலை உழிஞை மாலை
வாகை மாலை அநுராக மாலை
ஐந்திணை மாலை ஆசாரக் கோவை
வருக்கக் கோவை மும்மணிக் கோவை
உலாமடல் வளமடல் கண்படை நிலையே
கடைநிலை புறநிலை துயிலெடை நிலையே
விளக்கு நிலைகை யறுநிலை கொடிநிலை
அட்டமங் கலத்தொடு பெருமங் கலமே
போர்க்கெழு வஞ்சி வரலாற்று வஞ்சி
செருக்கள வஞ்சி வில்வேல் விருத்தம்

தசாங்கப் பத்து நயனப் பத்து
பயோதரப் பத்து சின்னப் பூவே
பாதாதி கேசம் கேசாதி பாதம்
குழமகன் காதல் இருபா இருபஃது
பன்மணி மாலையென வருவனபிறவும்
செய்யுள் மாலையெனச் செப்புவர் நூலோர் 1

[ புறனடை — வடமொழி மரபு ]

600. பத்தியம் ஆசு மதுரம் சித்ரம்
வித்தாரம் எனும்நூல் வகைபடல் வடநூல்
முறைமை முதலது தனிநிலைச் செய்யுள்
ஈற்றது தொடர்நிலை ஏனைய பொதுவே 2

[ ஆசுகவி ]

601. கொடுத்ததொரு பொருளை அவர்வேட் டாங்குத்
தொடுத்துடன் முடித்தல் ஆசு கவியே 3

[ மதுரகவி ]

602. சொற்பொருள் நயமும் கற்பனை வளமும்
பற்பல அணிகொளப் பொற்புற வரைவது
அதிசுவை கனியும் மதுர கவியே 4

[ சித்திர கவி ]

603. பல்வகைச் சொல்லணி புல்லிய பாவும்
சொல்லிய மிறைக்கவி பிறவும் சித்திரமே 5

[ வித்தாரகவி ]

604. காப்பிய நெறிபட யாப்புவகை விரவ
வண்ணனை பொதுள எண்ணத் தளவையா
வித்தகத் தியற்றுதல் வித்தார கவியே.

605. அவ்வக் கவிகளில் ஆற்றல் பெற்றோரை
அவ்வப் பெயரான் வழங்கலும் மரபே. 6

## 18. சிறுகதை இயல்

[ தோற்றமும் வளர்ச்சியும் ]

606. கல்விப் பயிற்சியும் இலக்கியப் படைப்பும்
ஆளும் அரசின் திட்டமும், ஆட்சிக்
காவலர் செல்வர்தம் விருப்பும், பெறுபயன்

ஆட்சிமொழி யிவற்றைச் சார்ந்தன வாகலின்
அவ்வழி வளரும் கலைஇலக் கியம்தாம்
ஆங்கிலர் ஆட்சியும் மொழியும் அவர்தம்
திட்டம் விளைத்த அமைதிப் புரட்சியும்
யாவர்க்குங் கல்வி தாய்மொழி பேணும்
உரிமை அச்சுப்பொறி செய்தித்தாள்களின்
வளர்ச்சி, பெண்கல்வி அறிவியல் விழிப்பொடு
சமுதாய அரசியல் சிந்தையும் ஆங்கில
மொழிநா கரிகத்து மோகமும் மேலையர்
கலையிலக் கியங்களின் தாக்கமும், புதுமைசெய்
வேட்கையும் உரைநடை வளர்ச்சியும் பிறவும்
சிறுகதை முதலிய புத்திலக் கியங்கள்
விதிவழித் தோன்றுதற்கு ஏதுமற் றவைதாம்
மதிநலம் பெருக்கலும் பொருள்புகழ் விளைத்தலும்
கொள்கை பரப்புதற் குறுதுணை யாதலும்
அன்ன பிறவும் புத்திலக் கியங்கள்
வீறொடு வளர்தற்குக் காரணம் என்ப.

[ பொதுவிலக்கணம் ]

607. இருதிணைப் பொருளவற் றியக்கம் நிகழ்களம்
நிகழ்ச்சிகள் கருவாய் நேர்ந்துஅதை உரைப்புழி
காலமிடம் மாந்தர் வண்ணனை குறிக்கோள்
எழுப்பும் உணர்ச்சி எஞ்சிய சுவை, பயன்
உளவியற் கோணம் உத்தி, உரை யாடல்
அளவையான் நனிகுறைந்து உள்ளீ டமைய
வியப்பமை எடுப்புந் தொடுப்பும் முடிப்பும்
அச்சும் ஆரமும் வட்டையும் போல
ஒருமைப் பாடுற எளிமையும் வளமும்
விரவிய நடையான் கலைநலம் மருவிப்
படிப்பவர் சிந்தனைக்கு உரமாய் நிறைவாய்த்
திருப்பமொடு வகைபடத் திகழ்வது சிறுகதை
வண்ணனை திருப்பம் இன்றியும் வருமே

[ நிகழ்களம் ]

608. அவற்றுள்,
ஆள்வோர் அலுவலர் ஆணையர் பணிவலார்
நிலக்கிழார் உழுவோர் முதலினர் தொழிலர்
தலைமையர் தொண்டர் காவலர் கைதியர்
நடுவினர் குற்றார் சாற்றார் பெற்றவர்

குடும்பத் தலைவர் குடும்ப உறுப்பினர்
கணவன் மனைவி காதலன் காதலி
ஈன்றாள் மக்கள் ஈவோர் ஏற்போர்
கலைவலார் பாவலர் கடவுளர் அடியவர்
ஆசான் மாணவர் ஆண்டான் அடிமையர்
சாதியால் பதவியால் உயர்ந்தோர் தாழ்ந்தோர்
கயவர்கா முகரவர் கையகப் பட்டோர்
கள்வர் செல்வர் களியர் சூதினர்
அன்னவர்க் கமைந்த இயையும் இயல்பும்
காமம் வெகுளி மயக்கவா வான்வரும்
முரணும் நட்பும் பகையும் நொதுமலும்
இயற்றும் இன்ப துன்பமும் கருமச்
சங்கட நிலையும் மூவகை வினையான்
நேரும் திருப்பமும் இன்ன பிறவும்
நிகழ்ச்சிக் குரிய நிலைக்கள மென்ப.

[கதைக் கருவிற்காகும் நிகழ்ச்சிகள்]

609. ஈதல் அருளல் ஏற்றல் உதவல்
ஈகம் புரிதல் எதிர்குதிர் ஆடல்
காதலில் தோற்றல் கற்பழிப் புக்கொலை
இரண்டகம் புரிதல் ஏமாற்றல் களவு
கொள்ளை எளியரைக் கொடுமைசெய் துவத்தல்
இரங்கல் ஏங்கல் மக்களை விற்றல்
கள்ளான் மயங்கி உள்ள மிழத்தல்
செருக்கால் அறத்தைச் சிதைத்தல் பழித்தல்
சாதிக் கலகம் மொழிப்போ ராட்டம்
பித்தரின் செயல்கள் அரசியல் கிளர்ச்சிகள்
சூதினை வளர்த்தல் நீதியைத் திரித்தல்
பிறர்தம் உடைமையை வலிதிற் பற்றுதல்
கைம்மையில் துயர்தல் பொய்ம்மையிற் சிக்குதல்
தெய்வப் பற்றொடு மெய்ம்மையிற் றிளைத்தல்
வல்வழக் காடல் நஞ்சிடல் தீயிடல்
பல்வகை விழாக்கள் பட்டினிச் சாவுகள்
ஊர்திகள் மோதல் கவிழ்தல் தேர்வுகள்
விளையாட்டு வெற்றித் தோல்விப் பூசல்கள்
விஞ்ஞான விளைவுகள் விண்வெளித் திரிபுகள்
ஆத்திக நாத்திக வாதச் சழக்குகள்
வெள்ளம் புயல்நில நடுக்கம் மலையெரி
போர்க்கள அவலம் புலமைக் காய்ச்சல்

இன்னவை பிறவும் இயல்பொடும் பிறழ்ந்தும்
நிகழுங் கால்அவை நெஞ்சினைத் தொடுமேல்
களநிகழ்ச்சி யாய்அவை கதைக்கரு வாகும். 4

[ காலம் ]

610. நிகழ்வெதிர் விறப்பெனும் மூன்றும் அறுவகைச்
சிறுபொழுது ஆண்டின் மூவிரு பருவமும்
காலம் கதைக்கவை சார்புறும் பென்ப. 5

[ இடம் ]

611. உறைவிடம் சிற்றூர் பேரூர் நகரம்
செயலகம் தொழிலகம் கோயில் பள்ளி
கடற்கரை பூங்கா காடு மலைவயல்
வீதிபல் ஊர்திவின் வெளியிவை இடமாம் 6

[ மாந்தர் ]

612. ஆடவர் மகளிர் எனுமிரு பாலராய்க்
குடும்ப சமுதாயக் குழுவாய் அமைந்து
வினைமேற் கொண்டுஅதை இயற்றுவோர் அவரை
இயக்குவோர் ஆள்வோர் ஆளப் படுவோர்
அறவழி ஒழுகுவோர் மறவழிச் செல்வோர்
ஆக்கம் புரிவோர் அழிவினைச் செய்வோர்
சால்பினர் கயவர் மாதவர் பாதகர்
மழலையர் முதல்படு முதியோர் ஈறாச்
செவ்வியர் நோயினர் யாவரும் கதைக்குரி
மாந்தரே கற்பனை உருவக நிலையிற்
பிற உயி ரினங்களும் உயிரில் பொருள்களும்
பாத்திர மாகப் படைத்தலும் வழக்கே. 7

[ வருணனை ]

613. காலத் தன்மையும் இடத்தின் அமைப்பும்
பின்புலச் சூழலும் விளக்கும்முக வுரையும்
கதைத்தலை மாந்தர்தம் தோற்றம் வடிவுரு
ஒப்பனை உடைஉட் கிடக்கை நோக்கு
புறச்செயல் ஆயவை புலப்பட வனைதலும்
துணைப்பொருள் பாத்திரத் தன்மை சுட்டலும்
நிகழ்ச்சி சூழ்ச்சியின் நுண்மை பருமையை
வரைந்து காட்டலும் வருணனை யாகும். 8

[ குறிக்கோள் ]

614. மானுட நேயம் தன்னம் பிக்கைதன்
மான வுணர்வு மக்கட் பண்பு
சாதி சமய மொழியின நாட்டுப்
பற்று விடுதலை வேட்கைநல் லொழுக்கம்
அறிவு பெறுமவா அல்லவை தவிர்த்தல்
துன்புறுத் தாமை தொண்டுளம் தியாகம்
அனன பிறவுமாய் மன்னுபண் பாட்டினுள்
இரண்டொன் றாவது படிப்போர் சிந்தையுள்
பதியக் கருதுதல் படைப்போன் குறிக்கோள்
பணமும் பதவியும் புகழும் கருணையும்
புதைகுறிக் கோளெனப் புகலவுந் தகுமே. 9

[ உணர்வு ]

615. இன்பமும் துன்பமும் அவற்றுவிரி யாகிய
காதல் காமம் காழ்ப்பு வெறுப்பு
வீரம் வெகுளி வியப்பு பெருமிதம்
அச்சம் அவலம் அன்பருள் ஈகம்
பொறுப்பு துடிப்பு கடவுட் பத்தியொடு
பணிவும் துணிவும் பிறவும் மனத்திற்
கலையின் வளத்தாற் கனிந்தெழல் உணர்ச்சியாம் 10

[ எஞ்சும் சுவை ]

616. இன்னகை உவகை இரக்கம் அவலம்
வீரம் உவர்ப்பு வெகுளி வியப்பு
இறைப்பற் றச்சம் இவற்றினுள் ஒன்று
நெஞ்சத் துறைதல் எஞ்சிய சுவையாம். 11

[ பயன் ]

617. அறிவுக் கிளர்ச்சி ஆய்வுச் சிந்தனை
அன்புமுத லாய பண்பாடு கூர்தல்
கடமையைத் தூண்டல் களிப்புஉள வூக்கம்
கவின்கலைக் காதல் உலகியல் தெளிவு
பரம்பொருள் நேயம் நடுவுநிலை பிறவும்
நற்பயன் அன்றியும் வன்முறை எழுச்சி
வெறிதர லின்னன தீப்பயன் என்ப 12

[ உளவியற் கோணம் ]

618. கதைக்கரு குறிக்கோள் நிகழ்விற் கேற்பக்
கதைமாந் தர்குணம் நோக்குரை செயல்களைப்

பதனறிந் துரைத்தலும் படிப்போர் சுவைகொள
அளவறிந் தமைத்தலும் உளவியற் கோணமாம் 13

[ உத்தி ]

619. தன்கூற் றாகவும் பிறர்கூற் றாகவும்
ஆசான் தானே அமைவுறக் கூறலும்
கதைஉறுப் பினருள் ஒருவரோ பலரோ
தனித்தும் கலந்தும் பேசலும் ஒருவர்
ஒருவர்க் கெழுதிய மடலா உரைத்தலும்
அருவுரு அஃறிணைப் பொருள்கள் வாய்திறந்து
உரைப்பது போல வரைதலும் அரிகதைப்
பாங்கினிற் பகர்தலும் எதிர்வரும் நிகழ்ச்சிபோல்
எடுத்துச் சொல்லலும் இறந்த காலத்து
நிகழ்ந்தவை பற்றி நினைவு கூர்தலா
அமைத்துச் சொல்வதும் பழவர லாறுபோல்
வனைந்து கூறலும் கதைக்குள் கதையாப்
புனைந்து மொழிதலும் கனவென விரித்தலும்
முறையுறத் தொடங்கலும் இடையிற் றொடங்கலும்
முடிவினை விரித்து முன்னிகழ் வுரைத்தலும்
நயம்பட முடித்தலும் நறுக்கென நிறுத்தலும்
ஒத்தன பிறவும் கதைசொலும் உத்தியாம்.

[ உரையாடல் ]

620. கதைமாந் தர்குணம் நோக்கறி வாற்றல்
தெரிக்கும் முறையினும் திருப்பமொடு கதையை
நகர்த்திச் செல்லும் வகையினும் கதையின்
குறிக்கோள் புலப்படும் நெறியினும் அளவொடு
வழங்குதல் கதையுரை யாடலின் மாண்பே 15

[ உள்ளீடு ]

621. விளைவிது வாதல் வேண்டுமென ஆசான்
விதைத்த அடிக்கருத் துள்ளீ டாகும் 16

[ ஒருமைப்பாடு ]

622. கதைநிகழ் காலமும் இடமும் சூழலும்
வண்ணனை விளக்கமும் நிகழ்ச்சிக் கோவையும்
உறுப்பினர் பேச்சும் செய்கையும் சுவையும்
திருப்பமும் கதையின் குறிக்கோள் நோக்கி
ஒத்திணைந்து நடத்தல் ஒருமைப் பாடாம். 17

[ திருப்பம் ]

623. இன்ன திதனான் இவ்வா றாமென
உன்னுமுன் பிறிதொன் றூடுவந் துறுதலும்
முடிந்த திதுவென முன்னுங் காலை
மடிந்தொரு சூழல் தோன்றலும் மற்றிது
மெய்யென நினைந்தது மெய்யாய் விளங்கலும்
பொய்யென நினைந்தது மெய்யாய் விளங்கலும்
வெற்றி தோல்வியாத் தோல்வி வெற்றியாத்
தடுமாறு செய்தலும் நடைமாறு படுதலும்
இறந்தவர் எழுதலும் மறைந்தவர் தோன்றலும்
நண்பு பகை யாதலும் பகைநண் பாதலும்
அதிசயம் விளைதலும் அன்னபிறவும்
ஆர்வம் பெருக்கி அறிவை நுணுக்கிக்
கதையை வளர்க்கும் மதிவலி சான்ற
சிறப்பமை கதைக்காம் திருப்பம் என்ப. 18

[ கதைப்பொருள் வகை ]

624. பல்வகைச் சோதனை பாங்குற விளங்கும்
தெய்வ பத்தியொடு சிக்கல் முரண்பொய்
மெய்வெறி தியாகம் மேவிடும் காதல்
பரம்பரை வழக்கம் பண்புறு பாசப்
பிணைப்பு குணக்கேடு இரண்டகம் பகைமை
பொருளவாப் பூசல் தாய்மை ஏழைமை
மாற்றுத் தாயர் மாமியர் கொடுமை
இன்னவை மன்னிய பல்வகைக் குடும்பம்
இடையூ றெதிர்ப்பிற் கஞ்சா தியற்றும்
இம்மை மறுமை நோக்கிய தொண்டு
தாய்மொழி சமய நாட்டுப் பற்றொடு
கடமைநோன் பருளெனும் மடியாப் பண்புகள்
கூடா ஒழுக்கம் நட்பழுக் காறு
கீழறுத் தல்அறை போதல்வன் செயல்மறம்
கள்ளக் கடத்தல் பிள்ளைத் திருட்டு
கருப்பு வாணிகம் சிவப்பு விளக்கில்
அழிவுறும் மகளிர், ஆடவர் கயவர்
வழிப்பறி சூது விளையாட்டுப் பாதகம்
இன்னா வறுமை இளப்பமுற் றோரின்
அவலம் அவரை மேல்தட் டாளர்செய்
வஞ்சக் கொடுமை ஐயம் குடிவெறி

வறுதக் திணைபிற ஏதுவின் மாதரை
அலைக்கழித் தல், சிறார் சிறுமியர் வாழ்வை
அழித்தல், அதிகார ஆளுமைச் செருக்கால்
அலுவலர்க் கிழைக்கும் இழிதகவு குறுகிய
சாதி சமய வெறியின் சழக்கு
வேலிகள் பயிரை மேய்ந்தழித் தல், பணத்
திமிரினால் இயற்றும் தீமைகள், தெய்வீகக்
கலைநலம் போற்றுதல் கலையின் பெயரால்
விலைபடு பெண்மை பலைவெறி யாட்டும்
மந்திரம் பேய்களை உளவழித் தாற்றல்
தந்திர வியப்புக் கலைநகை யாட்டு
கொலைகள வாதி மருமச் செயல்கள்
பற்றிய பொழுது போக்கு, சுவைமிகு
நாட்டுப்புற வாழ்க்கை புராண வரலாற்று
மாந்தரைப் புதியபல் நோக்கிற் புனைந்து
மெய்ம்மையை உலகியல் அங்கதக் குறிப்பொடு
கலைநலம் விளங்கக் காட்டுதல் மாந்தர்
அகமன ஓட்டம் அறிவிய லருஞ்செயல்
அரசிய லாளர் போலித் துறவியர்
மிகைபடு செயல்கள் அன்ன பிறவும்
வகைபடு சிறுகதைப் பொருணிலை என்ப 19

## 19. புதின இயல்

### [ பொதுவிலக்கணம் ]

625. மாந்தருள் ளுணர்வை மலர்ந்திடச் செய்து
மகிழ்வுறுத் தல்மனக் கிளர்ச்சி யூட்டுதல்
சிந்திக்க வைத்தல் வீறுகொளச் செய்தல்
வெறிகொளத் தூண்டல் அறிவுமேம் படுத்தல்
கலைநலம் பேணிக் களிப்புறச் செய்தல்
மானிடப் பிறப்பின் மதிப்பறி வுறுத்தல்
நாடுமொழி குடும்பப் பற்றினை வளர்த்தல்
தொண்டுயர் தியாகம் கொடையுணர் வூட்டல்
அரசியல் போக்கு சமுதாய நிலைமை
பாட்டாளி மக்கள் படுதுயர் வறுமை
அறத்தின் கையாறு மறத்தின் செருக்கிவை
பிறக்கிடச் செய்தல் பேதைமை போக்கல்
இறையருள் வேட்கையை எழுப்புதல் இன்னன
குறிக்கோள் மேவிஅந் நெறிபுலப் பாட்டிற்கு
ஏற்றகதைக் கருவைத் தேற்றமொடு கொண்டு

கதைநடை பெறுதற் குரிய மாந்தரைக்
கற்பனை வளத்தொடு பொற்புறப் படைத்துக்
காட்சிவகை செய்ததைக் கணக்குறப் பண்ணிப்
பின்னணிச் சூழலைப் பெட்புறக் காட்டி
நிகழ்உரை யாட்டினைத் தகவொடு நிறுவி
நேர்படு சிக்கலைச் சீர்படப் புகுத்தி
நிகழும் போராட்ட நிலைகளை விளக்கித்
தீர்வினை விளக்குல் திருப்பம் அமையப்
பல்வகை நிகழ்ச்சிகள் பயின்று வருமாறு
நவிற்சி மேம்படக் கற்பனை பொதுளக்
கதையின் குறிக்கோட் கொத்த சுவைகளொடு
வண்ணனை மின்னத் தொய்வும் தேக்கமும்
இன்றிநன் நடையொடு, மிகைபடக் கூறல்
முதலிய குற்றம் புகாமல் கதைசொலும்
உத்தியாற் படிப்பவர் ஐயுறா வண்ணம்
ஒருமைப் பாடுற உலகியற் கேற்பப்
பொருவறப் புகல்வதைப் புதினம் என்ப. 2

626. நாவல் தொடர்கதை புதினம் ஒருபொருள் 3

[ கதைக்கரு ]

627. காமம் வெகுளி மயக்கம் அழுக்காறு
கரவு கொலைகளவு கயமை பெருமிதம்
அன்பருள் நேயம் பத்திகொடை இரக்கம்
இன்னபல் குணங்களும் இன்பம் துன்பம்
இடுக்கண் இகல்பிறப் பிறப்பெனும் நேர்ச்சியும்
பசித்தல் களித்தல் உண்ணல் உறங்கல்
ஆடல் பாடல் கூடல் ஊடலெனும்
செயல்களும் குடும்பம் நடத்தல் துறத்தல்
வாணிகம் செய்தல் கலைநலம் வளர்த்தல்
ஆட்சி புரிதல் ஊழியம் பார்த்தல்
பொருள்களை விளைத்தல் முதலிய தொழில்களும்
சாதிப் பிரிவும் சமயவேற் றுமையும்
மக்க ளினத்து முக்கா லத்தும்
பொதுவின ஆதலின் அகப்புற வாழ்க்கையில்
அவ்வகை நிகழ்ச்சியுள் அறிவினைத் தாக்கி
நெஞ்சினைத் தொட்டுச் சிந்தையைத் தூண்டிய
ஒன்றோ பலவோ, மாந்தர்தம் அறிவில்
மோதி உளத்தில் மொய்த்து வாழ்க்கையைப்
பயன்கொளச் செய்யும் என்றொரு கலைஞன்

கருவானாயின் கதைக்கரு வாம் அவை
தன்னதும் பிறரதும் ஆயஅனு பவத்தினும்
முன்னைய வரலாறு புராணக் கதையினும்
செய்தித் தாளினும் செவிவழி யானும்
பெறுதற் குரியவாய்ப் பிறக்கும் என்ப. 4

[ கதைமாந்தர் ]

628. கதையுயிர் உருவின் புறவடி வம்கதை
மாந்தர் ஆகலின் ஏந்திய கருத்திற்கு
ஏற்றமெய்த் தோற்றம் அகவை அறிவு
பண்புசெயல் ஒழுக்கம் பாவனை நடையுடை
இயற்பெயர் சுற்றம் சமயம் குடிகுலம்
பழக்க வழக்கம் பாங்கினர் குறிக்கோள்
செல்வம் கல்வி பதவி தனிச்சிறப்பு
அன்னபிற வற்றை உலகியல் மக்களொடு
ஒப்பவைத் துருவகம் செய்வுழி அவர்போல்
ஒருவரை உலகினிற் சுட்ட இயலாவகை
அவ்வவற் றினும்தனிப் பொலிவமை கற்பனை
செவ்விதின் செறித்துப் பொற்பாவை போலச்
சூழ்நிலைச் செயல்களான் திரிபு படாமல்
திண்ணியன வாகவும் வாழ்க்கைத் திருப்பம்
காலத் தேவைபிற காரண மாகத்
திரிவன வாகவும் செயலும் பேச்சும்
அவரவர் இயற்கையொடு பொருந்தவார்ப் படம்போல்
மிகைபடா தமைத்துப் படிப்பவ ருளத்து
நிலைபெறத் திறலொடு படைப்பது புதினப்
பாத்திரப் படைப்பின் நெறியென மொழிப. 5

[ கதைப்பின்னல் ]

629. தலைமைக் குறிக்கோள் நோக்கி நகர்த்தும்
கதைநிகழ்வு காலம் இடந்துணை மாந்தர்
கருவிப் பின்னணி வருணனை சுவைகள்
ஒருமைப் பாடுற விரைவுதளர் வின்றி
ஒவ்வொரு நிகழ்ச்சியும் மேல்வரும் நிகழ்ச்சிக்கு
அரணாய் ஆக்கம் புரிவதாய்ப் படிப்போர்க்கு
இடையிடா ஆர்வமும் அச்சமும் அதிர்வும்
மேன்மேற் பெருகும் அவாவும் மேவக்
கற்பனை இதுவெனக் கருதா வாறு
நட்பினர் உறவினர் நண்ணார் போலக்

கதைமாந்த ரொடுதமைப் பிணைத்துக் கொளும்வகை
மணிக்கோவை யைப்போல் அணிநலங் கமழத்
தொடக்கம் வளர்ச்சி உச்சம் சரிவு
முடிவெனும் நாடகப் பாங்கினும் அன்றிப்
படிநிலை சுழற்சிப் பாங்கினும் அன்றிப்
பின்னியது தெரியாமற் பின்னி உரையாடலைத்
தவநனி இயல்பொடு சுவடுபட அமைத்தலும்
படிப்பவர் ஊகம் செய்வதற் கிடனும்அவ்
ஊகங்கடந்த சாகசத் திருப்பமும்
கதைமுடி வுறினும் முடியாத துபோல்
புதைநிலை யமையப் புலங்கொள முடித்தல்
புதினப் பின்னலின் விதிமுறை என்ப 6

[ பின்னணி ]

630. கதைநடை பெற்ற காலத் தரசுமுறை
ஆட்சிநிலை கல்வி கலைநிலை விளைபொருள்
சமுதாய அமைப்பு மக்கட் பண்பாடு
நாகரிகம் வேட்கை பொருள்வளம் தொழில்வளம்
குடும்ப ஒழுக்கம் சமயக் கொள்கைகள்
அயல்நாட் டுறவு பழக்க வழக்கம்
அன்ன பிறவும் அகப்பின் னணியாம்
கதைநிகழ் பொழுதும் பருவமும் இடமும்
பல்வகைக் கருவியும் ஆடையணி ஊர்தியும்
புறப்பின் னணியாம் அவற்றுள் அகநிலை
கதையின் வளர்ச்சி திருப்பம் குறிக்கோள்
கதைமாந் தர்மன உணர்ச்சி செயற்பாடு
உளப்போ ராட்டம் புலப்படு முறையான்
வருணனை பெறுதலும் புறநிலை கதையின்
நிகழ்ச்சியை இயற்கைச் சூழலொடு காட்டும்
காட்சி விளக்கமாய்ப் புறப்போ ராட்டம்
பொலியத் துணையாய் அமைதலும் கதையின்
பின்னலுக் கெழில்தரும் பின்னணி யாகும். 7

[ உரையாடல் ]

631. இருவர் நேருரை பல்லோர் கலந்துரை
தனியுரை கட்டளை ஏவல் உரையொடு
மடல்வழி யுரைகன வோட்டம் ஆசான்
உரையென உரையாட் டிருநால் வகைப்படும்.

படைத்துரு வாக்கும் மாந்தர்க் கமைந்த
இலக்கண நெறியான் இயங்கும் மாந்தர்
பிறப்பு முதலாய பெற்றிக் கேற்பச்
சொல்வளம் சொல்முறை சுவையழகு உத்தி
குறிப்பொடு வட்டார வழக்கிழை யோடக்
கதைக்குறிக் கோளொடு முரணுத லின்றிக்
கதைவளர் படியாய்ப் பின்னலுக் கியையவும்
திருப்பம் நிகழ்வதற் கேது வாகவும்
பாத்திரப் பண்பும் விருப்பமும் உணர்வும்
புலப்படும் வண்ணம் மெய்ப்பா டமைந்தும்
தகவும் தொனியும் சுவையும் சுருக்கமும்
தெளிவும் ஓட்டமும் திறலும் நிரம்பி
உயிர்ப்புடைத் தாக இயல்பா யமைந்து
படிம்போர் உளத்துப் படரும் வண்ணம்
ஒளிர்வது உரையாடற் கொத்த தென்ப. 8

[ ஒவ்வாவுரை ]

632. பாத்திர இறற்கைக் கொவ்வா உரையும்
கதையா சிரியர்தம் இடையீட் டுரையும்
கொள்கை விளக்கம் மல்கிய உரையும்
கலப்புமொழி கொச்சை அயல்மொழி உரையும்
செயற்கைநடை யுரையும் பயனில் உரையும்
விலக்குதல் நடைக்கு வெற்றிதரும் என்ப. 9

[ ஆசான்நடை ]

633. கதையுரை ஆசான் கதைக்கரு பின்னல்
குறிக்கோள் நிலைகட் கேற்ப அளவோடு
இனிமை தெளிவுதன் தனித்துவம் தோன்றச்
சுவைமிகு நடையாற் சொல்லுதல் மாண்பே. 10

[ போராட்டம் ]

634. கதைநடப் பிடத்து நேரும் பல்வகைச்
சிக்கலின் விளைவாய்த் தொக்கபோ ராட்டம்
அகத்தது புறத்ததுஎன் றிருவகைப் படுமே. 11

[ அகப்போராட்டம் ]

635. அவற்றுள்,
ஆடவர் மகளிர் காதற் கேண்மையுள்
பொருந்தாச் சாதி சமயம் பொருள்நிலை

ஏற்றத் தாழ்வுகள் பெற்றோர் முரண்பாடு
இன்னன பற்றியும், குடும்பப் பற்று
நட்பின் சால்பிற் கெதிர்மறைப் படூஉம்
கடமை நேர்ச்சி பற்றியும் நடுவுநிலை
மானிட நேயம் அறிவியல் நோக்கொடு
மாறுபட் டெதிரும் சாதி சமயக்
கோட்பாடு பற்றியும் பரம்பரை வழக்கம்
ஒப்புர வொழுக்கத்திற்கு எதிர்ப்புறும் நீதியைத்
தப்புதற் கொவ்வாத தடுமாறு பற்றியும்
கண்ணெனச் சிறந்த இரண்டனுள் ஒன்றனை
மேற்கொள வேண்டிய நிலையினும் தஞ்சமென்று
அடைக்கலப் பட்டோர் குற்றமும் நிலையும்
எண்ணுதற் கண்ணும் உயிரா மானமா
காதலா கடமையா அறமா பொருளா
இரண்டனுள் எதனை இழப்ப தென்னும்
சூழ்நிலைக் கண்ணும் இன்றியமை யாதெனும்
துன்புறு நிலைக்கண் அறநெறி ஒழுக்கம்
தவிர்தற் கறிவு வலித்தற் கண்ணும்
சான்றுக ளில்லா ஐயப் பெருக்கினும்
அன்ன பிறவற்றினும் தீர்வுறற் கியலாது
அலக்கணுற் றழுங்குதல் கலக்கமுற் றுரைத்தல்
அகப்போ ராட்டம் ஆகும் என்ப. 12

[ புறப்போராட்டம் ]

686. இருவர் ஒருபொருட் குரிமைபா ராட்டலும்
ஒருவர் உடைமையை உரிமையை மற்றவர்
கரவினான் வன்மையான் கவருங் காலையும்
நாடடிப் படுக்க முனைவதும் நாட்டினைக்
காத்தற்கு முயல்வதும் தம்மா ளுமையை
நாட்டிடத் தம்வலி காட்டுதற் கண்ணும்
தங்கோள் புகுத்தவும் காக்கவும் அடிமைத்
தளையைத் தகர்க்கவும் மக்களை நலிக்கும்
ஆட்சியை சட்ட அமைப்பினை மாற்றவும்
உளப்போ ராட்டத் தொன்றனைத் தேர்ந்து
மற்றதை எதிர்த்து நிற்றற் கண்ணும்
அறிவும் பொருளும் அறமும் வாய்மையும்
படையும் உடம்பும் கருவி யாக
இகலுற் றெதிர்த்தலும் பட்டினி கிடத்தலும்
புறப்போ ராட்டம் ஆகும் என்ப. 13

[ திருப்பம் ]

687. பாத்திரப் பண்பும் உளவியற் கோணமும்
புலப்படக் குறிக்கோள் தெளிவுறும் வண்ணம்
சிக்கலை வளர்த்தலும் படிப்படி யாகத்
தீர்த்தலும் சிறுகதைக்கு ஓதிய வற்றுள்
ஏற்பன கோடலும் திருப்ப மாகும். 14

[ நவிற்சி ]

688. உள்ளதை உள்ளவா றியம்பும் இயற்கையும்
நடைமுறை வாழ்வைக் காரண காரியம்
தோன்ற உரைக்கும் உண்மைத் தன்மையும்
என்றிரு அடிப்படைப் பண்புற நவிலல்
இயற்கை நவிற்சியாம் மக்கள் விழிப்புற
எண்ணிய குறிக்கோட் கியைய மாந்தரைப்
படைத்துல கியலொடு சிந்தனைப் புரட்சி
விளைய நவில்வது செயற்கை நவிற்சியாம்
ஆங்கவை தனித்தும் கலந்தும் நடைபெறும். 15

[ கற்பனை ]

689. உலகியல் வாழ்க்கையைப் பல்வேறு நிலைகளில்
கண்டும் கேட்டும் கலந்தும் இணைந்தும்
பழகிய இருபால் மாந்தரை ஒப்பக்
கதைமாந் தர்தமைப் படைக்குங் காலை
அவர்தம் குணம்செயல் கொள்கையுள் கதையினுக்கு
ஆகாத வற்றை அகற்றி ஆவன
பொருந்தக் கூட்டி நிறைவுற அமைத்தலும்
பல்வே றிடங்களில் வெவ்வேறு பொழுதில்
நிகழ்ந்த நிகழ்வையும் நிகழும் எனத்தாம்
கருதுவன வற்றையும் கதையின் குறிக்கோள்
பின்னல் சுவைகட் கேற்பக் குறைத்தும்
கூட்டியும் மாற்றியும் செவ்விதிற் புனைதலும்
பருப்பொருட் செயல்களை நுண்பொரு ளாக்கியும்
நுண்பொருட் குணங்களைப் பருப்பொரு ளாக்கியும்
நடவாத வற்றை நடந்தவை போலவும்
இல்லன வற்றை உள்ளன போலவும்
அறிவியல் உலகியற் கொப்பப் படைத்துப்
பொற்புறச் செய்தல் கற்பனை என்ப. 16

[ உத்தி ]

640. ஆசான் தானே கதைசொல் லுதலும்
சொல்லுங் காலை வண்ணனை முன்னுரை
வனைந்து தொடங்கலும் நடுமெனத் தொடங்கலும்
பாத்திரங் களையே பகரச் செய்தலும்
நண்பர் கூற்றாக நவிலலும் பழங்கதை
படித்துச்சொல் வதுபோல் பாங்குறக் கூறலும்
பாத்திரந் தன்னிடம் பகர்வது போலவும்
கேள்விப் பட்டமை போலக் கிளத்தலும்
கடிதப் பாங்கினில் மிடைதலும் நாடகக்
காட்சிபோல் வரைதலும் நினைவிற் கிளர்ந்தெழும்
நனவோட்ட மாக நவில்தலும் கதையை
முடிவினிற் றொடங்கி முன்னவை விரித்தலும்
கருவிரி கதையை ஒருகுலம் ஓரினம்
ஒருநா டோரூர்க் குரிய தாகவும்
பன்னாட்டு மாந்தர்க்கும் பொருந்து வதாகவும்
பின்னுதல் குறிக்கோட் கியையக் கொளுவுதல்
இன்னன பிறவும் உத்திவகை என்ப. 17

[ வண்ணனை ஒருமைப்பாடு நடை ]

641. வண்ணனை ஒருமைப் பாடுநடை பிறவும்
சிறுகதைக் கேதிய திறம்பட நிகழ்மே. 18

## 20. நாடக இலக்கிய இயல்

[ வகை ]

642. இயலிசைக் கலைக்கெலாம் முற்படத் தோன்றி
இருதிணைப் பொருளினும் இயற்கை யாக
உருக்கொண் டிருவிழி செவியுளம் நுகரப்
பருப்பொரு ளாய்ப்புவிப் பொதுப்பொரு ளான
நாடகக் கலைதான் அரங்கம் திரைவழிக்
காட்சி செவிவழிக் கேள்வி படித்துணர்
இலக்கிய நுகர்ச்சிஎன் றீரிரு வகைத்தே. 1

643. அரங்கத் ததுவே அவிநயம் கதைபொதி
பொருநக் கூத்தென் றிருவகை, அவற்றை
நாட்டியம் நாடகம் எனல்வழக் காறாம்
ஏனைய இரண்டும் இலக்கியப் பாங்கின. 2

644. ஒப்பனை திரைஇசை ஒளித்துணை யாக
நடிப்பொடு நிகழ்வது மேடை நாடகம் 3

645. அன்னவை பிறவும் முன்னுரை யாகப்
படித்துளத் துணர்வது நாடக இலக்கியம் 4

[ பொதுவியல்பு ]

646. கதைக்கள அமைப்புப் பின்னணி மாந்தர்
உரையா டல்சுவை தொடக்கம் வளர்ச்சி
முடிவு பயனிவை பத்தும் நாடகப்
பொதுக் கூறாமென் றியம்பவர் புலவர். 5

[ வகை ]

647. ஒற்றையர் இயக்கம் ஊமைஓ ரங்கம்
ஒலியுரை செய்யுள் பாட்டுத் தெருவெனப்
பல்வகை யாகத் திகழ்தரும் அவற்றுள்
செய்யுளும் பாட்டும் நடைவகை யாகும். 6

648. அவற்றுள்,
கதையினுள் ஓரிரு காட்சியைச் சுவைபட
ஒருவரே பல்வகைப் பாத்திர மாகப்
பேசி நடித்தல் ஒற்றைய ரியக்கம் 7

649. ஒருவரோ சிலரோ வாயுரை யின்றி
மெய்ப்பாட் டவிநயச் செய்கையான் கதையை
நடித்துக் காட்டுதல் ஊமை நாடகம்

650. ஒருகுறிக் கோளமை கருத்தினை மிகச்சில
காட்சியுள் முழுமையுங் கணித்துணர் வகையான்
படைத்தல் ஓரங்க நாடக மாகும், 9

651. பொருநர்தோன் றாமல் உரையாட்டு வாயிலாப்
பின்னணி புலப்படக் குரல்வழி மெய்ப்பாடு
விளங்கு சொற்றொடர்களான் இசைதுணை யாக
உரைஒலிக் குறிப்பான் சுவைநனி விளங்க
வானொலிக் நாடாப் பதிவிசைத் தட்டு
வாயிலா நிகழ்வது ஒலியுரை நாடகம் 10

[ செய்யுள் நாடகம் ]

652. நாடகப் பாங்கெலாம் நன்கனம் அமைய
வண்ணனை பாத்திர உரையாட் டெல்லாம்
ஒருவகை பல்வகைச் செய்யுளான் இனிது
படைத்து வழங்குதல் கவிதை நாடகம் 11

[ பாட்டுநாடகம் ]

653. உறுப்பினர் பலர்ஒரு பாவினுள் உரையாட்டு
இசைத்திட நேரினவர் உரையளவு அடியை
துணிந்தவ் விடத்தினின் றடுத்தவர் உரையைத்
தொடங்கி அச்செய்யுளின் சீர்தளை அடிகள்
புரைபடா வண்ணம் வரைவது நெறியொரு
செய்யுளின் தொடக்கச் சீர்களைத் துணிந்துமுற்
செய்யு ளிறுதியொடு கூட்டுதல் சிறப்பிலை 12

[ நாடகக்கீர்த்தனை ]

654. பாட்டு நாடகம் பண்ணமை தாளப்
பாட்டொடு இசைபுணர் விருத்தம் வாக்கியக்
கூட்டொடு நடைபெறும் கட்கா, திண்டி
ஓவி லாவணி சாகி துக்கடா
எனும் உறுப்போடே நிகழும் ஓரோவழி
வசனமும் இடைவரல் புரையிலை அதனை
நாடகக் கீர்த்தனை எனநவில் வாரே. 13

655. அதுவே
அவிநயப் பாங்கொடு நடைபெறுமாயின்
இசைகமழ் நாட்டிய நாடக மென்ப 14

[ தெரு நாடகம் ]

556. ஒப்பனை கதைக்கோப் பின்றிஒரு கருத்தை
ஒருசிலர் சுவைபட உரையா டல்வழி
நடித்துக் காட்டுதல் தெருநா டகமாம் 15

[ புனைந்துரை நாடகம் ]

657. புராண வரலாறுகள் அடிப்படை யாக
நிகழ்வெதிர் கருத்தினை நெறியோடு கூட்டித்
தகவமை கற்பனைச் செறிவோ டவற்றைப்
பொற்புறச் சமைத்தல் புனைந்துரை யாகும் 16

[ படைத்துரை நாடகம் ]

658. சமய சமுதாய அரசியல் தாக்கம்
அமைந்த மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள்
அடைப்படை யாகத் தங்குறிக் கோளினை
கலைநலக் கற்பனை வளத்தொடு தாமே
பயனுறச் சமைப்பன படைத்துரை யாகும். 17

[ சிறப்பு விதி ]

659. தலைமைக் கதையின் கருத்துநனி விளங்கவும்
சுவைநலங் கனியவும் துணைக்கதை ஒரோவழி
ஊடுறச் சமைத்தலும் நாடகத் தியல்பே 18

[ கதை ஆக்கம் ]

660. புராணம் தொல்கதை வரலாறு காவியம்
இலக்கியம் புதினமென் றவற்றையும் அவற்றுள்
குறித்தசில மாந்தர்தம் நிகழ்வையும் தேர்ந்தும்,
நிகழ்சமு தாய அரசியல் போக்கினால்
விளையும் நன்மை தீமையை உருவகப்
படுத்தியும் மாணவர் பயன்கொளும் வகையான்
உளவியல் அமையக் கற்பனை செய்யும்
புனைந்துரை படைத்துரை எனஇரு திறத்தான்
சிக்கலும் திருப்பமும் செவ்விதின் அமைய
வேண்டிய காட்சி விரிக்கியிடந் தருவதாய்க்
கருதிய குறிக்கோள் நுண்ணிதின் புலப்பட
எண்ணிய சுவையெலாம் எளிதின் விளங்க
அறிமுகத் தோற்றம் படிநிலை வளர்ச்சி
உச்சநிலை சரிவு வீழ்ச்சி எனும் வகையான்
காலமும் இடமும் வினையும் ஒருங்கொத்து
இருவகை முடிபினொான் றேற்றமுற் றமையக்
கணக்குற வரைவது நாடகக் கதையே. 19

[ களஅமைப்பு ]

661. கதைநனி விளங்கக் காட்சியைக் கணக்கிட்டு
ஒவ்வொரு காட்சியும் மேல்வரு காட்சியொடு
இயைபுற நிகழ்ச்சியை விளக்குதற் குரிய
மாந்தரொடு உரையையும் வரையறுத்து இடமும்
காலமும் வினையமும் முரணா வண்ணம்
காட்சிப் பின்னலை விரைவும் திருப்பமும்
புலப்பட மாறுமா றமைத்துத் தனியுரை
அகலா வாறு பின்புலக் காட்சியைத்
தகவுறப் புகுத்தி, அரங்கிற் காயின்
பேச்சினைச் சுருக்கி நடிப்பைப் பெருக்கியும்
இலக்கிய மாயின் பின்னணிச் சூழலும்
திருப்பமும் விளங்கப் பாத்திர உரைகளை
அறிந்தமைத்து இன்றி யமையாக் குறிப்பினைத்
தன்னுரை யாக விதந்தும், தோன்றும்

பொருநர் ஒவ்வொருவரும் இன்றி யமையா
உறுப்பெனத் தெளியவும் ஒருவர்பல் காட்சியுள்
தொடர்ந்து தோன்றா வாறும் நோக்குவோர்
உணர்வும் அவாவும் தணவா வண்ணம்
கலைநலம் விளக்கும் வலமிகு உத்தியான்
அளவுறச் சமைத்தல் தளஅமைப் பாகும். 20

[ இடமுரண் ]

662. ஐவகை நிலத்தொடு பெருநகர் சிற்றூர்
பட்டினம் கானம் அரண்மனை சேரி
அவைக்களம் மன்றம் வளமனை சிறுகுடில்
சோலை முதலிய இடத்திற் குரிய
நிகழ்ச்சிகள் அவ்வவ் இடங்களி லன்றி
மாறுபட அமையினஃ திடமுரண் என்ப. 21

[ காலமுரண் ]

663. மாந்தர் நடைஉடை ஒப்பனை கலைநிலை
ஏந்தும் படைக்கலம் இயந்திரம் ஊர்தி உண்
பண்டம் கல்வி பயிலிடம் பயில் முறை
மண்டில ஆட்சி மரபிவை போல்வன
காலந் தோறும் வேறு படலினம்
முறைநிலை பிறழஓர் காலக் குரியதைப்
பிறிதொரு கால அமைப்பினுட் பேசலும்
அறுவகை இருதினுள் சிறுபொழு தாறனுள்
நிகழ்வதற் குரியதை மாற்றி யுரைத்தலும்
கால முரணெனக் கருதுவர் நூலோர் 22

[ வினைமுரண் ]

664. சூழ்நிலை கதை,க்களக் காட்சி, கதை, சுதை
மாந்தர் தகவு, நிகழ்ச்சிகட் கொவ்வா
உரையொடு நடிப்பிவை வினைமுரண் என்ப. 23

[ அமைப்பு உத்தி ]

665. காட்சி கதைப்பாத் திரத்தொகை அளவில்
மிகாமையும் நிகழ்ச்சியுள் மீக்கூர் பகுதியை
முகாமைப் படுத்தலும் குறிக்கோள் குறிப்பாற்
புலப்படப் பின்னணி அமைத்தலும் பாத்திரப்
பீடுமவர் பண்பும் ஆடைஅணி கலனால்
தெரியப் புனைதலும் பொருநர்தங் கூற்றினை

திரல்படக் கோத்தலும் காட்சிப் பின்னலை
விரைவும் வியப்பும் பெருகுமா றமைத்தலும்
முடிவிது எனப்பிறர் முன்னுதற் கியலாது
முடித்தலும் குறிக்கோள் அவரவர் மனத்தில்
துடிப்புறச் செய்தலும் நாடக உத்தியாம். 24

[ பின்னணி ]

666. காலை மாலை நண்பகல் இரவு
வைகறை வேனில் கார்பனி முதலிய
காலச் சூழலும் மலைகடல் யாறு
கானகம் பூங்கா சிறுகுடில் வளமனை
அரசவை பாசறை கோயில் பள்ளி
பணிமனை சேரி வயல்தொழிற் கூடம்
வீதி முதலாய இடத்தின் சூழலும்
ஆடையணி கலனும் பணிநிலை மாக்களும்
கதையின் குறிக்கோள் காட்சிவகைக் கேற்ப
அண்ணி யமைத்தல் பின்னணி யாகும். 25

[ மாந்தர் படைப்பு ]

667. ஆடவர் மகளிரென் றவ்விரு பாலினும்
நல்லமை இணைந்திணை முரண்இடை யோரென
நாடக மாந்தர் ஐவகை யாகக்
கதைநிலைக் கேற்பத் தோற்றம் பெறுவர் 26

668. கதைக்குறிக் கோளினைத் தாங்கிக் கதையின்
நிகழ்ச்சிக் கெல்லாம் காரண மாபவர்
தலைவராம், அவரை ஒப்பவர் இணையர்
இன்புதுன் பேற்றுத் தலைவர்க் குதவியாய்
இலங்கும் பாங்கினர் துணைவ ராவார்
தலைவர்தம் குறிக்கோ ளடையப் பல்வகை
இடையூ றியற்றி எதிர்செயல் புரிபவர்
முரணர்அந் நால்வர்க்கும் சார்பாய் உள்ளவர்
பணிவலர் நிகழ்ச்சித் துணையா நேர்பவர்
அன்னவர் பிறரும் இடையோ ராவார் 27

669. இவ்வைவ ரின்றியும் நிகழும் அஃறிணைப்
பொருளும் ஓரோர்வழிப் பாத்திர மாகும் 28

[ மாந்தர் வகை ]

670. புராணம் புனைகதை மன்னர்வர லாறெனின்
தேவர் இயக்கர் அரக்கர் அசுரர்

பூதவே தாளரும் அமைச்சர் தானையர்
தண்டத் தலைவர் ஒற்றர் தூதுவரும்
அவ்ரவர் பெண்பால் அணங்கர மகளிர்என்று
அன்னபல் வகையினர் அவர்தம் தோற்றமும்
ஆற்றலும் பண்பும் செயலும் எண்ணியும்,
வாழ்க்கை வரலாறு புதின சமுதாய
மாந்தர் எனின்கதை யிடத்தவர் மதிப்பொடு
கூறப் பெற்ற குணஞ்செயல் நோக்கியும்
ஐவகைக் குள்இவர் இவ்வகை யினரென
எளிதின் உணர வடிவம் ஒப்பனை
வினைஉரை யாடலான் விளங்கப் புனைதல்
நாடக மாந்தர் படைப்பியல் பென்ப. 29

[ உரையாடல் ]

671. பாத்திரப் பண்பறிவு ஆற்றல் ஒழுக்கம்
காட்சி நிகழ்ச்சியின் நோக்குஅவ் விடத்தே
அவர்தம் செயலுணர் வோடு வெளிப்பட
வேண்டிய சுவைகுறிக் கோளுக் கேற்ப
நாடகம் எனும்நிலை மறந்து நுகர்வோர்
தம்முனர் இயல்பா நடைபெறும் நிகழ்வுபோற்
கருதவும் பாத்திரச் சுவையோ டொன்றவும்
சுருக்கமும் தெளிவும் துலங்கத் தொடுத்தல்
நாடகக் கதையுரை யாடலின் இயல்பே 30

[ செய்ம்முறை ]

672. பாத்திரத் தன்மை நிகழ்ச்சிச் சூழல்
மெய்ப்பாடு சுவைகட் கேற்ப இலக்கிய
நடையினும் வட்டார வழக்கினும் சேரி
நடையினும் கொச்சையொடு பிறமொழிக் கலப்பினும்
கூறுங் காலை குறுக்கியும் முறித்தும்
உள்ளுறை சிலேடை குறிப்பு தகுதி
ஆகுவினை இலக்கணை பொருட்பே றின்ன
இலக்கணக் கூறுகள் இயையக் கேட்போர்
திரிபின்று செவ்வனம் உய்த்துணர் வகையான்
இயம்பல் உரையாடற் கெழில்தரும் என்ப. 31

[ சுவை-மெய்பாடு ]

673. சுவைமெய்ப் பாடிவை மெய்ப்பாட் டியலுள்
நவின்றவற் றேற்பவை நாடகச் சுவையே, 32

[ தொடக்கம் ]

674. கடுத்தது காட்டும் முகம்போல் கதையின்
மடுத்த பொருளும் நோக்கும் முடியும்
உய்த்துணர் முறையான் கவர்ச்சியும் தொடர்ந்து
துய்ப்பதற்கு அவாவும் தோன்றப் பிறைமதி
புரையத் தொடங்குதல் பொற்புடைத் தென்ப. 33

[ வளர்ச்சி ]

675. வளர்மதிக் கலைபோல் படிப்படி யாகக்
கதையும் கதையின் நோக்கும் புலப்பட
வியப்பும் நயப்பும் விரியும் வண்ணம்
திருப்பமொடு கிளத்தல் வளர்ச்சி யாகும் 34

[ முடிபு ]

676. இடையிடை தோன்றும் ஐயமும் மருட்கையும்
விடைபெறக் குறிக்கோள் விளக்க மெய்த
இன்பியல் துன்பியல் இரண்டனுள் ஒன்றின்
பாற்பட, மறுத்தும் நுகர்தற் கவாவும்
பொற்பொடு முழுமதி போல் நிறை வுறுதல்
சீரிய முடிவெனச் செப்புவர் நூலோர் 35

[ பயன் ]

677. உவப்பமை பொழுது போக்கொடு பண்டைய
மக்களின் மனப்பாங் கறிதலும் தெய்வக்
கோட்பா டுணர்தலும் பத்திநெறி வேட்டலும்
பண்பா டறிதலும் நாடு மொழியினப்
பற்றுமேம் படுதலும் கடமையை விரும்பலும்
ஒழுக்கம் மேவலும் ஒளிபெற முனைதலும்
காதலிற் சிறத்தலும் கண்ணோட்டம் பெறுதலும்
அஞ்சாமை உறுதி வீறுகொள விழைதலும்
சமய சமுதாய அரசியல் தெளிதலும்
தீயவர் கயவரை அடையாளங் காணலும்
ஒப்புர வறிதலும் விருந்துபுறந் தருதலும்
நுகர்வோர் உறுபயன், தன்குறிக் கோளையும்
கருத்தையும் புகுத்தல் பொன்புகழ் பெறுதல்
படைப்போர் அடைபயன் கலைநலம் விளக்கலும்
துய்த்தலும் பிறவும் நாடகக் கலையின்
பொதுப்பய னாமெனப் புகலுவர் புலவோர். 36

## 21. கட்டுரை இயல்

[ பொதுவியல்பு ]

678. இலக்கியம் வரலாறு அறிவியல் முதலா
விரும்பிய துறையில்அத் துறையர்க்கும் பிறர்க்கும்
பயன்தரும் எனத்தாம் புதியன வாகக்
கருதுவன வற்றை விளக்குமுக மாகவும்
யாதொரு துறைப்பொருள் அதனைப் பற்றி
விளக்கம் தெரிதற்கு விழைவ தாகவும்
ஐயங் களைய வேண்டுவ தாகவும்
வியங்கோ ளாகவும் ஆணை யாகவும்
அறிக்கை யாகவும் உரைக்கப் புகுவோர்
பாஇனம் பாட்டெனும் இலக்கியக் குரிய
அசைசீர் தளையடி ஓசை அளவெனும்
உறுப்பு வரையறை வேண்டாது தொடைநயம்
அணிநயம் நடைவளம் கருத்துவள மிவையப்
படிப்பவர் எளிதின் உளங்கொளப் பகுத்து
வரையறுத் தியற்றுவது கட்டுரை யாகும் 1

[ சிறப்பியல்பு ]

679. கட்டுரைப் பொருளின் நெஞ்சினைக் காட்டும்
திறலமை தலைப்பொடு நுதல்பொருட் குறிப்பு
நுவல்முறை காரணம் முன்னுரை யாகச்
சொலப்படும் பொருளை நிரல்செய்து அவற்றைப்
பத்திமுறைப் படுத்துப் படிப்படி யாகப்
பகருங் காலை படிப்பவ ருளத்தில்
பதியும் வண்ணம் ஏரண முறையான்
அக்புறச் சான்றொடு எடுத்துக் காட்டு
முதுமொழி சான்றோர் ஒப்பிய மேற்கோள்
தகவொடு காட்டிப் பொருளுக் கேற்பச்
சுவையணி விரவ முன்பின் முரணாது
முடிபொருங் கமைய நடுவுநிலை தோன்ற
எதுகையும் மோனையும் எழில்செய எளிமையும்
இனிமையும் பொருந்திய கனிந்தநன் னடையான்
குன்றக் கூறல் கூறியது கூறல்
மற்றொன்று விரித்தல் பயனில் கூற்றெனும்
குற்றங்க ளின்றித் தெற்றெனத் தமது
சிந்தனை வெளிப்பாடு அறிவு வெளிப்பாடு
திட்டமிட் டியற்றும் ஆய்வுரை ஏடெனும்

ஒருமூ வகையான் இயற்கை நவிற்சியொடு
பட்டாங் கியற்றலும் ஊர்ச்செலவு பற்றியும்
சான்றோர் வாழ்க்கை வரலாறு பற்றியும்
நாடக வழக்கின் நயம்பட வாய்மையொடு
இயம்பலும் கட்டுரை இலக்கியம் என்ப. 2

[ பத்தியமைப்பு ]

780. பிண்டப் பொருளதன் உறுப்பும் போலக்
கட்டுரை நுதலிய கருத்துளொரு கூறாய்த்
தனியுருக் கொண்டு முன்பின் பத்தியொடு
சங்கிலிப் பிணைபோல் கருத்தியை புற்றுச்
சுவையும் ஆர்வமும் பெருகுந் தொடர்களொடு
உள்தலைப் பிடுதற் கேற்ற தாகப்
பெட்புற அமைவது பத்தி யாகும். 3

[ நன்னடை ]

681. பருந்துமதன் நிழலும் போலச் சொல்லும்
பொருளுந் தொடர மடைவிடு நீர்போல்
தடைப்பட லின்றி அரிமா நோக்கின்
இருபுறந் தோன்ற மிடுக்குடன் இயங்கும்
பெருமித நடையும் இசையும் பாணியும்
மருவியது போலச் சொற்பொருள் தொடர
ஆற்றொழுக் காக அருகா தியங்கும்
பிடிசெலல் போன்ற அழகுறு நடையும்
சிறுகை வீசிக் குறுகுறு இயங்கும்
குழமகன் போன்ற அழகுறு நடையும்
செவிக்குவப் பளிக்கும் சிறப்பின வாகும். 4

[ இழிநடை ]

காற்றா னலைப்புறு கட்டுமர நடையும்
சேற்றிடை இயங்கும் மேதியின் நடையும்
கடுஞ்சுமை ஏற்ற கர்த்தப நடையும்
கண்டல் நடையும் கற்றாழை நடையும்
அரவ நடையும் ஆமை நடையும்
இரவுல் நடையும் இழிந்தன என்ப. 5

[ சிந்தனை வெளிப்பாட்டுக் கட்டுரை ]

682. இயற்கை செயற்கைப் பொருள்நல வண்ணனை
புராண இலக்கிய வரலாற் றுண்மையின்

நுட்ப விளக்கம் பல்வகைப் பொருளையும்
அறிமுகப் படுத்தல் அறநெறி விளக்கம்
அறிவியல் உலகியல் வானியல் கோளியல்
பொருளியல் கலையியல் அரசியல் மருந்தியல்
அன்னவை பற்றிய நிகழ்கருத் துரைத்தல்
நீதி சமய சமுதாய நடைமுறைச் சட்டம்
கல்வி காவல் வாணிகம் தொழில்நிலை
உழவியல் பற்றி நிலவும் சூழலைப்
பட்டாங்கு வரைதல், நகைச்சுவை அங்கத
உத்தியொடு காட்டுதல் உயர்ந்தோர் சான்றோர்
வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சி பண்பாடு
தொண்டு முதலாயவை பற்றிச் சுட்டுதல்
சமுதாய அரசியல் மொழிஇனம் பற்றிய
நடைமுறைச் சிக்கலில் தன்கருத் துரைத்தல்
அன்னவை போல்வன சித்தைவெளிப் பாட்டுக்
கட்டுரை யாமெனக் கூறுவர் கற்றோர் 6

[ அறிவு வெளிப்பாட்டுக் கட்டுரை

684. வாழ்வியற் குரிய பல்வேறு துறைசார்
இலக்கியம் கலைமுத லாய பிறர்தம்
படைப்பினைப் பற்பல கோணந்து நோக்கி
ஆளுமைத் திறத்தோ டளவையான் உரைத்தலும்
மெய்யியல் மொழியியல் நுண்மையை விளக்கலும்
எதிர்மறுத் திடித்துரை வழங்கற் கண்ணும்
கருத்தரங் கத்தினிற் பொருந்துதற் கண்ணும்
ஆய்வொடு திறனாய் வமைய வரைதலும்
அறிவு வெளிப்பாட்டுக் கட்டுரை என்ப. 7

[போலி ]

685. வாணிக நோக்கிற் பொழுதுபோக் கற்கெனப்
புகல்வன கட்டுரைப் போலி யாகும். 8

[ ஆய்வுக் கட்டுரை ஆய்வின் பிறப்பு ]

686. பயனழகு ஆக்கம் பெருமை புகழ், தரும்
பொருளைத் தேர்தலும் அரியன தொகுத்தலும்
மறைந்துள வற்றைக் காண்டற் கவாவலும்
கண்டதைப் பிறர்க்குக் காட்ட விழைதலும்

நல்லன கோடலும் அல்லன விலக்கலும்
மன்பதைக் குடல்கொள் உயிர்க்குண மாதலின்
ஆய்வாய் வுரைகள் அனாதி என்பவே. 9

[ ஆய்வுக்குரிய குணங்கள் ]

அறிவியற் பார்வை தருக்கமுறை தேர்தல்
பிறப்பமைவு ஓர்தல் வரலாறு தெளிதல்
விதிமுறைக் கிணங்கல் வித்தகச் சிந்தனை
பகுந்தறி வாண்மை தாளாண் மைபொறை
நடுவுநிலை நோக்கு தன்தக வறிதல்
மெய்தெரி வேட்கை கொடைமனப் பான்மை
சான்றா வணங்களின் தகவுதேர்ந் துணர்தல்
கூர்ந்து நோக்கல் குறிக்கோள் பிறழாமை
செய்ம்முறைத் தேர்ச்சி பொய்ம்மை விலக்கல்
சோதனைப் படுத்தல் சாதனை கணித்தல்
அன்னபிற ஆய்விற் கடிப்படை குணமே 10

[ ஆய்வுக்கட்டுரைக்கு ஆகும் பொருள்களும் நோக்கமும் ]

688. பலதுறை அறிவியல் கணிதம் கோளியல்
அரசியல் சமுதாய இயல்சட்ட இயல்மொழி
இலக்கண இலக்கியம் வாழ்வியல் மெய்யியல்
பல்வகை வரலாறு உளவியல் முதலிய
துறைகளில் சிலபல கூறுகள் பற்றியும்
யாதொரு நூலந்த நூலினைப் பற்றியும்
நூலா சிரியர் உரையா ளர்உரை
மன்பதை மக்கள் சமயக் கொள்கைகள்
விலங்கியல் நுண்ணுயி ரியல்தா வரவியல்
வட்டார வழக்கு பழக்க வழக்கம்
விழாக்கள் நம்புகை கடல்வாழ் உயிரியல்
புதைபொருள் வரலாற்றுச் சின்னம் ஓவியம்
கோயில் கட்டிடம் இசைநடம் நாடகம்
கவின்கலை பல்வகை விளையாட்டுப் பற்றியும்
மக்கள் வாழ்வொடு தொடர்புடை யவைபிற
யாவையவை பற்றியும் மாந்தர் பயன்கொள
அறிவு வளம்பெற நெறிமுறை யாகப்
பகுத்து நோக்கிப் பல்வகை புதிய
நுட்ப திட்பக் கூறுகளைக் கல்வித்
துறைவழி யாக விளக்கும் ஆய்வேடு
திட்டமிட் டியற்றும் ஆய்வுக்கட் டுரையாம் 11

[ சான்றுகளும் தொகுத்தலும் ]

689. ஆய்பொருட் குரிய அடிப்படை நூல்கள்
சார்பெதிர் நூல்களின் இருவகைக் கருத்துகள்
ஆட்சியர் ஆவணம் செப்பேடு கல்வெட்டு
சான்றோர் நாட்குறிப்பு ஆய்ந்தவர் கருத்து
துணைபுரி செய்தி இதழ்களின் குறிப்பு
களங்கண் டறிதல் தொடர்புடை யாளரைக்
கண்டு வினாதல் அஞ்சல்வழி உசாவல்
பொருந்திநேக் காணல் நிழற்படந் தொகுத்தல்
புதைபொருள் சின்னத்துப் பொருந்துவன கோடல்
விலங்கியல் பூங்கா புள்ளுறை கானம்
அரும்பொருட் காட்சி அகம்புக் கறிதல்
செய்ம்முறை வழியான் தெரிந்த முடிபுகள்
தன்னனு பவத்தான் உற்றபயன் பாடுகள்
அன்ன பிறவும் ஆய்வுரைக் கருத்துகள்
மன்னுதற் குரிய சான்றுக ளாகும் 12

[ எழுதும் நெறிமுறை ]

690. எடுத்த தலைப்பின் விளக்கம் அதனை
ஏற்ற காரணம் இயல்முறைப் பகுப்பு
மிகைகுறை யில்லாத் தகவமை வரைவு
அளவோ டமைந்த அகப்புறச் சான்றுகள்
மேற்கோ ளாக விளங்குமா றமைந்தாங்கு
உள்ளன வற்றை உள்ளவா றியம்புதல்
புள்ளி விவரம் பொருந்தச் சுட்டுதல்
உள்ளுறை கருத்தைக் காரணங் காட்டி
விளக்குதல் பிறர்முன் காணா தவையாகக்
கண்டன வற்றை உத்தியொடு கணித்துத்
தரவு மூலங்களை நிரல்படப் பரப்பி
ஏற்கும் முறையான் இயம்புதல் அவற்றான்
எதிர்பயன் ஆக்கம் இயைபுறக் கூறுதல்
அறிஞருள் வேறுபடு கருத்தின வாயின்
முறைபெற அவற்றை வரைந்து தன்கருத்தை
அறைதல் தீர்வுறாச் சிக்கலின தாயின்
சிக்கலின் காரணம் தெளியக் கூறி
தக்கநூல் நெறியான் சிக்கல் தவிர்த்தல்
அலங்கார நடைவிரி வுரைநயங் கூறலை
விலக்கி நுகர்வோர் தகவிற் கேற்ப

மொழிவழு வின்றி எளிய இனிய
விழுமிய நடையான் ஒருமைப் பாடுற
முதலும் முடிவும் முரணாது இயைபும்
எழுச்சியும் பொருந்தப் படிப்படி யாக
வளர்ந்து, சுருங்கிய தொகுப்புரை யமையத்
துணைநூற் பட்டியொடு துகளறப் புனைந்து
மீண்டும் சிலமுறை பார்த்துஒழுங்கு படுத்தல்
அன்ன பிறவும் ஆய்வுக் கட்டுரை
எழுதும் நெறிமுறை யாகும் என்ப. 13

[ கட்டுரையாளர் தகுதி பொது ]

691. சிந்தை வெளிப்பா டவ்வத் துறையினும்
வல்லார் யாவர்க்கும் ஏற்கும் நூல்வழி
அறிவு வெளிப்பாடு அத்துறை வன்மையும்
பிறதுறை யறிவும் பன்மொழிப் பயிற்சியும்
நடுவுநிலை நோக்கும் மானுட நேயமும்
கலைமொழி இலக்கியப் பற்றுமுடை யார்க்கே
உரியது மற்றையர்க் கரிய தாகும்
ஆய்வுக் கட்டுரை படைப்பா ளர்க்குத்
தேர்ந்த கல்விப் பயிற்சியும் ஆய்விற்கு
இயம்பிய குணங்களும் வயம்பெறல் தகவே 14

## ஊர்ச் செலவுக் கட்டுரை

[ ஊர்ச் செலவு நோக்கம் ]

692. கல்வி கலையறிவு காட்சி வேட்கை
பல்வகை வணிகம் தொழில்வினை யாட்டுகள்
அரசுறவு பொருட்டயல் நாடுசெல் செலவும்
ஆன்மிக நாட்டம் அருள்பெறல் வேண்டல்
மாண்பியல் காணும் விருப்பினிற் புகழ்மலி
தலச்செல வயர்தலும் ஊர்ச்செல வாகும் 15

[ ஊர்ச்செலவுக் கட்டுரை இலக்கியமாதல் ]

693. ஊர்ச்செல வயர்ந்துமீள் கலைவலான் ஆங்கே
பார்த்தவை கேட்டவை அறிந்தவை ஓர்ந்தவை
நேர்ந்தவை நிகழ்ந்தவை நினைத்தவை யாவும்
பிறரும் தெரிந்துளம் மகிழ்ந்தறி வெய்தவும்
தன்தக வுணர்த்தவும் சிந்தையுற் றவையெலாம்
நெறிப்பட ஓர்ந்தும் பயனும் சுவையும்
உள்ளன தேர்ந்துகொண் டல்லன தவிர்த்துப்

பட்டாங்குரையாது எழிலும் எழுச்சியும்
பயப்பத் திரையில் பார்ப்பது போன்ற
உணர்வு உடன் தோன்ற வண்ணனை தழுவி
உரைப்பது ஊர்ச்செல விலக்கிய மாகும் 16

694. பட்டாங் குரைப்பினது செய்திக் கட்டுரை 17

[ பயன் ]

695. அவ்வந் நாட்டு நிலவியல் நீர்வளம்
இயற்கைச் சூழல் மக்கட் பண்பாடு
நாகரிக வேட்கை கலைநிலை மாட்சி
அறிவியல் ஏற்றம் அரசியல் அமைவு
விளைபொரு ளாக்கம் வாணிக வளர்ச்சி
தொழில்துறை வளர்ச்சி சமய ஒழுக்கம்
குடும்ப வாழ்க்கை மக்கட் குறிக்கோள்
செல்வச் செழிப்பு சிந்தனை உரிமை
இலக்கியப் படைப்புகள் அரசியல் நிலைமை
ஆயபல் நிகழ்வர லாறறிந் தவர்தம்
குறைநிறைக் குரிய காரணந் தேர்தலும்
நாம்நமை வளர்த்துக் கொளும்நினை வுறலும்
நம்நிலை நமது கலைப்பண் பாட்டொடு
நாகரிகம் பற்றியவர் கருத்தறிந்து கொளலும்
திருத்தலம் பற்றிய தாயின் அத்தல
மேன்மையும் தெய்வக் காட்சியும் மாட்சியும்
பூசனை வழக்கும் விழாவின் பொலிவும்
பத்திமைச் சிறப்பும் சித்திபெறும் விழைவும்
ஒத்தவை பிறவும் உணர்ந்துளம் உவத்தலும்
ஊர்ச்செல விலக்கியத் துறுபய னாகும் 18

## வாழ்க்கை வரலாற்றுக் கட்டுரை

[வரலாறு எழுதப்படற்குரியவர் ]

696. முடியரசு மரபான் நெடுநிலம் ஆண்ட
மன்னவர் அவர்தம் சுற்றம் பற்றிய
செய்திகள் தேச வரலா றாகலின்
அன்னவை தவிர்த்து மக்களொடு மக்களாய்ப்
பிறந்து சிறந்து மறைந்த மாந்தருள்
மன்பதை உய்ய மாண்வினை புரிந்தோர்
தந்நலம் பேணாது உலகம் வாழ
மன்னிய செயல்புரிந் துயர்ந்தோர், மக்கள்

வளம்பெற அரும்பணி புலங்கொளப் புரிந்தோர்
செம்பொரு ளுணர்ந்துலகு கிம்மைப் பயன்கொள
செந்நெறி காட்டிய திருவருளாளர்
வியத்தகு கருவிகள் விளைத்த விஞ்ஞானியர்
நயத்தகு சிந்தனை நல்கிய நூலோர்
வண்மையாற் பிறர்க்கு வாழ்வளித் துயர்ந்தோர்
உண்மைபல கண்டறிந்து ணர்த்திய கணிவர்
நிகரிலா வெற்றிகள் விளைத்த மாவீரர்
தளரா உழைப்பினால் தகவுமேம் பட்டோர்
தன்குலம் தன்இனம் தலைநிமிர்ந் துலாவத்
துன்பினை ஏற்றுபல் நன்மைகள் புரிந்தோர்
நாடும் மொழியும் மீடுபெறத் தம்மை
ஈந்துயிர் நல்கிய ஈடிலாத் தொண்டர்
உள்ளொளிக் கவிஞர் ஒப்பிலாக் கலைஞர்
நிகரிலா இலக்கியம் படைத்தவர், புகரிலா
வாணிகச் செம்மலர் கல்விக் கொடையினர்
பெருந்தொழில் முகவர் மருந்தியல் விற்பனர்
மணந்தவர் மாண்புற இணைந்து தொண்டாற்றிய
பொற்புடை மகளிர் இற்புக ழுயர்த்திய
கற்புடை மாதர் கலைவளஞ் சான்றோர்
தமக்கென வாழாத் தகவுடை யாளர்
அன்னவர் ஒத்த மன்னிய சிறப்பினர்
உயர்திணைக் குரிய செல்வ மாகவின்
அன்னவர் தோன்றி மறைந்ததற் கிடையே
அவரொடு நிகழ்ந்த செயல்விளை வெல்லாம்
பார்த்தறி யாதவர் படிந்தறிந் துய்ய
ஓர்ந்தவர் வாழ்க்கையை ஒண்மையுற வரைவது
வாழ்க்கை வரலாற் றிலக்கியம் என்ப. 19

[ பொதுவியல்பு ]

697. வரலாற்று மாந்தர் தோன்றிய குடிமரபு
பயந்தோர் புரந்தோர் உடன்பிறப் பாளர்
ஒன்றிய உறவினர் நண்பினர் அவர்தாம்
தோன்றிய காலத்துச் சமுதாய நிலைமை
ஆட்சி அரசு கலையிலக் கியநிலை
கல்வி பயின்றிடம் பயின்ற முறைமை
சமய சமுதாய அமைவுச் சூழல்கள்
அன்னபிற வற்றுள் இன்றி யமையாது
வேண்டுவன வற்றை விளக்கியத் தலைவர்

பிறந்த சூழலும் பிள்ளைப் பருவமும்
பள்ளிப் பயில்வும் பாங்கரின் சூழலும்
ஆசான் தொடர்பும் அறிவுக் கிளர்ச்சியும்
மேனிலைக் கல்வியும் விளையாட்டுத் திறனும்
கல்லூரி வாழ்வும் பல்கலை நோக்கும்
குறிக்கோள் உணர்வும் குறைநிறை ஒழுக்கமும்
குடிமக னாகக் குடும்பம்ஏற் றமையும்
இல்லாள் பற்றிய ஒல்லும் வரலாறும்
மக்கட் பேறும் மற்றைய செல்வமும்
மகளிராயின் கணவன் வரலாறும்
இல்லறக் கிழமையின் ஏற்ற இறக்கமும்
இயைபுறக் கூறலும் இருபா லாரும்
ஏற்றநற் பணியும் ஆற்றிய முறையும்
பணியக நண்பரும் பகைவரும் அவரவர்
அணுகிய சோதனை இயற்றிய சாதனை
எய்திய இன்பமும் துன்பமும் இடுக்கணும்
உடல்நிலைக் குறிப்பும் உடையணி குறிப்பும்
கடமை விளக்கமும் வாழ்க்கைத் திருப்பமும்
ஆய்ந்துமேற் கொண்ட குறிக்கோள் அதனைத்
தேர்ந்தடை தற்குத் துணிந்த புறத்துறை
அவ்வழி நேர்ந்த அருந்துணை பெருந்தடை
அருகா முறற்சி ஆய்ரா உழைப்பு
பெற்றநல் விளைவு பிறவக நேர்ச்சி
வெற்றி தோல்விகள் புகழ்ச்சி இகழ்ச்சிகள்
உஞற்றிய தொழில்கள் உலையாப் படைப்புகள்
எய்திய சித்திகள் இசைத்த கருத்துகள்
பெற்ற பேறுகள் உற்ற விருதுகள்
அடியவர் தொண்டர் மாணவர் வாய்த்தமை
விதிமுறை நேர்ச்சி புகழ்ஒளி விளக்கம்
இறுதிச் சூழல் இறுதி விருப்பம்
மறைவு மறைந்த காலை உலகம்
நிறைவுறச் செலுத்திய இறுதி மரியாதை
நினைவுச் சின்னம் அன்னபிற வற்றுள்
அவர்தம் குறிக்கோள் ஆற்றிய பெருஞ்செயல்
பெற்ற நல்லிசைக் கேற்பன வற்றைத்
தக்கமேற் கோளொடும் சான்றொடும் சுட்டித்
தெற்றென விளக்கி மற்றைய வற்றைக்
குறித்துச் சுட்டி நிகழ்ச்சி விளைவுகள்
ஒவ்வொன் றற்கும் உரிய காரணச்

சூழலைச் சுவைபட உவமையொடு காட்டிப்
படிப்பவர் அவரொடு வாழ்வது போன்ற
உணர்வெழும் முறையான் அவ்வவர் சால்பிற்கு
ஏற்பத் தண்ணிய கலையுணர் நடையான்
நிலைபெற வியற்றுதல் வாழ்க்கை வரலாறு
வரையும் முறையென உரைக்குவர் புலவர். 20

[ சிறப்பியல்பு ]

எத்துறை மாந்தர் அத்துறை பற்றிய
விவரமும் அவ்வத் துறைகளில் அவரவர்
இயற்றிய வித்தக வியப்பமை செயல்களும்
விளைவும் பயனும் தோன்ற விரித்துத்
திறம்பட வழங்குதல் சிறப்பிலக் கணமே.

[ வகை ]

698. தாமே வரைந்து வழங்குதல் பிறரால்
இயற்றப் படுதலென் றிருவகைத் ததுவே. 21

[ தானே எழுதும் தன் வரலாறு ]

699. இலக்கிய அறிவும் எழுதும் திறனும்
சிந்தனைத் தெளிவும் நினைவாற்றலும் கலை
உணர்வும் உடையவர் தம்வர லாற்றினைத்
தாமே எழுதுதல் தகும்என மொழிப. 22

[ ஒருவரைப் பற்றிப் பிறர் எழுதும் வரலாறு ]

700. ஒருவர் வரலாற்றினை ஒருவகைத் தொடர்பான்
மற்றவர் எழுதின் உற்றஅத் தலைவரொடு
உடன்வாழ்ந் தவராய் அவரது பண்பும்
செயலும் நோக்கும் திறலும் விளைவும்
அறிந்துதேர்ந் துணர்ந்த அறிவின ராயும்
கல்வியும் இலக்கியப் படைப்பாற் றலும்மன
நடுவு நிலைமை உடையவ ராயும்
இருத்தல் தகும்அவ் வாய்பில ராயின்
தலைவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சியை உற்றார்
உறவினர் நண்பினர் உடன்வாழ்ந் தோரிடம்
உசாவி யறிந்தும் தலைவர் எழுதிய
மடல்கள் நாட்குறிப் பிவற்றைத் தொகுத்தும்
பிறபடைப் புக்களைப் பேணி ஆராய்ந்தும்
வேண்டுவன கொண்டு மற்றவை விலக்கித்
தொடர்பும் சுவையும் தோன்ற வரைதல்
பயனுடைத் தாக அமையும் என்ப. 23

[ எழுதும் முறைமை ]

701. பருவம் கல்வி பணிநிலை மனையறம்
தொண்டு சிறப்பு முதுமை மறைவு
புகழ்முத லாகப் பொருந்தும் முறையான்
உள்தலைப் பமைத்துஆங் கொல்லும் வகையான்
நிழற்படம் நினைவுச் சின்னம் முதலியவை
காட்டி இலக்கிய ஆய்வேட் டிற்குக்
கூறிய முறையுள் ஏற்பன கொண்டு
பாவகை உரைநடை வடிவினுள் ஒன்றன்
கலையெழில் மிளிர எழுதுதல் சிறப்பே. 24

[ வாழ்க்கை வரலாற்றின் பயன் ]

702. அரசியல் சமூக சமய நிலைகள்
மக்கள் மனநிலை பழக்க வழக்கம்
பொருள்தொழில் கல்வி கலைநிலை, செல்வர்
வறியவர் இரவலர் செயற்பா டின்னன
மானுட வாழ்வொடு பிணைந்தவை யாதலின்
வாழ்க்கை வாலாற்று இலக்கியம் அவரவர்
கால வரலாற்றினை ஆடிநிழல் போல
அறியக் காட்டுதல் அன்றியும் அவ்வத்
துறைகளின் ஆர்வலர்க் குரியவழி காட்டலும்
குறைகளைந் தவ்வழி ஒழுகும் அவாவினைத்
தூண்டலும் பிறவும் அதன் பயனாமே. 25

## 22. திறனாய்வு இயல்

[ திறனாய்வு பொதுவியல்பு ]

703. யாதொரு பொருளதன் தோற்றம் வடிவுரு
வளர்ச்சி குணம்செயல் நோக்குறு பயன்நிலை
முடிவு பற்றிஅப் பொருள்தெரி துறையில்
முற்றறி வுற்றவொரு கற்றறி புலவன்
அளவை முறையான் ஆராய்ந்து அவற்றைச்
செவ்விதி னியம்புவது திறனாய் வாகும் 1

[ அளவை ]

704. காரிய விளைவிற் குரிய முக்காரணம்
நேரிதின் அறிதலும் உய்த்துக்கொண் டுணர்தலும்
ஒப்பிட்டு நோக்கலும் விடையறி திறனும்
அத்துறை ஆன்றோர் அறிக்கையும் தத்துவ
உளவியற் கல்வியும் அளவை யாகும். 2

[ முறை ]

705. நோக்கல் ஆராய்தல் மதிப்பிடல் தீர்ப்புரை
எனநால் வகைத்திற னாய்வுமுறை என்ப 8

[ படைப்பிலக்கியத் திறனாய்வு ]

706. நுண்கலை கவின்கலை அறிவியற் கலைபுகல்
பண்டைய இன்றைய இலக்கியத் திறனையும்
இயற்றியோர் நுகர்வோர் தகவையும் பற்றிப்
பல்வகை நோக்கொடு பகுத்தா ராய்தலும்
மதிப்பிட் டுரைத்தலும் மாண்பினை விளக்கலும்
நடை(விதி)முறைத் திறனாய் வாகும் என்ப. 4

[ பல்வகை நோக்கு ]

707. எடுத்த இலக்கியத் தோற்றம் தோன்றக்
காரணம் தோன்றிய காலம்அக் காலத்து
அரசியல் மக்கள் சமுதாய நடைமுறை
மற்றை இலக்கிய இலக்கணச் சூழல்
நுவல்பொருள் வடிவம் யாப்பியல் பணிநலம்
கற்பனை கருதிய உணர்ச்சி குறிக்கோள்
விளம்பிய உத்திநூல் விரும்பிய பயன்அது
விளைத்துள விளைவு குறைநிறை சிறப்பு
இலக்கணச் செறிவு சொல்வளம் மொழிநடை
இலங்கு நிலைவழக் கழிவு கலைக்கொடை
முன்னவர் நூல்வழிப் பெற்றுள ஆக்கம்
பின்னவர் படைப்புகள் எய்திய தாக்கம்
இயற்றிய ஆசான் அவன்வர லாறு
கல்வி கேள்வி கலைத்திறன் நோக்கு
பிறபடைப் பிதனைப் பயிலுதற் குரியோர்
இலக்கிய உலகில் பெறுமதிப் பின்னன
நோக்குதற் குரிய திறங்க ளாகும். 5

[ மேற்புலவாணர் பகுப்புமுறை ]

708. விதிப்பு முருகியல் விளக்கத் திறனாய்வு
செய்ம்முறை எழுதுமுறை கொள்வழி போலுமை
விளைப்பு சமுதாய முறைவர லாற்றுமுறை
தொன்மவியல் உளவியல் பகுப்புமுறை ஒப்பியல்
உணர்நெறி மதிப்பீட்டு முறைபா ராட்டு
செலுத்துநிலை பாடம் புலப்பாட் டாய்வென
மேலையர் பல்வகை யாக விளம்புவர் 6

709. கண்ணிய தொன்றன் திறங்களைக் கணித்து
நுண்ணிதின் விரித்தந் நூல்நயம் புலப்படக்
கலைநலந் தெரித்துக் களிப்புறச் செய்தலின்
திறனாய் வுரையும் கலையிலக் கியமே. 7

### [ படைப்பிலக்கிய அமைதி ]

710. உலகம் மக்கள் வாழ்வியல் அவற்றை
நுவல்வோர் நுகர்வோர் எனுமைந் துறுப்பும்
இயைபுற் றமைவது இலக்கியப் படைப்பே 8

### [ அவற்றின் விளக்கம் ]

711. நிலமுதல் ஐவகைப் பூதமும் அவற்றின்
கலப்பான் விளையும் இருதிணைப் பொருள்களும்
அவற்றை இயக்கும் இறைமையும் உலகம் ;
இறையாற் றல்வழி இயங்குவோர் மக்கள்.
மக்களின் அகப்புறச் செயல்கள் வாழ்க்கையாம்
மக்கள் வாழ்க்கையை உலகொடு பொருந்தித்
தங்கருத் திசைப்பவர் நுவல்வோர் அவற்றைக்
கொண்டுபயன் உறுவோர் நுகர்வோர் என்ப. 9

### [ பிறர் கொள்கை ]

712. உலகமுத லாகமேல் ஓதிய வற்றைப்
பாடு பொருள்நுதல் பொருள்படைப் பாளி
சுவைப்போர் எனவும் வகைப்படுத் துரைப்ப. 10

### [ மதிப்பீடு ]

713. உலகொடு மக்கள் வாழ்க்கையைப் பற்றிப்
படைத்தோன் நுவன்ற பாங்கையும் படைத்தோன்
திறலையும் நோக்கையும் படைப்பின் தகவையும்
நான்கின் இயைபையும் விளைவையும் சுவைப்போர்
தொடர்பையும் பயனையும் கடவபிற வற்றையும்
அளவையான் நோக்கி ஆய்ந்து முடிவுசெய்து
இயம்புதல் மதிப்பீ டாகும் என்ப 11

### [ திறனாய்வாளன் தகுதி ]

714. சீரிய சிந்தனை செய்ம்முறைத் தேர்ச்சி
ஊன்றிய நோக்கம் உய்த்துணர் வாற்றல்
நேர்ந்த துறையில் நிரம்பிய புலமை
மற்றைய துறைகளைப் பற்றிய அறிவு

பன்மொழிப் பயிற்சி பகுத்தறி பாங்கு
அறிவியற் பார்வை நெறிபிற ழாமை
உலையா ஊக்கம் உண்மைகாண் வேட்கை
கலைமகிழ் வுள்ளம் கணக்கியல் தெளிவு
ஆயும் பொருளிடத்து ஆழ்ந்த மதிப்பு
நடுவுநிலை பொறுமை விருப்புவெறுப் பின்மை
எழுதும் மொழியிற் பழுதிலாப் புலமை
உரிமை நெஞ்சம் உலகியல் தெளிவு
நுகர்வோர் பாங்கினை நுணித்தறி திறமை
மெய்ப்பொருட் பற்றிவை திறனாய் வாளற்கு
இன்றியமை யாத தகவுள் என்ப 12

[ திறனாய்வாளர் கடப்பாடு ]

715. படைப்பு நிலையினைப் பகுத்தறி வித்தல்
காலம்வரை யறுத்தல் கருதுகோள் சுட்டல்
செப்பிய திறங்களுள் சிலபல வற்றையோ
முழுமை யாகவோ விழைவோர்க் குணர்த்தல்
இலக்கியம் படைப்போர் ஏற்கத் தக்கவை
தகாதவை தமக்கே புலப்படச் செய்தல்
தகவில வற்றைத் தவிரச் செய்தல்
அத்துறை யாளரின் அறிவைத் தூண்டுதல்
நூலா சிரியன் சிந்தனை வன்மை
மென்மை மேன்மை நுண்மை தெரித்தல்
உண்மைகாண் உணர்வை ஊட்டல் பிறவும்
திண்ணிய திறனாய் வாளர்தம் கடனே. 13

[ திறனாய்விலக்கியத்தின் பயன் ]

716. இலக்கியக் கலையின் இன்றியமை யாமையை
புலங்கொளல் புலமைத் திறனறிந்து திளைத்தல்
இலக்கியக் கருத்தினை எளிதிற் சுவைத்தல்
ஐயந் திரிபறல் வையத் தியல்பையும்
வாழ்வின் நோக்கையும் பயனையும் தெரிதல்
கலைநலந் தேர்ந்து களிப்புறல் நலந்தீங்கு
அறிதல் சிந்திக்க அவாவுதல் பிறவும்
படிப்போர் உறுபயன் படைப்போர் பெறுபயன்
சிறந்த படைப்பிற் காவன தெளிதல்
தொகைவகை சுவையள வறிதல் உலகம்
ஒப்பவை உவப்பவை வெறுப்பவை உணர்தல்
பிறவுமாம் இலக்கியப் படைப்பினை நுகர்வினைச்
செம்மைப் படுத்தல் சிறப்புப்பயன் என்ப. 14

## 23. ஒப்பியலாய்வியல்

[ ஒப்பு நோக்கல் ]

717. அழகுஉணர்வு அறிவு வளர்ச்சிஉளத் தமைதி
அதன்வழி வருகுவ ஆதலின் இலக்கியப்
படைப்பிற் கடிப்படை யாகியும் ஆய்விற்கு
ஏது வாகியும் இலங்கும் உயிர்க்குணம்
ஒப்புநோக் கென்ப உளவியற் புலவோர் 1

718. உவமை ஓட்டணி வேற்றுப் பொருள்வைப்பு
சிலேடைஒப் பியலின் பிறப்பிட மாகும். 2

[ ஒப்பு நோக்குதற்குரிய உரிப்பொருள் ]

719 வடிவு நிறம்சுவை நோக்கம் செயல்பயன்
உணர்விவை ஒப்புநோக் குதற்குரிப் பொருளே. 3

[ களம் ]

720. காலம்இடம் கொள்கை நுதல்பொருள் வடிவம்
நுவல்முறை வாழ்விவை நோக்குதற் குரிய
களவகை யாமெனக் கருதுவர் நூலோர். 4

[ ஒப்பிடற்குரிய பொருள் ]

721. கவின்கலை நுண்கலை அறிவியற் கலைவளம்
நுவலும் பலவகைப் படைப்பிலக் கியத்தொடு
படைத்தோர் அவற்றின் திறனாய் விவைகள்
ஒப்பிடப் படும்பொருள் ஆகும் என்ப. 5

[ காலம் ]

722. பண்டைக் காலம் இடைக்கா லம்பிற்
கால மவற்றுள் சமகா லம்என
ஒப்புணர் காலம் ஒருநால் வகைத்தே 6

[ இடம் ]

723. ஒருமொழி ஓரினம் நிலவும் ஒருநிலம்
பலமொழி சிலவினம் பரவிய பெருநாடு
எண்ணரும் மொழியினம் இணைந்தபே ருலகென
ஒப்பிடப் படுமிடம் மூவகைத் தாகும் 7

[ படைப்போன் கொள்கை ]

724. தெய்வப் பற்றினை ஊட்டுதல் சமய
மெய்ப்பொருள் உணர்த்தல் ஊழ்வலி யுறுத்தல்

நல்லறிவு கொளுத்தல் பண்பாடு வளர்த்தல்
மொழியின நாட்டுப் பற்றினை முடுக்குதல்
அறநெறி காட்டல் மறவழி விலக்கல்
நல்லொழுக் கத்தில் நாட்டமுறச் செய்தல்
போக்கறு கலைநலம் நோக்குறச் செய்தல்
பழமையைக் காத்தல் புதுமையைப் போற்றல்
அன்னபிற ஆக்கம் நிலைபெற விழைதல்
இலக்கியம் படைப்போர் கொள்கைக ளாகும் 8

[ வடிவம் ]

725. பாஇனம் பாட்டுஉரை எனும்யாப் பமைதி
இயற்சொல் முதலிய சொல்வகை யாட்சி
தொகைமொழி தொடர்மொழி இலக்கணச் செறிவு
அணிவகை ஒப்பனை வண்ணம் வனப்பு
பத்திஇயல் படலம் ஆயபல் பகுப்பு
தொடக்கம் வளர்ச்சி முடிபுநிலை ஒழுங்கெனும்
உறுப்பொடு திகழ்வது வடிவ மாகும். 9

[ நுவல்முறை ]

726. கருதிய கருப்பொருள் முளைவிட் டரும்பி
தளிர்த்துக் கிளைத்துக் காய்த்துப் பழுத்துப்
பயன்தர எருநீர் ஒளிவளி காவல்போல்
இலங்கும் கற்பனை சுவைமெய்ப் பாடு
மொழிநடை மேற்கோள் எடுத்துக்காட் டழகு
உத்திவகை நுட்பம் உள்ளுறை குறிப்பு
தகவு நோக்கிவை நுவல்முறை என்ப. 10

[ வாழ்வு ]

727. கலைநெறி மரபொடு பிறந்ததோ ரிலக்கியம்
நிலைபெறு தற்கும் வழக்கொழி தற்கும்
உரிய ஏதுவைக் கருத்துநிலை வடிவம்
நுவல்முறை பயன்பாடு அரசியல் சமயக்
சூழல் சமுதாய நடைமுறை மாற்றம்
அயலவர் இலக்கியத் தாக்கம் உடையவர்
சோர்வு அறியாமை அறிவடி மைத்தனம்
அன்னபிற சார்வுக் கருவியான் காணுதல்
ஒப்பியல் இலக்கிய வாழ்வு நோக்குதலாம் 11

[ ஒப்பு நோக்கற்குரிய படைப்பும் முறையும் ]

728. கவின்கலை நுண்கலை அறிவியற் கலைதெரி
படைப்பிலக் கியவகை யாவும் ஒப்பிட்டு
நோக்குதற் குரியவே நோக்குங் காலை
பொருள்நிலை ஒத்தவை ஒவ்வா தவைஒரு
மொழிக்குள் அமைந்தவை வேறுமொழி யாயவை
கொள்கையின் ஒத்தவை கொள்கைவே றாயவை
ஒருநிலத் தெழுந்தவை வெவ்வே றிடத்தவை
ஒத்தகா லத்தவை முன்பின் னாயவை
எவ்வகை யாயினும் இறைபுறு பொருள்களை
ஒப்பிட்டு நோக்கலும் ஓரா சிரியன்
படைப்புக ளுள்ளும் பிறவா சிரியன்
படைப்பொடும் படைப்பினுள் சிலபல துறையொடும்
ஒப்பிடல் ஒருவகை, ஒருமுதல் நூல்வழிப்
பிறந்தநூல் களையும் ஒருநூல் பற்றிய
ஆய்வுரை களையும் ஒப்பிடல் ஒருவகை,
காவிய நூல்களை புதின வகையொடும்
தனிநெடும் பாக்களைச் சிறுகதை வகையொடும்
அறநெறி நூல்களைச் சட்ட நூலொடும்
சிற்றிலக் கியங்களை நாடக நூலொடும்
ஒப்பிடல் ஒருவகை, படைப்பா சிரியரை
ஆங்ஙனங் காணலும் ஒருநூ லுள்ளே
இயல்களை ஒப்பிட்டுப் பார்த்தலும் பிறவும்
ஒப்புநோக் கியல்பெனச் செப்புவர் புலவர் 12

[ ஒப்பியல் ஆய்வாளர்க்கு வேண்டும் தகுதிகள் ]

729. இலக்கியக் கலையின் இயல்நெறி நுட்பம்
துலக்கும் ஆர்வம் பலதுறைக் கல்வி
ஆய்வுமனப் பான்மை அறிவியல் நோக்கு
பன்மொழிப் பயிற்சி படைப்பா சான்றன்
உளம்குறிக் கோள்பிற அளந்தறி ஆற்றல்
திறனாய் வறிவு நடுவுநிலை ஒப்பிடும்
இலக்கியத் துறையில் எஞ்சாப் புலமையொடு
சிந்தனைத் தெளிவும் சுவைநுகர் அவாவும்
ஒப்பிலக் கியத்துறை ஆய்வா ளர்க்கு
வேண்டும் அடிப்படைத் தகுதிக ளாகும். 18

[ ஒப்பிலக்கியப் பயன் ]

730. இனமொழி இடத்தான் வேறுபட் டியங்கினும்
மனவழி மாந்தர் உணர்வும் சுவையும்

வேட்கையும் ஒன்றுயட் டிலங்கும் இயல்பையும்
சுவைக்கும் முறையினும் வேட்கைவெளிப் படுத்தும்
வழக்கினும் நோக்கினும் வேறுபடு நிலையையும்
கண்டுஅதற் குரிய காரணம் தெரிதலும்
காலம் சூழ்நிலை அரசாட்சி சமயம்
கல்விநா கரிகம் வேற்றுமைப் படினும்
வேறு படாதபல் குணமும் உணர்வும்
எவைஎனக் கண்டுஅதற்கு ஏதுவை யறிதலும்
இடநிலைச் சிறப்பு காலத்தின் வலிமை
இனப்பண் பாடவற் றியல்பினைத் தேர்தலும்
மனித வளத்தினை ஒற்றுமைப் பண்பினை
வளர்ப்பதற் குரிய வாய்ப்பினைக் காணலும்
இனமொழிக் கலப்பான் அவ்வவர் இலக்கியம்
எய்திய தாக்கமும் ஆக்கமும் இழிவும்
மெய்யுறத் தெரிதலும் உய்வுநெறி ஆய்தலும்
மானிட உளவியல் சிந்தனைப் போக்கு
கற்பனை மாண்பிவற்று வன்மை மென்மையை
கணித்துக் காணலும் கலப்பினும் அவரவர்
தனித்தன் மைபுல னாதலை அறிதலும்
இறவாப் படைப்பிற்கு ஏதுநன் குணர்தலும்
அன்ன பிறவும் ஒப்பிலக் கியத்தின்
மன்னிய பயனெனப் பன்னுவர் புலவோர். 14

## 24. ஒழிபியல்

### [ படைப்பாசிரியன் பொது இலக்கணம் ]

781. உலகம் உவப்ப உள்ளொளி பெருக்கி
வலம்நனி பயக்கும் வாழும் இலக்கியம்
படைப்போ ரிலக்கணம் பாங்குற நோக்கின்
படைக்கும் மொழியின் பழமையும் வளர்ச்சியும்
இடையிடை நேர்ந்த ஏற்ற இறக்கமும்
எழுத்தொலி அமைவும் புணர்ச்சித் திரிபும்
சொற்பிறப் பியல்பும் ஆக்கமும் அவற்றின்
உறவும் கிளையும் நிறைவும் நெகிழ்வும்
ஆற்றலும் அழகும் ஏற்றமும் தெரியும்
மொழியியல் அறிவும் முந்தைய பிந்தைய
இலக்கணக் கோளும் தொகைதொடர் மொழிகளின்
வெளிப்படை குறிப்பெனும் பொருள்பொதி நிலையும்

முதுமொழி மரபுத் தொடர்மொழி யறிவும்
பொதுமொழிப் புணர்ச்சியும் புதுமொழித்தாக்கமும்
படைக்கும் இலக்கியத் தேவைக் கேற்பப்
பன்மொழி யறிவும் பல்கலை உணர்வும்
இயற்பியல் அறிவும் வரலாற்றுத் தெரிவும்
மானுட மரபின் இயல்பும் இயக்கமும்
உளவியல் நுட்பமும் அளவிய லமைதியும்
அயரா உழைப்பும் தளராச் சிந்தையும்
அறநெறி நோக்கும் அறிவியற் பார்வையும்
படைப்பினில் ஆர்வமும் கொடைமலி நெஞ்சமும்
படைக்கப் புகுந்துறை படிந்து தெளிந்தோர்
படைப்பினில் ஆழ்ந்த பயிற்சியும் ஆய்வும்
மன்பதை யன்பும் மானுட நேயமும்
அழுக்கா றச்சம் பேரவா இன்மையும்
ஒப்புர வாண்மையும் உலகியல் தெளிவும்
செப்புதல் வன்மையும் செம்மையும் தகவும்
அவ்வகை பிறவும் செவ்விதின் பொருந்திப்
பொலிவுறல் அவர்க்காம் பொதுவியல் பென்ப. 1

## சிறப்பியல்பு

### [ நுண்கலை இலக்கிய ஆசிரியன் ]

782. எப்பொருள் பற்றிய இலக்கியம் அப்பொருள்
பற்றிய முன்னைய இன்றைய வரலாறு
எச்சமின் றறிதலும் எழுத்தியல் முதலா
இலக்கணத் தேர்ச்சியும் இலக்கிய நுகர்ச்சியும்
அத்துறை வன்மையும் உடையனாய் சுவையணி
உத்தியொடு பொருந்தப் பாகுபட வகுத்து
முறைநிறுத் தீரைங் குற்றந் தவிர்த்துப்
பயில்வோர் அமிழ்தெனப் பருகும் வண்ணம்
நிலைபெற வழங்குதல் நுண்கலை இலக்கியம்
படைப்போற் குரிய சிறப்பியல் பென்ப.

### [ நல்லிசைப் புலமையோன் (கவிஞன்) ]

783. மன்னுயிர் மக்கள் பழக்க வழக்கம்
வாழ்நிலை ஏற்ற இறக்கத் தியற்கையும்
அரசியல் பண்பா டினப்பிரிவு இறைமைக்
கோட்பா டின்னன வாகிய செயற்கையும்
புல்முதல் வான்ஈ றாகிய இயற்கைப்

பொருள்களின் இயக்கம் எழில்பண் புருவத்து
இயல்பும் அவ்வப் பொருள்களின் வேட்கையும்
ஆக்கமும் அழிவும் அன்னவை பிறவும்
உள்ளவா றுணரும் தெள்ளிய அறிவும்
உயர்திணை அஃறிணைப் பொருள்களின் அமைவும்
அவற்றை அவற்றொடும் பிறவற்றி னோடும்
வினைபயன் மெய்யுரு பிறப்பெனும் வகையான்
ஒப்பிட்டு நோக்கி ஒற்றுமை வேற்றுமை
உயர்வு தாழ்விவற்றை உணர்ச்சியொடு தேர்தலும்
பொருள்தொறும் பொதிந்துள நலந்தீங் கின்பத்
துன்ப நேர்ச்சியைச் சுருக்கியும் பெருக்கியும்
கண்டனு பவிக்கும் கற்பனைத் திறனும்
தொட்டதும் அறிவினைத் தட்டி எழுப்பும்
மெய்ப்பாட்டுணர்ச்சியும் மெய்ப்பொருள் நாட்டமும்
அறநெறி நீதியில் அசையாப் பற்றும்
கொடுஞ்செயல் காணின் கடுஞ்சினங் கோடலும்
அருஞ்செயல் காணின் பெருங்களிப் புறுதலும்
மன்னிய உணர்விடைத் தன்னை மறத்தலும்
அச்சமில் நோக்கும் எச்சமில் கருணையும்
அவலக் கவலை அழுக்கா றின்மையும்
குழந்தை உள்ளமும் கோதையர் சாயலும்
வீறுகொள் நெஞ்சமும் சீரிய கொள்கையும்
தாய்மொழிப் பற்றும் தன்னலம் உவர்த்தலும்
இன்னிசை யறிவும் பன்னுங் கவிதையான்
உன்னியது விளையுமெனும் ஊக்கமும் உறுதியும்
எண்ணிய சொற்களை ஏவல்கொள் வன்மையும்
அலையெனப் பெருகி அருவியாய்ச் சொரியும்
ஆற்றலும் கருத்தில் ஊற்றெழும் மாண்பும்
துளக்கமில் கவிஞனது இலக்கணம் என்ப.

### [ சிறுகதை — புதின ஆசிரியன் ]

784. நிகழ்வெதிர் காலப் பயன்களை நோக்கிக்
கதைக்காம் கருவினைத் தேர்தலும் கருவிற்கு
அளிக்கும் உருவினைப் பற்பலகோ ணத்தும்
ஒளிபெற நோக்கலும் உள்ளுறுத் தமைக்கும்
குறிக்கோள் நிகழிடம் காலம் சூழ்நிலை
பாத்திரம் இவற்றை வகுத்துவரை யறுத்தலும்
சொன்முறை மொழிநடை பற்றிய அளவையும்
எடுப்பும் பின்னலும் தொடுப்பும் திருப்பமும்

உச்சமும் முடிப்பும் உணர்வொடு நிலைபெறும்
உத்தியான் ஒட்பமொடு திட்டமிட்டியற்றலும்
தரப்பெறும் வாசகர் தகவுநன் கறிதலும்
பொறுப்பொடு படைத்தலும் சிறுகதை புதின
ஆசான் மார்க்கினி தமைவுறல் சிறப்பே.

[ நாடகநூலாசிரியன் ]

785. பிறர்கதை தம்படைப் பெக்கரு வாயினும்
அவற்றுறை நாடகக் கூறறி தெளிவும்
அங்கம் களம் நிகழ் காட்சி வகையான்
பங்குறு நிகழ்ச்சிகள் இரண்டு முதலிருபான்
நாழிகைப் பொழுதினுள் படித்தோ பார்த்தோ
முடிக்கும் வகையில் தொடுக்குந் திறனும்
கதைநிகழ் காலம் இடம்புறச் சூழ்நிலை
அகவிழி யானும் புறவிழி யானும்
மிகைகுறை யின்றிக் கண்டுகொள் திறனும்
காட்சியை நிரலே சுவைமிகுந் தேறப்
பூட்கை யகலாது பொலிவுற அமைத்தலும்
நாடக மாந்தர் பண்புந் தொழிலும்
நோக்கும் வாக்கும் நுணுகித் தேர்தலும்
காட்சிப் பின்னணி மாட்சிநன் கறிதலும்
அவ்வத் துறையினர் அனுபவம் தெளிதலும்
பல்வகை மாந்தர் நடையுடை தோற்றம்
விழைவு மொழிவழக் காயவை பற்றிய
நிரம்பிய அறிவும் இசைக்கலை நுணுக்கமும்
ஒன்பான் சுவைக்கமை உணர்வவற் றிற்கு
உரியபல்செயல்கள் உறுபொருள் பற்றித்
தோய்ந்த நல்லறிவும் வாய்ந்திடல் நாடக
இலக்கிய ஆசிரியற் காம்சிறப் பியல்பே.

[ இலக்கண நூலாசிரியன் சிறப்பியல்பு ]

786. உள்ளுணர் வுந்த ஓசை ஒலி இசையான்
எழுமொலி எழுத்தின் பிறப்புநிலை அமைப்பும்
அவற்றான் விளைவுறும் மொழிநிலை ஆக்கமும்
சொற்கும் பொருட்குமுள தொடர்பும் சொற்கள்
தொகை, தொடராக நடைபெறும் முறைமையும்
வெளிப்படை குறிப்பெனும் சொற்பொரு ளமைவும்
இருவகை வழக்கினும் சொல்லின் வடிவம்
திகழும் நிலையும் திசைவழக் காக்கமும்

அயல்மொழிக் கலப்பும் தாக்கமும் பயிலும்
பல்வகை இலக்கியப் பாங்கும் அம்மொழியின்
முதல்வழி சார்பெதிர் நூல்நெறிப் புலமையும்
பிறமொழி இலக்கணப் பெற்றியும் ஓர்ந்து
குறைவறத் தேர்தலும் புதியதொரு நூல்செயக்
காரண மாக இருவகை வழக்கினும்
இலக்கிய வகையினும் நேர்ந்துள வற்றை
நுண்ணிதின் நோக்கித் திண்ணிதின் தொகுத்தலும்
பன்னூற் பயிற்சியும் அளவை நூலறிவும்
கவிதைச் சிந்தையும் காவியப் புலமையும்
இசைநா டகத்துறை இலக்கண அறிவும்
சுவையணி தேர்ச்சியும் பல்கலை நோக்கும்
நவையற நிறைதலும் நடுவுநின் றாய்தலும்
ஈரைந் தழகும் எழுவகை மதமும்
எண்ணான் குத்தியும் இலங்கும் முறைமையான்
பல்வகைச் சூத்திர யாப்பமைந் தொளிரச்
செய்முறைத் தெளிவும் செவ்விய இலக்கண
நூல்வரை யாசாற் கியல்பென நுவல்ப.

**[ இலக்கியம் படைப்போர்க்கும் சுவைப்போர்க்கும் உரிய சிறப்புக் கருவியாகிய நியாயம் ]**

787. பல்வகைக் குறிப்பினும் பழமொழி வகையினும்
இல்பொரு ளுவமம் இலேசம் நுட்பம்
தற்குறிப் பேற்றம் ஒட்டுமுதலாய
அணிநிலை வகையினும் ஏதுவின்முடித்தல்
தன்னினம் முடித்தல் ஒப்பின் முடித்தல்
உய்த்துக் கொண்டுணர்தல் எஞ்சிய பொருளினும்
எய்தக் கூறல்எனும் உத்தி வகையினும்
பயின்று பழகிய பழங்கதைப் பாங்கினும்
நயனுற அமைந்து நூலுரை உத்தியின்
ஒருகூறாக இருவகை வழக்கினும்
நுட்பமுறு கருத்தினை உணர்த்தவும் உணரவும்
விதிமுறை போல விளங்கும் பல்வகைக்
கிளவிகள் நியாயமெனக் கிளக்கப் படுமே.

**[ அதன் வகை ]**

788. அகர முதலாதல் புகைவழி கூறல்
களிறு மறி கரும்பு பருப்பொரு ளருந்ததி
களிறுதெரி குருடர் பனம்பழக் காக்கை

வண்டு சுழல் எழுத்து ஆகாயப்பூ
இடைகழி விளக்கு இடையன் தறிகிளை
ஏட்டுச் சுரைக்காய் இரைதேர் கொக்கு
ஈச்சுவை உயிர்மெய் எழுத்து நியாயம்
ஊமையன் கனவு எண்ணெய் விளக்கு
ஓநாய் செம்மறி எறும்பின் போக்கு
ஒட்டக முட்செடி ஒருபானை சோற்றிற்கு
ஒன்றறி முடிபு கதிர்படு துரும்பு
கட்டி பூசிக் கடுமருந் தூட்டல்
கரும்புணல் கைக்கரி சுந்தோப சுந்தர்
கானக நிலவொடு களர்நில மழையே
கணாப்புலி தேர்பரி கிழவன் கைக்கோல்
குருடன் கைக்கிளி கூத்தர்பல் வேடம்
அடிபந்து பாம்புரி பலகுரீஇக் கொருகல்
மாலை நிழலே முதலிலாத் தனிசு
வரிசை யறிதல் மஞ்ஞையின் ஆடல்
காக்கைக் கண்மணி கதம்ப முகுளம்
வீசிதரங்கம் என்பவும் பிறவுமா
எண்ணில வாக இலங்குமன் அதுவே.

[ புறனடை ]

789. தொல்லோர் மரபிற் சொல்லிய இலக்கியப்
புனைவொடு புக்கபுத் திலக்கியப் படைப்பின்
நெறிமுறை மொழிந்தவற் றுரையாத வற்றையும்
நிறைவுற நோக்கி உணர்த்தலும் உணர்தலும்
தமிழறி புலவோர் சால்பா கும்மே

**தென்றல் இலக்கியப்படலம் முற்றியது.**

---



இவரைப்பற்றி ........

இவர் தஞ்சாவூர் கரந்தையில் விசயம்பாள் சந்திரசேகரனார்க்கு 1924-இல் இரண்டாவது மகனாகப் பிறந்தார். கரந்தைப் புலவர் கல்லூரியில் பயின்று 1950இல் வித்துவான் பட்டயம் பெற்று அக்கல்லூரியில் பேராசிரியராயும் துணைமுதல்வராயும் பணியாற்றி 1982 இல் ஓய்வுபெற்றுப் பின்னர்த் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சில ஆண்டுகள் பணிபுரிந்தார். இப்பொழுது கரந்தைத் தமிழ்ச்சங்கத் தமிழ்ப்பொழில் இதழ் பதிப்பாசிரியராயும் தஞ்சைத் தமிழ்ச் சங்கத்துணைத் தலைவராயும் தொண்டாற்றி வருகிறார்.

தஞ்சைத் தொல்காப்பியர் கழகத் தலைவராகப் பல்லாண்டுகள் இருந்து சிறந்த இலக்கியப் பணிபுரிந்தவர். கரத்தைக்கோவை, புலவருள்ளம், ஆதிமந்தி முதலிய இலக்கியங்களும், கவிதை நாடகங்களுட், இலக்கண இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளும்-கருத்தரங்கக் கட்டுரைகளும் வரைந்துள்ளார். தமிழ்ப்பல்கலைக் கழக இசைத்துறை வெளியீடான புதிய ராகங்கள் என்னும் நூலுக்குச் சாகித்தியமும் இசைத்துறைக் கருத்தரங்கக் கட்டுரைகளும் வரைந்துள்ளார். தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திற்காக இலக்கியநூல்கள் சில பதிப்பித்துள்ளார். வானொலி நாடகங்கள் எழுதியும் நடித்தும் நாடகத் தமிழுக்குத் தொண்டாற்றியுள்ளார். நூற்றுக்கு மேற்பட்ட கவியரங்கங்களில் தலைமையேற்றும் பங்குகொண்டும் ஆயிரக்கணக்கான கவிதைகள் எழுதிக் கவிதைப்பணி புரிந்துள்ளார். அண்மையில் **தொல்காப்பியம் மூன்றதிகாரங்களுக்கும் அறிவியல் நோக்கொடு சிறந்த ஆராய்ச்சிக் காண்டிகையுரை எழுதி வெளிட்டுள்ளார்.** சிறந்த இலக்கிய மன்றங்கள், பாவலரேறு, கவிஞர்கோ. செஞ்சொற்கவிவலவன், தொல்காப்பியப்பேரறிஞர், தொல்காப்பியப்பேரொளி முதலிய பட்டங்கள் தந்து பாராட்டியுள்ளன. தமிழக அரசு பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிந்துள்ளது. இவரது நூல்கள் சென்னை, அண்ணாமலை, மதுரை, பாரதிதாசன் பல்கலைக்கழக இளங்கலை, முதுகலைப் பட்டப்படிப்பிற்குப் பாடநூலாக அமைந்துள்ளன. இப்பொழுது வழக்கும் செய்யுளும் நாடி முந்துநூல்கண்டு முறைப்படுத்தித் தொல்காப்பியத்திற்குப்பின் மூன்று அதிகாரங்களுக்கும் உரிய வழிநூலாகவும் இசை, நாடகத்தமிழின் இயற்பகுதிக்கும் சிறுகதை முதலாய புத்திலக்கியங்களுக்கும் உரியநெறி விளக்கந் தரும் முதல் நூலாகவும் இத்தென்னூலை வழங்குகின்றார்,

அ. கி. மூர்த்தி